


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

---

**Monday, the 3rd November 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—OBITUARY REFERENCE TO SAMI VENKATACHELLAM CHETTY, EX-M.L.C.

MR. SPEAKER : பழைய காலத்துச் சட்டசபை அங்கத்தினராகிய கனம் சாமி வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் நேற்று மாலை இறந்து போனார் என்ற செய்தியை உங்களுக்கு வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

அந்தக் காலத்தில் இரண்டு சபைகள் இருக்கவில்லை. ஒரே சபைதான் இருந்தது. அதற்கு லெஜிஸ்லேடிவ் கௌன்ஸில் என்று பெயர். அதற்குப் பிறகு தான் இரண்டு சபைகள் ஏற்பட்டன.

அவருடைய மறைவுக்கு அனுதாபத்தையும் மரியாதையையும் தெரிவிக்கும் வகையில் நீங்கள் எல்லோரும் ஒரு நிமிஷ நேரம் எழுந்து நிற்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

(அங்கத்தினர்கள் ஒரு நிமிஷ நேரம் மௌனமாக நின்று அனுதாபத்தையும் மரியாதையையும் தெரிவித்துக்கொண்டனர்.)

## II.—QUESTIONS AND ANSWERS.

MR. SPEAKER : கனம் நிதி அமைச்சர் அவர்கள் சபைக்கு வராததினால் ஒத்திப்போடப்பட்ட அவருடைய கேள்விகள் இன்றைக்கு முதலில் எடுத்துக்கொள்ளப்படும்.

*Non-payment of travelling allowance to certain members of Teachers Selection Committee.*

* 764 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்ற ஆண்டு ஜூன்-ஜூலை மாதங்களில் ஆசிரியர் தேர்வுக் கமிட்டிக்கு நியமிக்கப்பட்ட அங்கத்தினர்களில் எத்தனை பேருக்கு இன்னும் பிரயாணப்படி கொடுக்கவில்லை ?

(ஆ) தாமதத்திற்கு காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No travelling allowance has been paid so far for the following two non-official members appointed to Selection Committees for Basic Training Schools :—

(i) Sri T. K. Subramania Pillai, Member, Selection Committee, for Tirunelveli Central district.

(ii) Sri N. S. Ramalingam, M.L.A., Member, Selections Committee, for Tanjore West district.

(*b*) Sri T. K. Subramania Pillai, being a local member, is not eligible for travelling allowance according to the rules in force. The case of Sri N. S. Ramalingam is under correspondence between the District Educational Officer, West Tanjore, and the Divisional Inspector of Schools, Madurai.

*Selection Committees for Educational Institutions.*

* 765 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether any Selection Committee has been constituted for the purpose of selecting students for the following institutions for the year 1958–59 :—

(1) Medical Colleges, (2) College of Integrated Medicines, (3) Engineering Colleges, (4) Polytechnic Institutions, (5) Industrial Training Schools, (6) Teachers' Colleges, (7) Teachers' Training Schools, (8) Government Arts Colleges and (9) Government Technical Institutions ;

(*b*) if so, who are the members of the respective selection committee; and

(*c*) on what basis the selection of such members has been made ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) *to* (*c*) A statement [a] is placed on the table of the House.

SRI K. VINAYAKAM : From the statement placed on the table of the House it is evident that for selection committees for teachers' training schools in the district, non-officials like the members of the Assembly have been included. May I know, Sir, why no such inclusion was made so far as the committee constituted for the Madras City is concerned from among the members of the Legislative Assembly living in the City, to select candidates for teachers' training schools ?

THE HON. SRI C. SUBRAMANIAM : In places where Legislative Assembly members interested in basic education were available they have been appointed on the committees. Perhaps non-officials were available there and they have been appointed. There is no rule that M.L.As. alone should be selected or non-M.L.As. should be appointed on the committees.

SRI A. VEDARATHNAM : இந்தக் கல்லூரிகளிலும் பயிற்சிப் பள்ளிகளிலும் சேர விரும்பும் மாணவர்கள், அதிலும் குறிப்பாக போதிய தகுதி இல்லாதவர்கள், அளவு கடந்த ப்ரெஷர், சிபார்சுகளைக் கொண்டு வந்து, தகுதியுள்ள மாணவர்களைத் தேர்ந்தெடுக்க முடியாதபடி செய்கிறார்களே, அதைத் தடுக்க அரசாங்கம் ஏதேனும் முயற்சி எடுத்துக்கொள்ளுமா ? அப்படியானால், அதன் விவரம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்குத் தடுப்பு நடவடிக்கைகளை தேர்தல் கமிட்டிகளில் இருப்பவர்களே எடுத்துக் கொள்ளலாம். அவர்களுக்கு எந்தச் சிபார்சுகள் வந்தாலும்கூட, அவைகளைக் கவனிக்காமல் நல்ல முறையிலே தேர்ந்தெடுப்பதுதான் நல்லது. இருந்தாலும் நிறைய சிபார்சு கொண்டுவரும்போது, நம்மையும் அறியாமல் சில சமயங்களிலே அந்த சிபார்சுக்கு இடம் கொடுத்துவிடலாம். சிபார்சு கொண்டுவருபவரைத் தேர்ந்தெடுக்காமல் அடித்துவிடவேண்டும் என்ற ஒரு விதி செய்துவிட்டால் ஒருவேளை இந்த சிபார்சுகள் திற்குமோ என்னவோ அதைப்பற்றி யோசித்துப் பார்க்கவேண்டும்.

---

[a] Printed as Appendix I on pages 463-468 infra.

3rd November 1958]

SRI K. VINAYAKAM : In answer to clause (8) it is stated that candidates were selected on the basis of suitability. So far as the City of Madras is concerned where a non-basic training school is situated, does the Hon. Minister think that the Members elected from the City of Madras are unsuitable to serve on this committee?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir. Persons in the city are very busy persons. Evidently the Director of Public Instruction did not want to trouble them on small matters like these. (Laughter.)

MR. SPEAKER : We have got to-day 46 questions to be answered. I would request the hon. Member to co-operate with me in completing the list.

*Aided Elementary Schools in Coimbatore district*

* 770 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லாவிலே கவர்ன்மெண்டு உதவி பெற்று தனிப் பட்டவர்கள் நிர்வாகத்தின் கீழ் நடைபெற்றுவரும் ஆரம்பப் பள்ளிகள் எத்தனை ?

(ஆ) 1950-ம் வருஷத்துக்குப் பிறகு மூடப்பட்ட அத்தகைய பள்ளிக் கூடங்கள் எத்தனை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) 378.

(b) 33.

SRI P. G. MANICKAM : மேற்கொண்டு பள்ளிக்கூடங்கள் மூடப்பட்ட சமயத்திலே அவர்கள் கவர்ன்மெண்டாருக்குத் தெரிவித்தார் களா ? அப்படியில்லையென்றால், அந்த இடங்களில் வேறு பள்ளிக் கூடங்கள் திறப்பதற்கு ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சரியாக நடக்காத பள்ளிக் கூடங்கள் மூடப்பட்டுவிட்டன. எங்கெங்கு அவசியமோ அங்கெல்லாம் புதியதாக பள்ளிக்கூடங்கள் திறப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுகிறது. நான் முன்பு பதில் சொன்னதுபோல், 500 ஜனத்தொகை இருக்கும் எல்லாக் கிராமங்களுக்கும் இப்பொழுது பள்ளிக்கூடங்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் ஜனத்தொகை 300 லிருந்து 400 இருக் கக்கூடிய இடங்களிலும் பள்ளிக்கூடம் ஏற்பாடு செய்வதற்கு முயற்சி நடந்துகொண்டிருக்கிறது.

*Regional Language Schools*

* 775 Q.—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state the number of schools in the State imparting education in the various Regional languages?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement * is placed on the table of the House.

---

* Printed as Appendix II on page 469 infra.

*Post-Basic Schools.*

*781 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த மாநிலத்தில் மேலும் போஸ்ட்-பேசிக் பள்ளிகள் (உயர்நிலை ஆதாரப் பள்ளிகள்) ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா ?

(ஆ) அப்படியானால் எத்தனை, எங்கெங்கே ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The opening of five Post-Basic Schools in the following places is under correspondence with the Government of India :—

(1) Orathanad, Tanjore district.

(2) Tirur, Chingleput district.

(3) Gangavalli, Salem district.

(4) Perivallikottai, Tirunelveli district.

(5) Tirumullavasal, Tanjore district.

SRI A. VEDARATHNAM : காம்பாக்ட் ஏரியாவிலே உள்ள உயர்நிலைப்பள்ளிகளைப் போஸ்ட்-பேஸிக் பள்ளிகளாக மாற்றுவதற்கு உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா ? இது சம்பந்தமாக இந்த ஆதாரக் கல்வி ஆலோசனைக் கமிட்டி செய்யும் சிபார்சுகள் அரசாங்கத்தால் அங்கீகரிக்கப் பட்டனவா ? அப்படியானால் அது எப்பொழுது அமுலுக்கு வரும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கமிட்டி செய்த சிபார்சுகளைப் பரிசீலனை செய்து, அதுபற்றி உத்தரவு வெளியாகவில்லை. இந்த ஐந்து பள்ளிக்கூடங்களும் இப்பொழுது பயிற்சிப் பள்ளிக்கூடங்களுடனே இணைக்கப்பட்டிருக்கின்றன. அதை அனுசரித்து இவைகளைப் போஸ்ட்-பேஸிக்காகச் செய்யலாம் என்ற உத்தேசத்தின்பேரிலே இந்தியா கவர்ன்மெண்டுடன் இப்பொழுது கடிதப் போக்குவரத்து நடந்துகொண்டிருக்கிறது,

*Professional Colleges*

*785 *Q.*—SRI N. V. CHOCKALINGAM (on behalf of Sri T. T. Daniel) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the total number of seats allotted to each district for admission to Professional Colleges; and

(*b*) the basis on which the seats are allotted to each district?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement* is placed on the table of the House.

SRI A. GOVINDASAMY : ஒவ்வொரு மாவட்டத்திற்கும் இத்தனை இடங்கள் என்று விதிக்கும்போது, பின் தங்கிய மாவட்டங்களில் பிறந்ததாக தவறான சர்ட்டிபிகேட்டுகள் கொடுத்து சில இடங்களிலே இடம் பிடித்துக் கொள்கிறார்கள் என்ற தகவல் அரசாங்கத்திற்கு வந்திருக்கிறதா ? அப்படியானால், அதைத் தடுப்பதற்கு என்ன முயற்சி எடுக்கப் படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அம்மாதிரி சில இடங்களிலே நடந்திருக்கலாம், என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. இதிலே நாம் கொஞ்சம் கவனமாக நடந்துகொள்வதற்குப் பழகும் வரையிலும் இதுபோன்ற தவறுதல்கள் நடந்துகொண்டுதான் இருக்கும். எவ்வளவு விதிகள் செய்தாலும்கூட கடைசியில் விதிகளின் நோக்கம் நிறைவேறுவது மக்களுடைய நாணயத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

* Printed as Appendix III on pages 469-470 infra.

3rd November 1958]

SRI A. A. RASHEED : Will the Government consider the backwardness of the districts along with the population for allotting seats to the district?

THE HON. SRI C. SUBRAMANIAM : Does the hon. Member suggest that because they are backward lesser number of seats should be allotted as there won't be sufficient number of students with the required merit and qualification? If that is the suggestion, I am prepared to consider that.

SRI S. LAZAR : "1951-ம் வருஷத்திய ஸென்ஸஸ்படி" என்று பதிலில் காணப்படுகிறது. 1957–58-க்குத் தக்கவாறு விதிகளை மாற்றி யமைக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : 1961-இலே ஜனசங்கியை எடுக்கப்போகிறார்கள். அப்பொழுது 1961-ம் வருஷத்திய ஜன சங்கியை வைத்துக்கொண்டு செய்யப்படும்.

*Podu Nala Seva Sangam*

* 791 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முத லமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) திருச்சிராப்பள்ளி மல்லிகைபுரம் பொதுநல சேவா சங்கத்தின் 14–1–1958 தேதி நடந்த 3-வது ஆண்டு விழாவில் நிறைவேற்றப்பட்ட கோரிக்கைப் பட்டியல் அரசாங்கத்தாருக்கு கிடைத்ததா ?

(ஆ) அப்படியானால், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?

(இ) இல்லையென்றால், என் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(a) & (b) A statement [a] is placed on the table of the House.

SRI S. LAZAR : இதிலே "இம்ப்ரூவ்மெண்ட்ஸ்" என்று சொல் லும்போது

"In August 1958, the Government have sanctioned the investigation of a scheme of improvements to the Municipal Head Water Works, Tiruchirappalli." என்று கண்டிருக்கிறது. இதைப்பொறுத்த வரைக்கும் என்ன ஸ்கீம் இப்பொழுது இன்வெஸ்டிகேஷனிலே இருக்கிறது ? எந்த அளவுக்கு இப்பொழுது இருக்கும் தண்ணீர் நிலைமையை அதிகப்படுத்தும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have the details. If the hon. Member is interested he may put a separate question.

*Leasing of palm trees.*

* 792 Q.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether any representation, dated 18th November 1957, was received from the President, Krishnapuram Jaggery Manufacturing Co-operative Society, Krishnapuram, by the Director of

---

[a] Printed as Appendix IV on pagess 471-472 infra.

[3rd November 1958

Industries and Commerce regarding the delay in leasing out the palm trees under the control of the Revenue Department by the Estate Manager, Virudhunagar; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) A copy of the petition, dated 18th November 1957, from the Society addressed to the Collector of Ramanathapuram was received by the Director of Industries and Commerce.

(*b*) The lease of the trees in favour of the Society was recommended to the Collector, who was the deciding authority.

SRI V. K. KOTHANDARAMAN : மதுவிலக்குத் திட்டத்தின் காரணமாக, ஏற்கனவே கஷ்டப்பட்டுக்கொண்டு வரக்கூடிய மரமேறித் தொழிலாளர்களை மேலும் கஷ்டப்படுத்தாத நிலைமையில், அவர்கள் நல் வாழ்க்கை நடத்துவதற்காக வேண்டி, இதுபோன்ற ரெவினியூ புறம் போக்கு பனைமரங்களை போதுமான அளவுகொடுத்து, அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை முன்னேற்றுவதற்குச் சர்க்கார் தீவிர முயற்சி செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது பொதுவான கேள்வி. எங்கெங்கே இதைப் பயன்படுத்திக்கொள்ள முன் வருகிறார்களோ அவர்களுக்கு ஆக்ஷன் வைக்காமல் இம்மாதிரி கொடுப் பதற்கு சலுகை காட்டப்படுகிறது.

*Prohibition cases*

* 793 *Q*.—SRI S. M. ANNAMALAI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) how many Prohibition cases have been filed during 1957–58 in Kadaladi and Santhavasal Police Stations;

(*b*) how many cases have been dismissed; and

(*c*) how many cases are pending?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) During 1957-58 250 cases were filed by Kadaladi Police Station and 204 cases were filed by Santhavasal Police Station.

(*b*) Four cases of Kadaladi Police Station and 10 cases of Santhavasal Police Station were dismissed.

(*c*) The number of pending cases are two of Kadaladi Police and nil in respect of Santhavasal Police Station.

SRI S. M. ANNAMALAI : இந்த இரண்டு போலீஸ் ஸ்டேஷன் களும் ஜவ்வாது மலையில் இருக்கின்றன. அங்குள்ள போலீஸ்காரர்கள் மலைக்குச் சென்று அங்கேயுள்ள பெண்களை இழுத்து வந்து பல துன்பங் களைக் கொடுத்தார்கள் என்று சர்க்காருக்கு மகஜர்கள் கொடுக்கப்பட்டிருக் கிறது. இம்மாதிரி அவர்கள் நடந்துகொள்வதைத் தடுப்பதற்குச் சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புகார்கள் வந்தால் அவை விசாரிக்கப்பட்டு நடவடிக்கை எடுக்கப்படுகிறது. சில புகார் களுக்கு ஆதாரம் இல்லையென்று சொல்லப்படுகிறது. பெண்களாக இருந் தாலும் குற்றம் செய்தால் தண்டனை வழங்கத்தான்படும்.

3rd November 1958]

SRI M. C. MUTHUKUMARASWAMY : மதுவிலக்குக் குற்றங்களை அதிகமாகக் கண்டுபிடிப்பதற்குப் போலீஸ்காரர்களுக்கு ஜீப் கொடுத்து உதவி செய்ய சர்க்கார் முன்வருமா என்று அறிய விரும்புறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போலீஸ்காரர்களுக்கு எவ்வளவு வசதி அளிக்கப்படவேண்டுமோ அவ்வளவும் அளிக்கப்பட்டிருக்கின்றது. எல்லோருக்கும் ஜீப் கொடுப்பது என்பது முடியாத காரியம்.

SRI P. S. SANTHANAM : மதுவிலக்குக் குற்றம் புரிந்தவர்கள் என்று போலீசாரால் வழக்கு தொடரப்பட்டவர்களை கோர்ட்டார் குற்றமற்றவர்கள் என்று விடுதலை செய்துவிட்டால் அந்த நபர்கள் போலீஸ்காரர்கள் மீது அனுவசியமாக தங்கள்பேரில் குற்றம் சாட்டியதற்கு நடவடிக்கை எடுக்க சர்க்கார் அனுமதிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நீதி பரிபாலன முறையே அவ்வாறு இருக்கிறது. போலீஸ்காரர்கள் குற்றம் சாட்டினால் குற்றம் செய்தவர்களா இல்லையா என்று விசாரித்து முடிவு கூறுவது நீதிபதிதான். ஆனால் சம்பந்தப்பட்டவர்கள் வேண்டுமானால் போலீசார் மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம்.

*Varnish*

MR. SPEAKER : The hon. Member, Sri K. Ramachandran, is absent.

The question and answer will be printed in the official proceedings.

* 794 *Q.*—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Home Minister be pleased to state—

(*a*) whether there is any scope for the manufacture of varnish in our State; and

(*b*) if so, the steps taken by the Government in that direction?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The Government are reluctant to encourage the manufacture and sale of alcoholic varnish since such varnish is rendered fit for consumption by ex-addicts.

*Changing the name of the Parayampattu village*

*795 *Q.*—SRI P. S. SANTHANAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) திருவண்ணமலை தாலூகாவில் பறையன்பட்டு என்று ஒரு கிராமத்தின் பெயர் இருப்பதால் அது ஒரு சாதியைக் குறிப்பது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) பறையன்பட்டு என்ற பெயரை மாற்றி சந்தானபுரம் என்ற பெயர் வைக்கும்படி சர்க்காருக்குத் தகவல் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) No Sir.

SRI P. S. SANTHANAM : தலைவர் அவர்களே, சில கிராமங்களின் பெயர்கள் சாதியைக் குறிக்கும் பெயர்களாக இருப்பது கேவலமாகக் கருதப்படுவதால் அந்தப் பெயர்களை மாற்றி அக்கிராமங்களின் தலைவர்களின் பெயரையே அவற்றிற்கு வைக்க அரசாங்கம் முன்வருமா ?

MR. SPEAKER : பதில் இல்லை என்று சொல்லிவிட்டார். வேறு ஏதாவது கேளுங்கள்.

[3rd November 1958

*Overspeeding of lorries on the roads*

*796 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

அதிவேகமாக ஓட்டிச்செல்லும் லாரிகளை அந்த ரோட்டில் பிரயாணஞ் செய்யும் கெஜட் பதிவு பெற்ற அதிகாரிகள் தணிக்கை செய்து கவர்ன்மெண்டுக்கு ரிப்போர்ட் செய்யவேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்ட பிறகு ஒவ்வொரு ஜில்லாவிலிருந்தும் எத்தனை கெஜட்டுப் பதிவு பெற்ற அதிகாரிகள் இவ்வாறு தணிக்கை செய்து கவர்ன்மெண்டுக்கு ரிப்போர்ட் அனுப்பியிருக்கிறார்கள் ?

THE HON. SRI V. RAMAIAH : The particulars (as on 1st August) are as below :—

| | District. | Number of gazetted officers who reported cases. | Number of cases reported. |
|---|---|---|---|
| 1 | Coimbatore .. .. | 7 | 29 |
| 2 | South Arcot .. .. | 7 | 11 |
| 3 | Tiruchirappalli .. .. | 2 | 5 |
| 4 | Tirunelveli .. .. | 4 | 15 |
| 5 | Madurai .. .. | 3 | 8 |
| 6 | Salem .. .. .. | 2 | 6 |
| 7 | Chingleput .. .. | 2 | 3 |
| 8 | Ramanathapuram .. | 1 | 1 |
| 9 | Kanyakumari .. .. | — | Nil. |
| 10 | The Nilgiris .. .. | — | Nil. |
| 11 | North Arcot .. .. | — | Nil. |
| 12 | Tanjore .. .. | — | Nil. |
| | Total .. | 28 | 78 |



SRI P. G. MANICKAM : மேற்கண்ட கேஸ்களில் சம்பந்தப்பட்டவர்களுக்கு என்ன தண்டனைகள் விதிக்கப்பட்டன ?

THE HON. SRI V. RAMAIAH : அந்த விவரம் என்னிடத்தில் இல்லை.

SRI K. B. S. MANI : லாரிகள் வேகத்தைத் தடுப்பதற்கு 40 மைல் தான் போகவேண்டுமென்றால் அதற்குமேல் போகாமல் தடுப்பதற்கு அந்த லாரிகளிலேயே மீட்டர்கள் வைப்பதற்குத் தனி ஏற்பாடுகள் செய்யப்படுமா ?

THE HON. SRI V. RAMAIAH : லாரிகளின் வேகத்தை 40 மைல்தான் போகவேண்டும், 30 மைல்தான் போகவேண்டும் என்று நிரந்தரமாகக் கண்ட்ரோல் செய்வதற்கு சர்க்கார் ஆசைப்படவில்லை. அப்படிச் செய்தால் இன்றைக்கு இருக்கக்கூடிய போக்குவரத்து வசதி ஸ்தம்பித்துவிடுமென்று கருதுவதால், இது போன்ற ஆலோசனையை ஏற்றுக் கொள்வதற்குத் தயாராக இல்லை. வேகமாகப் போகலாம் அதே நேரத்தில் கவனமாகப் போகவேண்டும். கவனமாகப் போகிறார்களா இல்லையா என்று கவனிப்பதற்காகத்தான் கெஜட் பதிவு உள்ள அதிகாரிகளைக் கொண்டு அங்கங்கே கவனித்துக்கொள்ள உத்திரவிட்டிருக்கிறோம்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Is the Hon. Minister aware that a few months ago while he was on his way to North Arcot, he caught hold of a vehicle which was overloaded. May I know what action has been taken in the matter?

THE HON. SRI V. RAMAIAH : The hon. the Leader of the Opposition has referred to a lorry but that incident related to a bus.

3rd November 1958]

Sri A. A. Rasheed : Is there any proposal to empower M.L.As. to report against lorry drivers when they exceed the speed limit?

The Hon. Sri V. Ramaiah : As I have stated, I have requested all Gazetted Officers to look into this matter but they have not yet taken full interest in the matter. Therefore, let me first find out whether I can speed up the matter as far as the Gazetted Officers are concerned, before I give effect to the suggestion of the hon. Member.

*Third-crop paddy cultivation*

* 797 *Q.*—Sri K. Sattanatha Karayalar : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the extent of the area under the third-crop paddy cultivation in the State;

(*b*) of this, the area in Tanjore district; and

(*c*) the areas that could be brought under third-crop paddy in the different districts of the State?

The Hon. Sri M. Bhaktavatsalam : (*a*) The total area under third-crop paddy in the Madras State during 1956–57, for which figures are available, was 1,31,314 acres.

(*b*) The area in Tanjore district was 41 acres in 1956–57. The area in 1957–58 is reported to be 6,516 acres.

(*c*) No estimate could be given as the area will depend on the availability of water in the reservoirs.

Sri K. Sattanatha Karayalar : கனம் சபாநாயகர் அவர்களே, சில இடங்களில் குறிப்பாக நெல்லை மாவட்டம் போன்ற இடங்களில் மூன்றாம் போக சாகுபடிக்குத் தண்ணீர் கொடுத்த காரணத்தினால், இரண்டாவது போக பயிர்கள் தண்ணீர் இல்லாமல் நாசமாகிவிட்டன என்பது சர்க்காருக்குத் தெரியுமா? இதைப்பற்றித் திட்டவட்டமான உத்தரவு ஏதாவது பிறப்பித்திருக்கிறார்களா ?

The Hon. Sri M. Bhaktavatsalam : அவ்வப்போது அவ்வாறு கவனித்து வேண்டிய உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது. இரண்டாம் போக பயிருக்கு தண்ணீர் போதுமானதாக சப்ளை செய்து மூன்றாம் போகத்திற்கு விடும்போது சில விவசாயிகள் அதைப் புரிந்து கொள்ளாமல் தவறுதலாகப் பிரசாரம் செய்கிறார்கள்.

Sri D. S. Authimoolam : திருநெல்வேலி ஜில்லாவில் தாம்பிரபரணி பாசனம் ஸ்ரீவைகுண்டம் பாசனத்தில் மூன்றாம் போக சாகுபடிக்கு தண்ணீர் சப்ளை செய்வதன் மூலம் மேலே உள்ள நிலங்களில் இரண்டாம் போக சாகுபடியே தடைபடுகிறது. இதுபற்றி அரசாங்கத்தாருக்குப் புகார்கள் வந்ததா ? மூன்றாம் போக சாகுபடிக்குத் தண்ணீர் சப்ளை செய்வதற்கில்லை என்று இன்ஜினீயர்கள் சொன்னாலும் political pressure-ஆல் இங்கிருந்து விடவேண்டுமென்று ஆர்டர் போடுவதாக அங்கே சொல்லப்பட்டு வருவது சர்க்கார் காதுக்கு எட்டி இருக்கிறதா ?

[3rd November 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த ராஜ்யத்தில் மொத்தம் லட்சத்து முப்பத்தோராயிம் ஏக்கர்தான 1956–57ல் மூன்றும் போகம் சாகுபடி செய்யப்பட்டிருப்பதாகக் காணப்பட்டிருக்கிறது. அதில் திருநெல்வேலி ஜில்லாவில் 2,500 ஏக்கர்தான் செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பிரச்சனை எழவில்லை.

SRI A. VEDARATHNAM : தஞ்சை ஜில்லாவில் மூன்றும் போக சாகுபடி எல்லா இடத்திலும் செய்யப்பட்டதா?. அதன் பயன் என்ன? திருப்திகரமாக இருந்தால் இந்த ஆண்டும் அவ்வாறு அனுமதி அளிக்கப் படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சை ஜில்லாவில் 1957–58–ல் 6,516 ஏக்கர்கள்தான் மூன்றும் போகம் சாகுபடி செய்யப்படுகிறது. இன்னும் அதிகம் செய்திருக்கலாம். சில விவசாயிகள் அந்த வசதியைப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. பயன்படுத்திக்கொண்ட விவசாயிகளுக்கு நல்ல பயன் ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு இருக்கும் தண்ணீர் நிலைமையை ஒட்டித்தான் மூன்றும் போக சாகுபடியை அனுமதிக்காலாமா, இல்லையா என்று தீர்மானிக்கப்படும்.

SRI M. C. MUTHUKUMARASWAMY : தஞ்சை ஜில்லாவில் எத்தனை பேர் மூன்றும் போகம் சாகுபடி செய்யத் தயாராய் இருக்கிறார்கள் என்கிற பட்டியலை தயார் செய்துகொண்டு தண்ணீர் விட்டார்களா ? பயன் படுத்திக்கொள்ளுபவர்கள் கொள்ளட்டும் என்று தண்ணீர் விட்டார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது சம்பந்தமாகக் கலெக்டர் ஒரு மகாநாட்டைக்கூட்டி எல்லா விவசாயிகளுக்கும் விளக்கிச் சொல்லி எவ்வளவு பேர் சாகுபடிசெய்ய வருவார்கள், எவ்வளவு தூரம் தண்ணீர் விட வேண்டும் என்பது தெரிந்தே தண்ணீர் விடப்பட்டது.

*Murder cases*

* 798 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58–ல் எத்தனை கொலைகள் சம்பந்தமாக போலீசில் எத்தனை கேஸ்கள் பதிவு செய்யப்பட்டன ?

(ஆ) எத்தனை குற்றப்பத்திரிகைகள் தாக்கல் செய்யப்பட்டன?

(இ) எத்தனை கேஸ்கள் தண்டனையில் முடிந்தன?

(ஈ) எத்தனை கேஸ்கள் நீதி மன்றத்தில் முடிவு பெறுமல் உள்ளன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 792.

(*b*) 667.

(*c*) 339.

(*d*) 149.

SRI S. M. ANNAMALAI : இவற்றில் கட்சித் தகராறுகளினால் ஏற்பட்ட கொலைகள் எவ்வளவு? காதல் தகராறுகளினால் ஏற்பட்ட கொலைகள் எவ்வளவு என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI M. BHAKTHAVATSALAM : எந்தெந்தக் காரணத்தினால் கொலை நடக்கிறது என்று முன்பு கேள்விக்குத் தெரிவித்திருக்கிறேன். இப்போது அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை.

*Wool*

* 799 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) மாடுகள், ஆடுகளிலிருந்து ரோமங்கள் எடுக்கும் தொழிலானது எந்தெந்த ஜில்லாக்களிலே நடைபெற்று வருகின்றன?

3rd November 1958]

(ஆ) 1957, 1958–ம் வருஷங்களில் எத்தனை ரூபாய்கள் மதிப்புள்ள ரோமங்கள் எந்தெந்த தேசங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன?

(இ) சேலம், திருச்சிராப்பள்ளி, நீலகிரி ஜில்லாக்களிலே எந்தெந்த இடங்களில் கம்பளி நெசவு தொழில் பயிற்சிகள் (Cumbly weaving training cum Demonstration Centre) ஏற்பட்டிருக்கின்றன ?

(ஈ) 1957–58 ஆண்டுகளிலே இப்பயிற்சி நிலையங்களில் எத்தனை பேர்களுக்குப் பயிற்சி கொடுக்கப்பட்டன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The industry is being carried on in Tiruchirappalli, Salem, South Arcot and the Nilgiris districts.

(*b*)

| | 1957. | 1958- (During the monthss of January and February. |
|---|---|---|
| | RS. | RS. |
| United Kingdom .. .. | 2,384 | — |
| Germany (West) .. .. | 5,73,506 | 31,102 |
| Netherlands .. .. | 20,040 | 17,454 |
| France .. .. | 19,390 | — |
| Total .. | 6,15,320 | 48,556 |

Particulars from March to August 1958 are not readily available.

(*c*) Training-*cum*-production centres for cumbly weaving have been started at—

Puliyankurichi and Mekalachinnapalli, Salem district.

Kolakudi, Tiruchirappalli district.

Kookalathurai, Nilgiris district.

(*d*)

| | 1957–58 |
|---|---|
| Puliyankurichi, Salem district ... ... | 5 |
| Mekalachinnampalli, Salem district ... | 10 |
| Kolakudy, Tiruchirappalli district ... ... | 12 |
| Kookalathurai, Nilgiris district ... ... | 8 |
| Total ... | 35 |

SRI P. G. MANICKAM : நமது மாகாணத்திலே பயிற்சிச்சாலைகள் மாத்திரம் இருப்பதாகத் தெரிகிறது. ஆனால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்தி வெளி நாட்டிலிருந்து கம்பளமாக இறக்குமதி செய்யாமல் இங்கேயே கம்பளம் உற்பத்தி செய்வதற்கு சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வட ஆற்காடு ஜில்லாவில் விண்ணமங்கலம் கிராமத்தில் பதின்மூன்று லட்சத்து பத்தாயிரத்து ஐம்பது ரூபாயில் ஒரு தொழிற்சாலை ஆரம்பிக்கப்படுகிறது. சென்னை அரசாங்கமும், மைசூர் அரசாங்கமும் சேர்ந்து இதை நடத்தும்.

[3rd November 1958

SRI J. MATHA GOWDER : நீலகிரி ஜில்லாவில் நடைபெறும் புங்கலூர் கம்பளி தொழிற்சாலைக்கு வேண்டிய சாமான்கள் கொடுக்கப்படவில்லை என்பது சர்க்காருக்குத் தெரியவந்திருக்கிறதா ? அப்படியானால் அதற்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTHAVATSALAM : அதைப் பற்றி என்னிடத்தில் தகவல் இல்லை. கனம் அங்கத்தினர் என்னிடத்தில் வந்து அந்த விவரங்களை எல்லாம் தெரிவித்தால் அதற்கு வேண்டிய கவனம் செலுத்தலாம்.

*Checking of motor vehicles at Alumpannai*

* 800 Q.—SRI M. S. SELVARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கன்னியாகுமரி ஜில்லா, ஆளும்பண்ணையில் ராஜ்யம் பிரிவினைக்கு முன் இருந்ததைப்போல போலீஸார் மோட்டார் வண்டிகளைப் பரிசோதனை செய்து அனுப்பினார்களா?

(ஆ) அப்படியானால் அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) There is no place as Alumpannai in Kanyakumari district. It is presumed that the member is having in mind the village " Aramboli ". Buses and lorries stop at the police station in this village to sign a register maintained under the Madras Motor Vehicles Rules at the Police station. The police are not checking the vehicles there.

*Medical facilities under the Plantation Labourers Act*

* 801 Q.—SRI N. MARUDACHALAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தோட்டத் தொழிலாளர் சட்டப்படி 1956 முடிவுக்குள் வைத்திய வசதி செய்து கொடுக்காத தோட்ட முதலாளிகள் மீது சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுக்க உத்தேசித்துள்ளதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தோட்டத் தொழிலாளர் சட்டம் 1956-ம் ஆண்டு ஜனவரி முதலிலிருந்துதான் அமுலுக்குக்கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஒரு சில தோட்ட முதலாளிகளைத் தவிர மற்றெல்லோரும் வைத்திய வசதி செய்வதற்கான நடவடிக்கைகளை எடுத்து வருகிறார்கள். இது ஒரு புது சட்டமாகையாலும் வைத்திய வசதிகள் செய்வதற்குப் பணம் தேவைப்படுவதாலும் வசதி செய்து கொடுக்காத தோட்ட முதலாளிகள் மீது எவ்வித நடவடிக்கையும் உடனே எடுக்காமல் இந்தச் சட்டப்படி செய்ய வேண்டிய வசதிகளைச் செய்யம் விஷயத்தில் தொழில் இலாகா உதவி புரிந்து வந்தது. அவர்களும் ஒரு மாதத்திற்குள் இந்த வசதிகளைச் செய்து கொடுக்கும்படி நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

SRI N. MARUDACHALAM : சில தோட்ட முதலாளிகள் வைத்திய வசதி செய்து கொடுக்காமல் இருக்கிறார்கள். அம்மாதிரி இடங்களில் அரசாங்கமாவது வைத்திய வசதி செய்து கொடுக்க நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 257 தோட்டங்களில் இதுவரையில் வைத்திய வசதி செய்வதற்காக 214 தோட்டங்கள் திட்டங்கள் சமர்ப்பித்திருக்கிறார்கள். அவை பரிசீலனையில் இருக்கின்றன. 114 தோட்டங்களுக்கு அங்கீகாரம் அளிக்கப்பட்டுவிட்டது. தோட்டக்காரர்கள் செய்ய வேண்டிய கடமையை அரசாங்கம் ஏற்றுக்கொள்வது சரியல்ல. அவர்களைக்கொண்டே சட்டப்படி என்னென்ன வசதி செய்து கொடுக்கவேண்டுமோ அவற்றைச் செய்து கொடுக்க ஏற்பாடு செய்யப்படுகிறது.

3rd November 1958]

**SRI M. KALYANASUNDARAM** : இரண்டு வருடத்திற்கு மேலாகியும் கூட இன்னும் அந்தத் திட்டங்கள் பரிசீலனையிலிருப்பதாகச் சொல்லு கிறார்கள். தோட்டத் தொழிலாளர்களுடைய நலனைக் கருதி உடனடியாக சிறிய சிறிய தோட்ட முதலாளிகள் வைத்திய வசதி செய்து கொடுக்க முடியாவிட்டாலும் அங்கங்கே அவர்கள் ஒன்றாகச் சேர்ந்தாவது பொதுவாக ஓரிடத்தில் ஆஸ்பத்திரியை ஏற்படுத்தி வைத்திய வசதியைக் கொடுக்க நடவடிக்கை எடுக்கப்படுமா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் அங்கத்தினர் சொல்லுகிற யோசனை உள்பட அவ்வளவு பரிசீலனையும் செய்யப்பட்டு நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது.

*Vinayagar Temple Senpakkam*

* 802 *Q*.—SRI S. N. ANNAMALAI (on behalf of Sri M. P. Sarathi): கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வேலூர்ப் பக்கம் உள்ள சேப்பாக்கம் விநாயகர் கோவில் நிர்வாக தர்மகர்த்தா என். கோவிந்தராஜ முதலியார் நியமனம் பற்றி ஏதேனும் புகார் கிடைத்ததா ?

(ஆ) அந்த ஊர் மணியக்காரர் வழங்கியதாக ஒரு பொய் பத்திரம் தயார் செய்து பதவியைப்பெற்றதாகப் புகார் கிடைத்ததா?

(இ) அதன்பேரில் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : (*a*) & (*b*) Yes, Sir.

(*c*) Disciplinary action has been taken by the Deputy Commissioner under section 45 of the Hindu Religious and Charitable Endowments Act, 1951 and the trustee, Sri N. Govindaraja Mudaliar, has been placed under suspension pending final decision.

**SRI K. VINAYAKAM** : சேன்பாக்கத்திலிருக்கும் விநாயகர் கோயில் டிரஸ்டி கோவிந்தசாமி முதலியாரை நீக்கும்போது சாரதி முதலியாரை டிரஸ்டியாக நியமிக்க அரசாங்கம் யோசிக்குமா ?

**MR. SPEAKER** : The question is out of order.

*Primary Schools run by Forest Department.*

* 803 *Q*.—SRI M. P. SARATHI : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) காட்டிலாகாவினால் நியமிக்கப்படும் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் எத்தனை?

(ஆ) எந்த ஜில்லாக்களில் ? எவ்வளவு பள்ளிகள்?

(இ) அவைகளுக்கான செலவு எவ்வளவு?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : (*a*) Ten.

(*b*) North Arcot district—9 Schools.
Coimbatore district—1 School.

(*c*) The approximate expenditure incurred towards the maintenance of these schools is Rs. 28,000 per annum.

[3rd November 1958

*Electrical undertakings taken over from Municipalites*

* 804 *Q.*—SRI P. S. K. LAKSHIMIPATHI RAJ : கனம் மின்சா அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தங்கள் ஆதிக்கத்திலிருந்த மின்சார ஸ்தாபனங்களை மீண்டும் தங்களுக்கே திருப்பித்தர வேண்டுமென்று முனிசிபாலிட்டிகளிடமிருந்து ஏதேனும் முறையீடு அரசாங்கத்திற்கு வந்திருக்கிறதா ?

(ஆ) வந்திருந்தால், அரசாங்கம் அதன் மீது எடுத்த நடவடிக்கை என்ன ?

THE HON. SRI V. RAMIAH : (*a*) & (*b*) Representations have been received from Palani and several other Municipalities requesting that the Municipal Electrical Undertakings acquired from them by the Government under the Madras Electricity Undertakings (Acquisition) Act may be returned to them, but it has been decided not to return the undertakings to them.

*Hand-pounded rice*

* 805 *Q.*—SRI D. S. AUTHIMOOLAM (on behalf of Sri T. L. Sasivarna Thevar) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that subsidy and exemption from sales tax have been given for hand-pounded rice procured by the Government for the use of different institutions under their control;

(*b*) if so, how much subsidy in each case was given;

(*c*) wherefrom and from whom this hand pounded rice is procured;

(*d*) the quantity thus procured and the duration of procurement; and

(*e*) for how long the procurement is to be carried on?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) No. procurement of handpounded rice is done by Government for supply to the several institutions under its control. However, handpounded rice has been exempted from sales-tax. Subsidy at the rate of 0.37 nP. per maund of paddy dehusked is being given to Registered Institutions and Co-operative Societies situated in places, where it is certified that competition from rice mills is acute, from the funds placed at the disposal of this Government by the Khadi and Village Industries Commission, Bombay. The subsidy is not being given for procurement of handpounded rice.

(*c*), (*d*) & (*e*) Do not arise as no procurement is done by Government.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : அநேகம் பேர் மிஷினில் அந்த அரிசியைக் குத்தி பாலீஷ் பண்ணுமல் கைக்குத்தல் அரிசி என்று விநியோகம் செய்வது அரசாங்கத்துக்குத் தெரியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தனி நபர்கள் அவ்வாறு செய்து வாலாம். தனி நபர்களிடமிருந்து இந்த ஸ்தாபனங்களுக்குச் சர்க்கார் வாக்குறுதி இல்லே. ஹாஸ்பிடலுக்கு சப்ளை செய்வதைப் பொறுத்த மட்

3rd November 1958]

டில் டயரக்டர் ஆப் இண்டஸ்ட்ரீஸ் மேற்பார்வையில் கோவாப்பரேட்டிவ் சொஸைட்டிகளில் குத்தப்படும் கைக்குத்தல் அரிசியே வாங்கப்படுகிறது.

SRI K. B. S. MANI : தனிப்பட்ட சிலர் கைக்குத்தல் அரிசியோடு மணலைக் கலந்து விற்பனை செய்கிறார்கள். இதைப் பள்ளி ஹாஸ்டல்களில் வாங்கி உபயோகிப்பதால் மாணவர்கள் வயிற்றுவலி, வயிற்றுப்போக்கு முதலியவைகளினால் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே தனிப்பட்டவர்களும் கூட கைக்குத்தல் அரிசியைத் தயார் செய்யும்போது அதை சர்க்கார் பரிசீலனை செய்த பிறகே விநியோகிக்கவேண்டும் என்று அறிக்கை பிறப்பிக்கப்படுமா?

THE HON. SRI M. BHAKTHAVATSALAM : தனிப்பட்ட நபர்கள் உற்பத்தி செய்கிற அரிசி சர்க்கார் ஸ்தாபனங்களுக்குச் சப்ளை செய்யப்படவில்லை என்று சொன்னேன். தனிப்பட்ட ஸ்தாபனங்கள் தனிப்பட்டவர்களிடமிருந்து அந்த அரிசியை வாங்கும்போது அதைக் கவனித்துக்கொள்ள வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

*Cattle or dairy farm near Jayankondan*

* 806 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there was a proposal to open a cattle farm or a dairy farm in Udaiyarpalayam taluk, Tiruchirappalli district, near Jayankondan; and

(*b*) if so, why the proposal has not been given effect to?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) The question does not arise.

*Murder of one Muthu Servai*

* 807 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government are aware that one Muthu Servai belonging to the Communist Party was murdered on 20th August 1958 by a rival group of Servais in the village Varadambattu, Mayavaram taluk;

(*b*) the action taken by the Police to trace the culprits; and

(*c*) how many persons have been arrested in connection with the murder?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The matter is under investigation.

(*c*) Nine.

*Daily duty hours for drivers in the Transport Department*

* 808 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether the Government have received any complaint against the imposition of continuous duty of twenty-four and forty hours on the drivers from the Workers' Union in the Nagercoil Depot;

[3rd November 1958

(b) whether the Government enquired about the complaint and whether they took any steps to put an end to this compulsion;

(c) whether it is a fact that the driver on the wheel of the bus which met with a serious accident at Parasala during March 1958 was on his third continuous stretch of eight hours (20th hour) duty at the time of the accident; and

(d) if so, what action was taken against the officers who imposed such duty on the daily-rated workers?

THE HON. SRI V. RAMAIAH: (a) Yes, Sir.

(b) Enquiry shows that the allegation is not correct.

(c) No, Sir.

(d) Does not arise.

SRI T. S. RAMASWAMY PILLAI: May I know the officer who made the enquiry and may I know whether the Government will be pleased to place on the table of the House the report of the enquiry officer?

THE HON. SRI V. RAMAIAH: We have received the report of the Hon. Director stating the facts. Regarding the report and other things, I require a separate question to be put.

SRI T. S. RAMASWAMY PILLAI: May I know whether the Government would be prepared to send any other officer particularly to enquire into these allegations and to place before the House the report of the Director for us to see whether it is correct or not?

THE HON. SRI V. RAMAIAH: We have received the report from the Director and we are satisfied that the report is correct. If there are any further points which the hon. Member feels that we should look into, and if he furnishes information about that, we will depute a Special Officer for the purpose.

*Major Temples*

*809 Q.—SRI S. LAZAR (on behalf of Sri P. S. K. Lakshmipathi Raj) கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் உள்ள பெரிய தேவஸ்தானங்கள் எத்தனை?

(ஆ) இதில் வருமானம் அதிகம் வரும் கோவில் எது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) There are 159 listed institutions.

(b) Sri Dhandayudhapaniswami Devasthanam at Palni.

SRI N. MURUDACHALAM: கோவையில் இருக்கும் மேலைச்சிதம்பரம் என்ற பெயருள்ள தேவஸ்தானத்திற்கு எவ்வளவு வருமானம் வருகிறது என்று கனம் அமைச்சர் சொல்வாரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.

3rd November 1958]

*Annapoorni Amman Chatram*

* 810 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether a representation was received by the Government to extend the provisions of the Hindu Religious and Charitable Endowments Act to Annapoorni Amman Chatram at Perugavaldan in Mannargudi taluk, Tanjore district;

(*b*) whether any enquiry was made in this connection;

(*c*) whether the proceedings were stopped at the stage of making a notification; and

(*d*) the reasons for the same?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) to (*c*) Yes, Sir.

(*d*) From the records of enquiry, the Government came to the conclusion that no properties were endowed absolutely for the performance of the services in the Annapurani Chatram, that they were only charged with the liability to give contributions for the performance of the services and that the services were being maintained properly.

*Report of the Official Language Act Implementation Committee*

* 811 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கவர்மெண்டு நிர்வாகக் காரியாலயங்களின் நடவடிக்கைகள் தமிழில் நடைபெறுவதற்கான முயற்சிகளைத் தெரிவிப்பதற்காக நியமிக்கப்பட்ட The Official Language Act Implementation Committee-யின் ரிப்போர்டு விவரங்கள் யாவை ?

(ஆ) மேற்கண்ட ரிப்போர்ட்டில் குறிப்பிடப்பட்டிருக்கும் நடவடிக்கைகளிலே என்னென்ன நடவடிக்கைகள் தற்போது தமிழில் நடைபெற்று வருகின்றன ?

THE HON SRI C. SUBRAMANIAM: (*a*) The Report [a] of the Official Language Act Implementation Committee is placed on the Table of the House.

(*b*) The Committee has not made any recommendations about specific items of correspondence that are to be carried on in Tamil and in English. All the items of correspondence with the public in offices in which Tamil has been introduced, will be carried on in Tamil, except in certain cases, where the use of English will be unavoidable for some more time.

SRI P. G. MANICKAM: எத்தனை தமிழ் டைப்ரைட்டர்கள் தயாரிப்பதற்குச் சர்க்காரால் ஆர்டர் கொடுக்கப்பட்டிருக்கிறது ? இதுவரை எத்தனை தமிழ் டைப்ரைட்டர்கள் 'ஸப்ளை' செய்யப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்போது அந்த விவரங்கள் என்னிடம் இல்லை.

---

[a] Printed as Appendix V on pages 473–479 infra.

[3rd November 1958

**Sri A. GOVINDASAMY** : மொழி பெயர்ப்பில், பல ஆங்கில வார்த்தைகள் தமிழ் வார்த்தைகளாக மொழிபெயர்க்கப்பட்டிருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? இப்படிப்பட்ட தவறு இனி நேராமலிருப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்கும்?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அந்த ஆங்கில வார்த்தைகள் தமிழ் நாட்டில் பழக்கத்திற்கு வந்து, தமிழ் வார்த்தைகளாகவே ஆகிவிட்டன. அவைகளுக்குப்பதிலாக வேறு தமிழ் வார்த்தைகளைப் போட வேண்டியதில்லை என்பது சர்க்காரின் கருத்து. அது தான் நல்லது.

**Sri M. KALYANASUNDARAM** : ஆட்சி மொழிச் சட்டத்தின் கீழ் எந்தெந்த இலாகாக்களில் எந்தெந்தக் காரியங்களுக்குத் தமிழ் உபயோகிக்கப்பட வேண்டுமென்று உத்தரவிடப்பட்டிருக்கிறது.? இந்த விவரங்களை கனம் அமைச்சர் கொடுப்பாரா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இந்த விவரங்கள் எல்லாம் முன்பே இங்கு விரிவாகத் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. இது சம்பந்தமாக அறிக்கையும் வெளியாகியிருக்கிறது. மேஜையில் மீது வைக்கப்பட்டுள்ள ரிப்போர்ட்டில் எந்த இலாகாக்களில் எந்தெந்தக் காரியங்களுக்காக தமிழ் உபயோகம் உடனடியாகக் கொண்டுவரப்பட வேண்டும் என்று சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது. அந்த இலாகாக்களைக் குறிப்பிடுகிறேன்.

(*a*) Revenue Department, including the offices of the Block Development Officers and Project Executive Officers.

(*b*) Public Works Department.

(*c*) Agriculture.

(*d*) Hindu Religious and Charitable Endowments.

(*e*) Education.

(*f*) Local Bodies.

(*g*) Co-operatives.

இந்த இலாகாக்களில் ஆட்சி மொழியாகத் தமிழ் எந்த எந்த முறையில் கொண்டுவரப்பட வேண்டுமென்று சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது. அந்த சிபாரிசுகளின் அடிப்படையில் சர்க்கார் இலாகாக்களில் தமிழை ஆட்சி மொழியாகக் கொண்டு வருவோம்.

**Sri A. GOVINDASAMY** : ஆட்சி மொழி சம்பந்தப்பட்ட இந்தக் கேள்விக்காவது ஆங்கிலத்திலன்றி தமிழிலேயே பதில் சொல்லியிருந்தால் நன்றாக இருந்திருக்கும் அல்லவா? இந்தக் கேள்விக்கு ஏன் ஆங்கிலத்தில் பதில் சொல்ல வேண்டும் ?

**Mr. SPEAKER** : This is only a suggestion.

**Sri K. B. S. MANI** : சட்டசபை நடவடிக்கை பூராவும் தமிழிலேயே இருந்தால், நடவடிக்கைகளை எல்லா மெம்பர்களும் நன்றாகப் புரிந்து கொள்ள முடியுமல்லவா? முதலில் இதையாவது செய்ய அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இந்தக் கேள்வி கனம் சபாநாயகர் அவர்களிடம் கேட்கப்பட வேண்டியது என்று நினைக்கிறேன். கனம் அங்கத்தினர் கனம் சபாநாயகரின் அறையில் அவரிடம் இது சம்பந்தமாக விவாதிக்கலாம்.

**Mr. SPEAKER** : சபையின் நடவடிக்கைகள் ஆங்கிலத்தில்கூட இருந்தால் என் போன்றவர்களுக்கு அவை நன்றாகப் புரியும்.

**Sri K. B. S. MANI** : 'கவர்ன்மெண்ட் நோடிபிகேஷன்' எப்போது தமிழில் வரும்?

3rd November 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : உப கேள்விகள் போடும் கனம் அங்கத்தினர்கள் தயவுசெய்து இந்த ரிப்போர்ட்டைப் படித்துவிட்டு உப கேள்விகள் போட வேண்டும். எந்த எந்த இலாகாக்களில் எந்தெந்தக் காரியங்களுக்கு எப்போதிருந்து தமிழ் உபயோகிக்கப்படும் என்பதுபற்றிய விவரங்கள் ரிப்போர்ட்டில் விரிவாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சட்டம் செய்வது வெகு சுலபம். ஆனால் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவருவதில் எவ்வளவு கஷ்டம் இருக்கிறது என்பது சட்டத்திலுள்ள முக்கிய விஷயங்களைப் பற்றியும், நடைமுறையில் உள்ள சாத்தியக் கூறுகளைப் பற்றியும் ஆலோசிக்கும்போதுதான் தெரியும். அவைகளைப் பற்றி ஆலோசித்து விரிவானதொரு அறிக்கையைச் சமர்ப்பித்திருக்கிறோம். எந்தெந்தக் காரியங்களுக்குத் தமிழின் உபயோகத்தை விரைவில் கொண்டுவரலாம் என்பது அறிக்கையைப் படித்தால் தெளிவாகத் தெரியும்.

SRI K. VINAYAKAM : ஆட்சி மொழி தமிழாக இருப்பினும்கூட போடப்படும் கேள்விகளும் அவைகளுக்குத் தரப்படும் பதில்களும் ரிப்போர்டுகளும் ஆங்கிலத்திலே இருந்தால்தான் அவை தெளிவாக இருக்கும். என்ற காரணத்தால் ஆங்கிலத்தை அவ்வளவு சுலபமாக இந்த நாட்டை விட்டுத் தள்ளிவிட முடியாது என்பதையும் அந்தக் காரணத்தால் குறைந்த பட்சம் இன்னும் 50 ஆண்டுகளாவது ஆங்கிலம் இங்கே இருக்க வேண்டுமென்பதையும் அரசாங்கம் ஒத்துக்கொள்கிறதா?

MR. SPEAKER : The hon. Member is giving his opinion. It is not a question.

SRI K. VINAYAKAM : Sir, it is not an opinion. It is a question.

*Conference of Agricultural Officials held at Tiruchirappalli*

* 812 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the details of the Comprehensive programme of work for the year 1958–59 drawn at the Conference of Agricultural Officials held at Tiruchirappalli on 7th April 1958; and

(*b*) the anticipated increase in the production by carrying it out?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement[a] is placed on the table of the House.

SRI S. LAZAR : : மேஜையின் மீது வைக்கப்பட்டிருக்கும் பதிலில் தெரிவிக்கப்பட்டிருக்கும் திட்டம் மாநிலம் பூராவுக்குமா அல்லது சில பகுதிகளுக்கா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திட்டம் மாநிலம் பூராவுக்குமாகத்தான் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

*Employment of discharged Prisoners*

* 813 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) what are the Government factories and workshops in which discharged prisoners have been employed and how many are so employed; and

---

[a] Printed as Appendix VI on page 479 infra.

[3rd November 1958

(*b*) what are the prisons in which industrial or craft training is imparted to convicts?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Six discharged prisoners are employed in the factories.

| Name of the Factory or Workshop. | Number of Discharged Prisoners employed. |
|---|---|
| (1) Stationery and Printing Department ... | 2 |
| (2) Transport and Machinery (Highways) Workshop, Pudukkottai ... ... | 1 |
| (3) Cinchona Department (The Nilgiris) ... | 3 |

(*b*) Central Jails at Tiruchirappalli, Cuddalore, Coimbatore, Madurai, Vellore, Madras and Salem; State Jail for Women, Vellore, District Jail, Pudukkottai; Borstal School, Palayamcottai; and the Special Sub-Jail, Salem.

SRI P. G. MANICKAM: குற்றம் செய்து சிறைசென்று திரும்புகிறவர்களில் பெரும்பாலோர் ஏழைகள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆகையால் அவர்கள் தங்களுக்கு வேலை கொடுக்க வேண்டுமென்று சர்க்காருக்கு விண்ணப்பித்துக்கொண்டால், அவர்களுக்குச் சர்க்கார் தொழிற்சாலைகளில் வேலை கொடுக்க அரசாங்கம் உத்தேசிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அந்த முறையில் தான் அவர்கள், நான் இப்போது குறிப்பிட்ட சர்க்கார் தொழிற்சாலைகளில் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

SRI S. NAGARAJA MONIGAR: சிறையிலிருந்து விடுதலையாகிய கைதிகளில் பெருமாலோர் திரும்பவும் சிறைக்குச் செல்லவே விரும்புகிறார்கள் என்பது உண்மையா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அது கனம் அங்கத்தினருக்குத் தெரிந்திருக்கலாம், எனக்குத் தெரியாது.

SRI P. S. SANTHANAM: திருடுவது போன்ற குற்றங்களைச் செய்து சிறை சென்று திரும்பியவர்களுக்கு, சிறையில் அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்ட தொழில்களையே சர்க்கார் தொழிற்சாலைகளில் கொடுத்தால், அவர்கள் மீண்டும் திருடாமல் அந்தத் தொழில்களைச் செய்து கொண்டிருப்பார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சிறையில் அவர்கள் கற்றுக்கொள்ளும் தொழில்கள் அவர்கள் விடுதலையான பிறகு வாழ்க்கை நடத்துவதற்கு அவர்களுக்குப் பயன்பட வேண்டுமென்பதும், அதற்கேற்ற முறையிலேயே சர்க்கார் தொழிற்சாலைகளிலும் வேறு தொழிற்சாலைகளிலும் அவர்கள் வேலைக்கு அமர்த்தப்பட வேண்டுமென்பதும்தான் அரசாங்கத்தின் எண்ணம்.

### *Teachers of Salem and Tiruchirappalli District Boards*

* 814 *Q.*—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) when the payment of salaries for the months of January, February and March, 1958 was made to the teachers under the District Boards of Tiruchirappalli and Salem respectively; and

3rd Novembe 1958]

(*b*) if there has been any delay what is the cause for the same?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

*Award of Medals to Harijan students*

* 815 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of Harijan boys and girls of the South Arcot district who were awarded Silver medals for securing high marks in the S.S.L.C. Examinations held in 1956–57 and 1957–58; and

(*b*) the total value of those medals?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No medals have been awarded during these years.

(*b*) Does not arise.

* 816 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1957–58-ஆம் வருஷத்தில் எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்தலில் உயர்ந்த பட்ச மார்க்குகள் பெற்ற எத்தனை சென்னை மாகாண ஹரிஜன மாணவர்களுக்கும் மாணவிகளுக்கும் தங்கம், வெள்ளி பதக்கங்கள் பரிசாக வழங்கப்பட்டன ?

(ஆ) 1958–59-ல் மேற்கண்ட பரிசுகள் வழங்குவதற்காக ஒதுக்கப் பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No medals have been distributed so far. Particulars have been called for from Collectors and on receipt of details the Director of Harijan Welfare will arrange to distribute the medals.

(*b*) Rs. 1,560.

SRI M. JAGANNATHAN : இந்த வருடங்களில் மெடல்கள் ஏன் வழங்கப்படவில்லை ?

THE HON SRI P. KAKKAN : ஜில்லா கலெக்டர்களிடம் விவரங் கள் கேட்டிருக்கிறோம். விவரங்கள் வந்த பிறகு மெடல்கள் கொடுக்கப் படும்.

SRI P. G. MANICKAM : 1958–59-ம் ஆண்டிற்குப் பரிசுகள் வழங்குவதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் பணத் தொகையானது இதே வரு ஷம் செலவழிக்கப்பட்டு பரிசுகள் வழங்கப்படுவதற்கு நடவடிக்கை எடுக்கப் படுமா ?

THE HON. SRI P. KAKKAN : 1956–57, 1957–58 ஆகிய ஆண்டு களுக்கு ஒதுக்கப்பட்ட தொகைகள் இன்னும் செலவழிக்கப்படவில்லை. அந்தத் தொகைகளையே இந்த வருஷத்திற்குள் செலவழிக்கலாமா அல் லது இந்த வருஷத்திற்குப் பிறகும் செலவழிக்கலாமா என்பது பரிசீலனை யில் இருந்து வருகிறது.

SRI K. B. S. MANI : இந்தப் பரிசுகள் 1956-லிருந்து கொடுக்கப் படாமலிருப்பதாகத் தெரிகிறது. இதன் விளைவாகச் சர்க்கார் எந்த நோக் கத்துடன் இந்தத் திட்டத்தை ஆரம்பித்தார்களோ அந்த நோக்கம் வெற்றி யடையாமலிருக்கிறது. பரிசுகள் கொடுக்கப்படாமலிருப்பது, ஜில்லாக் கலெக்டர்களின் தவறினாலா அல்லது அரசாங்கத்தின் அலட்சியத்தாலா ?

[a] Printed as Appendix VII on page 480 infra.

[3rd November 1958

THE HON. SRI P. KAKKAN : அதற்குக் காரணம் அரசாங்கத்தின் அலட்சியம் அல்ல என்று தெரிவித்துக்கொள்கிறேன். ஜில்லாக் கலெக்டர்களிடமிருந்து அரசாங்கத்திற்கு விவரங்கள் வந்து சேர்வது தாமதமாவதே அதற்குக் காரணம். விவரங்களைத் துரிதமாக அனுப்பும்படி கலெக்டர்களுக்குச் சொல்லியிருக்கிறோம்.

*Production of cycles and cycle accessories*

*817 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சைக்கிள்களையும் சைக்கிள் சாமான்களையும் உற்பத்தி செய்யக் கூடிய கவர்ன்மெண்டால் நடத்தப்படும் நிலையங்களும், தனிப்பட்டவர்களால் நடத்தப்படும் நிலையங்களும் எந்தெந்த இடங்களிலே இருக்கின்றன ?

(ஆ) இந்நிலையங்கள் மூலமாக எத்தனை சைக்கிள்களும், எத்தனை ரூபாய்கள் மதிப்புள்ள சைக்கிள் சாமான்களும் ஒவ்வொரு ஆண்டிலும் உற்பத்தி செய்யப்பட்டன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Government Units—

(1) General Purposes Engineering Workshop at Rajapalayam.

Private Units.

(1) The T.I. Cycles of India Limited, Madras.
(2) The Wheel and Rim Company of India Limited, Madras.
(3) The Rapid Industries Limited.
(4) The Varun Industrial Corporation, Limited, Guindy.

(*b*)

| | |
|---|---|
| (1) General Purposes Engineering Workshop, Rajapalayam. | 37 Dozens of cycle parts. |
| (2) The T. I. Cycles of India Limited, Madras. | 200,108 cycles during 1957—58. |
| (3) The Wheel and Rim Company of India, Limited, Madras. | 509,288 rims during 1957—58. |
| (4) The Rapid Industries, Madras. | 1,316 cycles and 2,832 cycle parts from January 1958. |
| (5) The Varun Industrial Corporation, Limited. | Started only very recently. |

*Factory Inspectors and Labour Officers Conference*

*818 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state the recommendations made by the Factory Inspectors and Labour Officers' Conference held recently?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There has been no conference of the Inspectors of Factories and the Labour Officers recently. A conferencnce was held in May 1956 to enable the officers to come together to discuss common problems arising in the day-to-day administration of labour laws. A statement [a] containing the particulars of the recommendations made at the conference and the action taken thereon is placed on the table of the House.

a Printed as Appendix VIII at pages 481–484 infra.

3rd November 1958]

**Sri K. SATTANATHA KARAYALAR** : சர்க்கார் கூட்டிய இந்த மகாநாட்டில் மிக முக்கியமான ஒரு சிபார்சு, தொழில் தர்க்கம் ஏற்படும் போது முதலாளியும், தொழிலாளியும், சர்க்கார் லேபர் ஆபீசர் அழைத்தால் வந்து பங்கு எடுத்துக் கொள்ளவேண்டுமென்பது. பல முதலாளிகள் அதை உதாசீனப்படுத்துவதின் காரணத்தால் இந்த சிபார்சு செய்யப்பட்டது. அப்படியிருந்தும் அவர்களை என் கட்டாயப் படுத்த வேண்டாமென்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்தது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கட்டாயப்படுத்துவது என்றால் அதற்கு ஒரு சட்டம் செய்யவேண்டும். அதற்கு நிமித்தம் இல்லாமலேயே இதைக் கவனித்துக் கொள்ளலாம் என்ற அபிப்பிராயத்தில்தான் அரசாங்கம் அப்படிச் செய்தது.

**Sri S. LAZAR** : சில முக்கியமான சிபார்சுகளைப் பொறுத்துச் சொல்கிறபோது இது சம்பந்தமாகச் சட்டம் செய்ய வேண்டுமென்று அறிக்கையிலும் குறிப்பிடப் பட்டிருக்கிறது. இப்பொழுது அமைச்சர் அவர்களும் சொன்னார்கள். இன்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்ட் போன்ற முக்கியமான சட்டங்களை, இச்சிபார்சுகளின் அடிப்படையில் திருத்துவதற்கு நமது அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு சிபார்சு செய்திருக்கிறதா ? அப்படியிருந்தால் எப்பொழுது இந்தச் சிபார்சு நடைமுறைக்கு வரும் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இன்டஸ்ட்ரியல் டிஸ்ப்யூட்ஸ் ஆக்டின் பல பிரிவுகளை திருத்த வேண்டுமென்று மத்திய அரசாங்கத்திற்கே யோசனை இருக்கிறது. சமீபத்தில் நடந்த ஸ்டான்ட்டிங் கமிட்டியில் தொழில் அதிபர்களையும், தொழிலாளி பிரதிநிதிகளையும் சேர்த்து இதுமாதிரிக் கலந்து பேசினார்கள். ராஜ்ய அரசாங்கங்களின் அபிப்பிராயங்களையும் பெற்றிருக்கிறார்கள். இந்த சர்க்காரும் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறது. இதை எல்லாம் வைத்து மறுபடியும் டிஸம்பர் மாதத்தில் இதைப் பற்றிப் பரிசிலனை செய்து இந்தத் திருத்தத்தை மத்திய அரசாங்கமே ஏற்று நடத்துவது என்பதுதான் அபிப்பிராயம்.

*Selection Committee for Elementary Grade Training Schools*

*819 *Q.*—Sri **S. M. ANNAMALAI** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) ஆரம்ப ஆசிரியர்கள் பயிற்சிப் பள்ளிகளுக்கு மாணவர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுக்கு குழுவிற்கு (Selection Committee) நியமிக்கப்படும் உறுப்பினர்கள் எந்த அடிப்படையில் நியமிக்கப்படுகிறார்கள் ?

(ஆ) எந்த அடிப்படையில் மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Non-official members of the Committees for the selection of candidates for admission to basic training schools are selected on the basis of their interest in basic education. There is no selection committee of non-official members for non-basic training schools.

(*b*) Copies of proceedings of the Director of Public Instruction showing the basis of selection of candidates for admission to Basic Training Schools are placed on the table of the House.

**Sri S. M. ANNAMALAI** : ஸ்ரீ வினாயகம் அவர்கள் கேட்ட கேள்விக்கு ஒரு அறிக்கை வைத்திருக்கிறது. அதைப் பார்க்கிறபோது அந்தக் குழுவில் உள்ள உறுப்பினர்கள் அனைத்தும் காங்கிரஸ் கட்சிக்காரர்களாக இருக்கிறார்கள். தவிர மாற்றுக் கட்சியில் உள்ள தோழர் ஒருவருக்குக் கூட அதில் இடமில்லை. காங்கிரஸ் கட்சிக்காரர்கள் மட்டுந்தான் அந்தக் குழுவில் இருக்க வேண்டுமென்று சர்க்காரின் கொள்கையா ?

---

* Printed as Appendix IX on pages 485–488 infra.

[3rd November 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : சர்க்காரின் கொள்கை, இந்த ஆதாரக் கல்வித் திட்டத்தில் உண்மையிலேயே யாருக்கு நம்பிக்கை இருக்கிறதோ அவர்களைப் போடவேண்டுமென்பதுதான். ஆகவே யாருக்கு அதில் நம்பிக்கை இருக்கிறதோ அவர்களை, டி.பி.ஐ. அவர்கள் ஆலோசனை செய்து சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யப்படும்.

SRI A. VEDARATHNAM : மேஜை மேல் வைக்கப்பட்டிருக்கும் அறிக்கையில் "போஸ்ட் பேஸிக்" வகுப்பில் தேறிய மாணவர்களை ஸீனியர் பேசிக் ட்ரெயினிங் ஸ்கூலில் சேர்ப்பதற்கு என்பது சேர்க்கப்பட வில்லை. காரணம் என்னவென்று அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுதுதான் அந்த அறிக்கை விடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் ஒரு சமயம் அது சேர்க்கப்படா மல் இருக்கலாம்.

SRI A. GOVINDASAMY : பெண்களைப் பயிற்சிக்கு எடுக்கிற இடங் களிலாவது பெண் எம்.எல்.ஏ.-க்களை ஏன் சேர்க்கவில்லை. காங்கிரஸ் தரப்பில் உள்ள பெண் எம்.எல்.ஏ-க்களுக்கு இதில் நம்பிக்கை இல்லையா ? ஆகவே இனியாவது அவர்களைச் சேர்ப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது, ஒரு சங்கடமான வேலை. ஆகவே பெண் எம்.எல்.ஏ-க்கள் இதில் பங்கு எடுத்துக்கொண்டு வேலை செய்வது கஷ்டம். சில இடங்களில் அவர்களும் போடப்பட்டிருக் கிறார்கள்.

SRIMATHI KOLANTHAIAMMAL : இரண்டு பெண் எம்.எல். ஏ.-க்கள் இந்த தேர்வுக் குழுவில் இடம் பெற்றிருக்கிறார்கள் என்பது இந்தச் சபைக்குத் தெரியுமா ?

(பதில் இல்லை.)

SRI S. M. ANNAMALAI : நம்பிக்கை இருக்கிறதா இல்லையா என்று தெரிந்து கொள்வதற்கு ஏதாவது ஒரு பரீட்சை வைக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பரிசீலனை செய்து பார்த்து எப்படி பரீட்சை வைக்கவேண்டுமென்று முடிவு செய்யலாம் (சிரிப்பு).

*Untouchability*

* 820 *Q*.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the Government have agreed to the suggestions made by the Commissioner for Scheduled Castes and Scheduled Tribes in his annual reports to maintain a list of villages where untouchability is still prevalent;

(*b*) if so, whether such a list has since been prepared; and

(*c*) the total number of villages where untouchability is prevalent?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) Yes, Sir.

(*c*) About 100 villages.

3rd November 1958]

Sri K. B. S. MANI : இந்த மாகாணத்தில் தீண்டாமை 150 கிராமங்களில்தான் நிலவி வருகிறது என்ற பதிலை அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். மத்திய அரசாங்கத்தில் இருந்து வந்த விசாரணைக் குழு பார்ப்பதற்காக அந்தந்த ஜில்லா வெல்பெயர் ஆபீஸர்கள் எங்கெங்கு சர்க்காரால் காலனிகள் கட்டப்பட்டிருக்கிறதோ அங்கு அவர்களை அழைத்துச் சென்று காண்பிக்கிறார்கள். மற்ற இடங்களையும் அவர்களுக்குக் காண்பிக்காமல் இருப்பதால், தீண்டாமை ஒழிப்பிற்காக மத்திய அரசாங்கத்தில் இருந்து நமக்குக் கிடைக்கும் தொகை மிகக் குறைவாக இருக்கிறது. ஆகவே தீண்டாமையை ஒழிக்க உண்மையானதொரு பட்டியலை மத்திய அரசாங்கத்திற்குக் கொடுத்து அவர்களிடம் இருந்து அதிகமான தொகையை வாங்க இந்த அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்குமா ?

The Hon. Sri P. KAKKAN : ஒரு சில கிராமங்களில் அங்கும் இங்கும் தீண்டாமையைக் கையாளலாம். அதிகப்படியாகத் தீண்டாமை இருப்பது 150 கிராமங்களில்தான் என்பது அரசாங்கத்தின் தகவல். ஆகவே, அவர்களைக் கூட்டி வந்து காண்பித்து அதிகப்படியான தொகை வாங்க வேண்டியதில்லை.

*Harijan Colonies in Sivaganga taluk*

* 820-A. *Q.*—Sri S. RAMASAMI THEVAR (on behalf of Sri D. Subramania Rajakumar) : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of Harijan Colonies constructed in Sivaganga taluk so far;

(*b*) the expenditure incurred for the same; and

(*c*) whether poor people of other communities are also allowed to reside in such colonies?

The Hon. Sri P. KAKKAN : (*a*) 831 houses.

(*b*) Rs. 4,55,838.

(*c*) Yes, Sir.

*Ambar Charka*

* 820-B *Q.*—Sri A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) அகில இந்திய காதி கமிஷனிடமிருந்து அம்பர் சர்க்கா அபிவிருத்திக்காக இந்த ஆண்டு (1958–59) எவ்வளவு நிதி உதவியிருக்கிறார்கள் ?

(ஆ) அந்தத் தொகையைப் பயன்படுத்த என்ன திட்டமிடப்பட்டிருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) The Khadi and Village Industries Commission, Bombay, have allocated a sum of Rs. 11,41,100 as grant and a sum of Rs. 37,98,000 as loan during 1958–59 for the development of Ambar Khadi in this State.

(*b*) The amount will be utilizer for the maintenance of 49 Parishramalayas (16 existing and 33 more to be opened during the year), 4 vidyalayas located respectively at Kangeyam, Dharapuram, Tirupur and Manimuthar Project Colony (Tirunelveli) and the Saranjam Karyalayas.

**Sri A. VEDARATHNAM:** இந்த மாநிலத்தில் எவ்வளவு அம்பர் ராட்டுகளை விநியோகிக்க அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது? அதை எத்தனை வருடங்களில் பயன்படுத்த உத்தேசம்? இப்பொழுது ஏற்படுத்தப் பட்டிருக்கிற பரிசிரமாலயங்கள் மூலம் அதற்குப் போதிய நபர்களுக்கு பயிற்சி கொடுக்க முடியுமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** இன்னும் அதிக பரிசிரமாலயங்கள் தேவையாயிருக்கிறது. அவைகளும் ஏற்பாடு செய்யப் படும். இந்தத் திட்டத்தைப் பரிபூர்ணமாக நிறைவேற்றுவதற்கு மற்ற விவரங்கள், தனியாகக் கேள்வி கேட்டால் சொல்கிறேன்.

**Sri V. SUBBIAH:** சர்க்காவில் நூற்கும் நூல சிட்டத்திற்கும், அம்பர் சர்க்காவில் நூற்கும் நூல் சிட்டத்திற்கும் விலை வித்தியாசம் இருக் கிறது. அதேபோல் ஜவுளியிலும் வித்தியாசம் ஏற்படுத்த அரசாங்கம் உத்தரவு இடுமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** இப்பொழுது விலை வித்தியாசம் ஒன்றுமில்லை. ஆனால் இந்தத் திட்டம் மேற்கொண்டு நிறை வேற்றப்பட்ட பிறகு விலை குறைக்கப்படும்.

### *Veterinary Dispensaries in Tanjore district*

* 820.C *Q.*—**Sri A. VEDARATHNAM:** Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) how many Veterinary Dispensaries were opened in Tanjore district during the last three years and in which places;

(*b*) in how many of these dispensaries there are Veterinary Doctors;

(*c*) which of these dispensaries are without doctors;

(*d*) the period during which there have been no Veterinary Doctors in these dispensaries and the reasons therefor; and

(*e*) the steps that are being taken by Government to remedy the above defect?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** (*a*) 1955–56—three dispensaries one each at Tiruvaiyaru, Orathanad and Konerirajapuram.

1956–57—Nil.

1957–58—One at Valivalam.

(*b*) Veterinary Assistant Surgeons are working in all the above dispensaries.

(*c*) Does not arise.

(*d*) The dispensary at Orathanad was without a Veterinary Assistant Surgeon during the period from 16th March 1956 to 23rd June 1957 and 4th July 1958 to 30th September 1958 and the dispensary at Konerirajapuram was without a Veterinary Assistant Surgeon from 1st November 1956 to 16th September 1957. The posts had to be kept vacant due to dearth of Veterinary Assistant Surgeons.

(*e*) At present there is a shortage of Veterinary Assistant Surgeons in the Animal Husbandry Department and the vacant

3rd November 1958]

posts are being filled up as and when new graduates become available. The number of admissions to the Madras Veterinary College has been increased to 120 from the academic year 1957–58 and out of this the candidates belonging to Madras number about 80. This increase will have real effect only after the first batch of students pass out of the college in 1961–62.

**Sri A. VEDARATHNAM**: ஸார், இவ்வளவு டாக்டர்கள் இல்லாதபோது பொதுஜனங்களிடமிருந்து நன்கொடை வாங்கி புதிது புதிதாக வெட்டரினரி ஆசுபத்திரிகள் கட்டுவதின் அவசியமென்ன ? அதோடு முன்னால் சில இடங்களில் இருந்த ஒன்றிரண்டு வெட்டரினரி டாக்டர்களையும் இப்போது மாற்றியிருப்பதின் காரணம் என்ன, ? அதோடு சமீபத்தில் வேதாரண்யத்தில் இருந்து வந்த ஒரு வெட்டரினரி டாக்டர் அங்கிருந்து எடுக்கப்பட்டதின் காரணம் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: வேதாரண்யத்தைப்பற்றி தனிக்கேள்வி போட்டால் பதில் தெரிவிக்கிறேன். இப்போது அதிகமாக வெட்டரினரி ஆசுபத்திரி அவசியமாக இருக்கிறது. இதைத் தாமதமின்றி ஏற்படுத்தவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டு வருகிறது. இருக்கின்ற வெட்டரினரி டாக்டர்களை எல்லாம் பல இடங்களுக்கும் போடப்பட்டு வருகிறது. டாக்டர்கள் அதிகமாக கிடைக்காத காரணத்தால் ஸ்டாக்மென்களை நியமித்து வெட்டரினரி டிஸ்பென்ஸரி பல இடங்களிலும் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன.

**Sri M. C. MUTHUKUMARASWAMY**: ஸார், இந்தக் கால் நடை ஆசுபத்திரிகளில் வேலை செய்கின்ற டாக்டர்கள் சில தினங்களில் மட்டும் அங்கு வருகின்ற ஒன்றிரண்டு மாடுகளுக்குச் சிகிச்சை செய்துவிட்டு மற்ற நேரங்களில் சும்மாதான் இருக்கவேண்டியிருக்கிறது. ஆகவே அந்த நேரத்தில் இந்த டாக்டர்கள் சுற்றுவட்டாரத்திலுள்ள இடங்களில் போய் கால்நடைகளை எல்லாம் பார்வையிட்டு ஒரு பட்டியல் சர்க்காருக்கு அனுப்பும்படியாகச் சர்க்கார் ஒரு உத்தரவு பிறப்பிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: சாதாரணமாக வெட்டரினரி டிஸ்பென்ஸரி இருக்கிற இடங்களில் எல்லாம் டாக்டர்களை நியமித்துவருகிறோம். அவர்கள் எந்த சமயத்திலும் அங்கு வருகின்ற வியாதியுற்ற மாடுகளைக் கவனிப்பதற்காக அங்கேயே இருக்கவேண்டுமென்றிருக்கிறது. இதுதவிர மொபைல் யூனிட் வேறு சுற்றுவட்டாரத்திலுள்ள இடங்களுக்கு போவதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

**Sri V. SUBBIAH**: எம்.பி.பி.எஸ்-களுக்கு கொடுக்கப்படுகின்ற சம்பளத்தைவிட குறைவாக இருப்பதினால்தான் பி.வி.எஸ்.ஸி. அதாவது வெட்டரினரி டாக்டர்கள் அதிகமாக கிடைப்பதில்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? ஆகவே இவர்களுடைய ஊதியத்தை உயர்த்துவதற்கு அரசாங்கம் ஒப்புக்கொள்ளுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: அதை ஒப்புக்கொள்ள முடியாது. வெட்டரினரி டாக்டர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் குறைவு என்று சொல்லுவதற்கு இல்லை. அதோடு எம்.பி.பி.எஸ்-படிப்பிற்கும் இதற்கும் வித்தியாசம் இருக்கிறது. கொஞ்சகாலத்திற்கு முன்தான் இவர்களுடைய சம்பளம் உயர்த்தப்பட்டது. ஆதலால் இப்போது இவர்களுடைய சம்பளத்தை உயர்த்துவதற்குச் சர்க்காருக்கு உத்தேசமில்லை.

**Sri A. VEDARATHNAM**: ஸார், வேறு சில வைத்தியங்களில் நாட்டு வைத்தியர்களுக்குச் சிகிச்சை செய்ய அனுமதி அளிப்பது போன்று இந்தக் கால்நடை வைத்தியத்திலும் நாட்டுவைத்திய முறையில் பயிற்சி அளித்து சிகிச்சை செய்ய அனுமதி அளிக்கச் சர்க்கார் முன் வருமா ?

[3rd November 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கொஞ்ச காலத்திற்கு முன் கால்நடை நாட்டு வைத்தியம் அதிகமாக இருந்தது. இப்போது அதிகமாக இல்லை என்று சொல்லலாம். இப்போது அதற்காகத் தான் ஸ்டாக்மென்-கோர்ஸ் படிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

*Pupil-teacher ratio in elementary schools*

820-D Q.—SRI K. VINAYAKAM (on behalf of Sri K. R. Viswanathan): Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the pupil-teacher ratio adopted in elementary schools in the State; and

(*b*) the minimum number of pupils required over and above the strength for a single teacher for appointing an additional teacher?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) 35 pupils in average attendance per teacher.

(*b*) The formula adopted is as follows:—

For the first 35 pupils in average attendance—Ist teacher.

For the second slab of average attendance from 36 and up to 70—2nd teacher.

For the third slab of average attendance from 71 and up to 105—3rd teacher.

And so on in slabs of 35 pupils in terms of overall average attendance.

*SRI N. K. PALANISAMI: ஸார், இரண்டு வாத்தியார்கள் இருக்கக்கூடிய ஒரு பள்ளிக்கூடத்தில், அதில் ஒரு வாத்தியார் பெண் வாத்தியாராக இருந்து அவர் மெட்டர்னிட்டி லீவில் போயிருந்தால் அதற்குப்பதிலாக வாத்தியார்கள் போடுவதில்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா? அப்படியிருக்கும்போது ஒரு வாத்தியாரே 70 பிள்ளைகளையும் வைத்துக்கொண்டு படித்துக்கொடுக்க வேண்டிய நிலை இருக்கிறது என்பதையும் சர்க்கார் அறிவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: அவ்விதமொன்றுமிருப்பதாகத் தெரியவில்லை.

SRI K. ANBAZHAGAN: தலைவர் அவர்களே சாதாரணமாகப் பள்ளிக்கூடங்களில் ஒரு வகுப்புக்கு ஒரு ஆசிரியர் என்று நியமிக்க வேண்டும் என்று பொதுக் கொள்கை இருக்கும் போது 35-லிருந்து 70 பிள்ளைகள் வரை இருந்தால் இரண்டு ஆசிரியர்களை நியமிக்கவேண்டும் என்று இருப்பதால், 35 மாணவர்களிலிருந்து 70-வது மாணவர்கள் ஆகும் வரையில் ஒரு ஆசிரியரே ஏற்றுக்கொள்வது என்பது நடைமுறைக்கு ஒவ்வாத முறையில் இருக்கிறது என்பதை அரசாங்கம் உணருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: பொதுவாக இதைப்பற்றி ஒரு தவறான கருத்து இருந்து வருகிறது. 35 மாணவர்கள் வரை ஒரு ஆசிரியர் போடவேண்டும் என்றும் 70 மாணவர்கள் இருந்தால் இரண்

3rd November 1958]

டாவது ஆசிரியரை போட வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி விளக்கமாக சமீபத்தில், அதாவது 2—4—1948-ல் 639-ம் நம்பராக வெளியாகியுள்ள ஜி.ஒ.-வில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது 35 மாணவர்களுக்கு மேல் ஒரு மாணவர் இருந்தாலும் அதாவது 36-வது மாணவர் இருந்தாலும் இரண்டாவது ஆசிரியரை நியமிக்கலாம், அதேபோல் 70 மாணவர்களுக்கு மேல் 71-வது மாணவர் இருந்தாலும் 3-வது ஆசிரியரை நியமிக்கலாம் என்று விளக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு வகுப்புக்கு ஒரு ஆசிரியர் என்ற முறையில் பார்த்தால் ஒரு வகுப்பில் 10 பேர்கள் இருந்தால் அதற்கும் ஒரு ஆசிரியர் போட வேண்டிய கஷ்டமான நிலைமை ஏற்படுகின்றது. இதைப்பற்றி விசாரித்து ரிப்போர்ட் அனுப்பும்படி டி.பி.ஐ.-யிடம் கேட்கப்பட்டிருக்கிறது. அது வந்ததும் அதை ஆலோசித்துப்பார்த்து தக்க நடவடிக்கை எடுக்கப்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI S. LAZAR : ஸார், இப்போதுள்ள விதிமுறைகளினால் நடைமுறையில் பல பள்ளிக்கூடங்களுக்குக் கஷ்டங்கள் இருக்கின்றன என்று சர்க்காருக்கு ஏதாவது புகார்கள் வந்திருக்கின்றனவா ? அவ்விதம் எத்தனை பள்ளிக்கூடங்களிலிருந்து புகார்கள் வந்திருக்கின்றன ? அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்பதை அறியவிரும்புகிறேன்.

MR. SPEAKER : What is the complaint?

SRI S. LAZAR : After the introduction of this scheme, a number of complaints have been made by the various managements. Is there any proposal before the Government to look into the grievances of managements and redress them?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not understand what he means by 'a number of complaints'. Of course, there has been an agitation that this teacher-pupil ratio should be reduced, i.e., instead of 1 : 35, it should be 1 : 20. As a matter of fact, even before this change, local boards schools had this teacher-pupil ratio. The only thing is, we have now introduced it in aided schools also.

MR. SPEAKER : Whenever hon. Members refer to complaints, they must mention the dates on which they were made and by whom. That will help the Hon. Ministers a great deal in replying to questions.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஸார், இந்த கல்வி முறை அமுலுக்கு வந்ததிலிருந்து சில அரிஜனப் பள்ளிக்கூடங்களிலிருந்து பல ஆசிரியர்கள் வேலையிழந்து இருக்கிறார்கள். ஆகவே கட்டாயக் கல்வி முறை கொண்டு வருவது வரையிலும் இவர்களுக்கு வேலை கிடைப்பதற்குத் தகுந்த வகையில் இந்த விதிகளைத் தளர்த்திக்கொடுக்கச் சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்குத் திட்டவட்டமாக உத்தரவிடப்பட்டிருக்கிறது. இப்போது வேலையில் இருக்கும் யாரையும் வெளியில் அனுப்பக் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் யாரும் வேலை இழக்க மாட்டார்கள்.

SRI D. S. AUTHIMOOLAM : ஸார், இந்த ராஜ்யத்தில் கிட்டத்தட்ட சுமார் 20 ஆயிரம் ஆரம்ப ஆசிரியர்கள் ட்ரெயினிங் படித்து விட்டு வேலையில்லாமல் இருக்கிறார்கள். அவர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைப்பதற்குத் தகுந்த வகையில் இந்த மாணவர்கள் எண்ணிக்கையை 25 என்ற ரேஷியோவில் ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

[3rd November 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : 20 ஆயிரம் போகள் பயிற்சி பெற்று வேலையில்லாமல் இருக்கிறார்கள் என்கின்ற புள்ளிவிவரம் கனம் அங்கத்தினர்களுககு எங்கிருந்து கிடைத்தது என்று தெரியவில்லை. அது மிகவும் தவறு என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : ஓராசிரியர் பள்ளிக்கூடங்களாக இருந்து வருகின்ற சுமார் 80, 90 பள்ளிக்கூடங்களில் சரியானபடி அங்குள்ள டெப்யூடி இன்ஸ்பெக்டர் போய் பார்வையிடாத காரணத்தினால் கூடுதலாக ஆசிரியர்கள் நியமிப்பதில் தாமதம் ஏற்படுகின்றது. ஆகவே எந்தெந்தப் பள்ளிக்கூடங்களில் நியமிக்கவேண்டும் என்பதைக் கணக்கெடுத்து அதில் ஆசிரியர்களைப் போடுவதற்குத் தக்க நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன் வருமா ?

THE HON SRI C. SUBRAMANIAM : ஓராசிரியர் பள்ளிக் கூடம் என்றால் எப்போதும் ஒரு ஆசிரியர் தான் இருக்கவேண்டும் என்ற தவறான கருத்து இருந்து வந்தது. இப்போது விளக்கமாகச் கூடுதல் எண்ணிக்கையுள்ள மாணவர்கள் இருந்தால் கூடுதல் ஆசிரியர்களை நியமிக்க லாம் எனறு அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI V. SANKARAN : ஸார், இப்போதிருக்கின்ற மாணவர்களுடைய விகிதாச்சாரத்தின் படி ஆசிரியர்கள் அதிகமாக இருப்பதாலும், மேற் கொண்டு அதிகப்படி ஆசிரியர்கள் தேவையாக இராததாலும் இன்னும் ஒரு சில வருஷங்களுக்கு ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளை மூடிவிட்டால் ஆசிரியர்களுடைய வேலை யில்லா திண்டாட்டத்தைப் போக்குவதற்கு முடியுமல்லவா ? இதை அரசாங்கம் ஆலோசனை செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த அடிப்படையில் இப்போதும் பரிசீலனை செய்யப்பட்டுதான் வருகிறது. எந்த அளவுக்கு ஆசிரியர்கள் தேவையோ அந்த அளவுக்கு ஆசிரியர் பயிற்சி பள்ளியில் பயிற்சி அளிக்கப்பட வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்.

SRI K. VINAYAKAM : Is the Hon. Minister aware of the fact that the latest Government Order regarding the teacher-pupil ratio has not yet been circulated among most of the aided schools in the City of Madras and that representations have been made by the managements of the aided schools to the authorities concerned in the matter? The authorities also plead ignorance of the Government Order and have prevented appointment of fresh teachers as per the orders contained in the Government Order.

THE HON. SRI C. SUBRAMANIAM : I am sorry that they are not aware of the Government Order. I am sure, this question here would serve some purpose. I shall, however, find out whether the Government Order has not been sent to the schools and if it has not been sent, I shall see that it is sent to them.

SRI J. MATHA GOWDER : ஸார், புதிய பள்ளிகளை ஏற்படுத்தும் போது கூட சமவெளிகளில் 500 ஜனத்தொகை இருக்கவேண்டும் என்று இருக்கும்போது மலைப் பிரதேசத்தைப் பொருத்த வரையில் 300 ஜனத் தொகை இருந்தால் போதும் என்று வைத்திருக்கும்போது, இதே முறையில் ஆசிரியர்-மாணவர் வீதாசாரத்தில் மலைப் பிரதேசத்திலே 35 என்று வரையறுத்திருப்பதை அதற்குக் குறைவான எண்ணிக்கை வைத்து அந்த அளவு எண்ணிக்கையுள்ள மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற முறையை அமைக்க அரசாங்கம் முன் வருமா ?

3rd November 1958]

**THE HON. SRI C. SUBRAMANIAM** : குளிர்ப் பிரதேசத்தில் வேலையை சமவெளியில் செய்வதை விடத் திறமையாகச் செய்யலாம். ஆகையால் இதை மலைப் பிரதேசத்தைப் பொருத்த வரையில் உயர்த்து வதைப் பற்றி யோசிக்க முடியும்.

**MR. SPEAKER** : இப்போது 10 மணியாகிறது. இன்னும் 5 கேள்விகள் இருக்கின்றன. அவைகளை இன்னும் 5 நிமிட நேரம் எடுத்துக் கொண்டு முடித்து விடலாம்.

*Certain concessions to Christians among Backward Classes, Most Backward Classes and ex-Criminal Tribes.*

* 820-E. *Q.*—**SRI V. SUBBIAH** (on behalf of Sri T. Veluchami) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

ஹிந்து ஹரிஜனங்களுக்கு வழங்கப்படுகிற சலுகைகளில் சில கிருஸ்தவ ஹரிஜனங்களுக்கு விஸ்தரிக்கப்பட்டிருப்பது போல் ஹிந்து பின் தங்கிய வகுப்பினர், ஹிந்து மிகவும் பின்தங்கிய வகுப்பார், ஹிந்து மாஜி குற்ற பரம்பரையினர் இவர்களுக்குக் கொடுக்கப்படும் சலுகைகளில் சில கிருஸ்தவ பின்தங்கிய வகுப்பார், கிருஸ்தவ மிகவும் பின்தங்கிய வகுப்பார், கிருஸ்தவ மாஜி குற்றப் பரம்பரையினர் இவர்களுக்கு விஸ்தரிக்க எதேனும் உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : The position is as follows :—

*Backward Classes.*—There is no proposal under the consideration of this Government to extend to the Backward Class converts the concession now enjoyed by the Hindu Backward Classes.

*Most Backward Classes.*—Educational concessions are given to the Most Backward Classes without reference to the religion to which they belong.

*Ex-Criminal Tribes.*—So far as the Harijan Welfare Department is concerned, converts from ex-Criminal Tribes are given all educational concessions enjoyed by the Hindu ex-Criminal Tribes.

As regards Education Department, the question of extending the fee concessions to the converts from ex-Criminal Tribes is under the consideration of the Government.

**SRI A. GOVINDASAMY** : பின் தங்கிய வகுப்பிலிருந்தும், மிகவும் பின் தங்கிய வகுப்பிலிருந்தும் மதம் மாறிய கிருஸ்தவர்களு டைய பொருளாதார நிலையை அனுசரிக்கும்போது, அவர்கள் நிலை மிகவும் கஷ்டமானதாக இருக்கிறது. மதம் மாறிய ஆதித் திராவிடர் களுக்குக் கொடுப்பது போல இவர்களுக்கும் எல்லாச் சலுகைகளையும் கொடுப்பதற்கென்ன ? இதைப் பரிசீலனை செய்து அவர்களுக்கு எல்லாச் சலுகைகளையும் கொடுக்க சர்க்கார் தகுந்த நடவடிக்கை எடுப்பார்களா ?

**THE HON. SRI P. KAKKAN** : நான் சொன்ன பதிலிலே இதைத் தான் சொல்லியிருக்கிறேன். மிகவும் பின் தங்கிய வகுப்பினர் களிலிருந்து மதம் மாறிய கிருஸ்தவர்களுக்கும் கொடுக்கப்படுகிறது, பின் தங்கிய வகுப்பினர்களுக்குக் கொடுக்கப்படுவது போல.

[3rd November 1958

SRI V. SUBBIAH : பிற்பட்ட சமுகத்தினருக்கும், குற்றப் பரம்பரையிலிருக்கக் கூடியவர்களுக்கும், பொருளாதார நிலேயில் மதம் என்ன என்று அறியாத நிலேயில் எல்லாச் சலுகைகளேயும், கல்வி முதலிய எல்லாச் சலுகைகளேயும் கொடுக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் இருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : மதம் மாறியவர்களுக்கு எல்லாச் சலுகைகளேயும் கொடுக்க இயலாது. இப்போது கல்விச் சலுகை கொடுக்கப்படுகிறது என்று சொன்னேன். மிகவும் பின் தங்கிய வகுப்பினர்களுக்கும், எக்ஸ்-கிரிமினல் ட்ரைப்ஸுக்கும் கொடுக்கப்டும் இந்தக் கல்விச் சலுகை மதம் மாறியவர்களுக்கும், இப்போது ஹிந்து மதத்தில் இருப்பவர்களுக்கும் கொடுக்கப்படுகிறது.

*Probation Officers*

* 820-F *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the list of thirty candidates selected by the Madras Public Service Commission for the posts of Probation Officers, as published in the *Fort St. George Gazette*, dated 4th June 1958, have been noted;

(*b*) when they were selected by the Madras Public Service Commission and when they were posted; and

(*c*) if they have not been posted so far, what the reasons are?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The candidates have not yet been appointed.

(*b*) The candidates were selected after an interview conducted by the Madras Public Service Commission during the months of February and March 1958. None of the candidates selected has been appointed so far.

(*c*) These candidates were selected for posts to be sanctioned under one of the plan schemes. The Government of India gave their concurrence to the scheme only in July 1958 and orders sanctioning 19 posts were issued on 13th October 1958. The candidates will now be appointed to the new posts in their turn.

*Silk Industry in Gudiyatham taluk*

* 820-G *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வடாற்காடு ஜில்லா, குடியாத்தம் தாலூகாவில் உற்பத்தியாகும் பட்டை அபிவிருத்தி செய்ய சர்க்காருக்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. Proposals for the development of Silk Industry in Gudiyatham taluk by the establishment of a Training-*cum*-Production Centre in silk reeling and by supplying rearing equipments at subsidised rates to the Sericulturists in the area are under the consideration of the Government.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், குடியாத்தம் தாலுக்காவிலே உற்பத்தி செய்யப்படும் பட்டு மைசூர் ராஜ்யத்திலிருந்து வரக் கூடிய பட்டை விடச் சிறந்தது என்று அதிகாரிகள் ரிப்போர்ட் செய்திருப்பது தெரியுமா ? அங்கே நமது ராஜ்யத்திற்குத் தேவையான பட்டை உற்பத்தி செய்வதற்கு அபிவிருத்திகள் செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தத் திட்டத்தை விஸ்தரிக்க அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது.

*Government Harijan Hostel at Tiruvannamalai*

* 820-H *Q*—SRI P. S. SANTHANAM : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) திருவண்ணாமலையில், சர்க்காரால் நடத்தப்பட்டு வரும் ஹரிஜன ஹாஸ்டலில் 50 பிள்ளைகள் சேர்ந்து படிப்பதற்கு அனுமதி தரவேண்டு மென்று சர்க்காருக்கு மனு வந்ததா ?

(ஆ) அதன் பேரில் சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) No petition has been received by the Government. A proposal to increase the strength of the Aruna Hostel at Tiruvannamalai from 33 to 50 is however under the examination of the Director of Harijan Welfare in consultation with the District Welfare Officer, North Arcot.

*Quarters for Police Subordinate Staff of Sirkali Police Station*

* 820-I *Q*—SRI C. MUTHIAH : கனம் உள்விவகார அமைச்ச அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சீர்காழி போலீஸ் நிலையம் சிப்பந்திகளுக்கு விடுதிகள் எப்போது கட்டப்படும் ?

(ஆ) எவ்வளவு தொகை ? எத்தனை விடுதிகள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The construction of quarters for the Police Subordinate staff at Sirkali Police Station has already been taken up.

(*b*) The cost of construction is estimated at Rs. 1,22,200. Quarters will be provided for one Sub-Inspector, 4 Head Constables and 19 Police Constables.

*Fire Service Stations*

820-J *Q*.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether a list of priority for the location of new fire service stations has been prepared;

(*b*) whether there is any proposal to revise the same in the light of the subsequent happenings in places like Perambalur and Udaiyarpalayam taluks in Tiruchirappalli district; and

(*c*) whether Perambalur or Ariyalur will be given top priority?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The revised priority list for location of new Fire Stations was prepared by the Inspector-General of Police, Fire Service Branch, in March 1958.

(*b*) No, Sir.

(*c*) Does not arise.

[3rd November 1958

SRI S. LAZAR : Is it so rigid and could it not be reviewed in view of the recent happenings in Tiruchirappalli district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no rigidity about it. Government have been revising the priority list. But the limitations of finance is the main difficulty. In the list drawn up there are eight stations and Udaiyarpalayam does not find a place in that list.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், இந்தப் பட்டியல் [போலீஸ் அதிகாரி அவர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. ஒவ்வொரு ஜில்லாவிலும் அநேக இடங்களில் தீயணைக்கும் படை ஏற்படுத்தப்பட்டிருக்கிறபோதிலும், சேலம் ஜில்லா மிகப் பெரிய ஜில்லா, ஜனத்தொகை மிகுந்த ஜில்லா, இங்கே ஒரேயொரு இடத்தில் மாத்திரம், மற்ற ஜில்லாக்களில் 7, 8 என்று இருக்கும்போது, இங்கே ஒரே இடத்தில் மாத்திரம் வைக்கக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தீ விபத்துக்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டு இந்த லிஸ்ட் தயாரிக்கப்படுகிறது. சேலம் ஜில்லாவிலே அதிகத் தீ விபத்துககள் இல்லையென்றால் கனம் அங்கத்தினர் பெருமைப்படவேண்டும்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : What is the basis on which these fire stations are opened? Is it on the basis of population or number of fire accidents or what?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Particularly fire risks involved are taken into account. It is not merely population.

SRI A. R. SUBBIAH MUDALIAR : On a point of order, Sir, சனிக்கிழமையன்று என்னுடைய 789-ம் கேள்விக்கு இன்று பதில் சொல்லுவதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அது என்னவாயிற்று என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : It has been postponed. As soon as the answer is ready it will be placed before the House.

* SRI D. S. AUTHIMOOLAM : On a point of order, Sir. 800-வது கேள்விக்கு பதில் சொல்லும்போது ஆளும்பண்ணை என்ற ஊரே இல்லை என்று சொன்னார்கள். அது சரிதான். இதற்கு இந்த மாதிரி ஊரே இல்லை என்று தகவல் கொடுக்கவேண்டுமா ? சபாநாயகர் அவர்கள் அந்த அங்கத்தினருக்கு ஒரு லெட்டர் எழுதி சரியான பெயர் என்ன என்று கேட்டு அவர் அனுப்பியதும் அந்தக் கேள்வியை சீர் திருத்தக் கூடாதா ? இந்த மாதிரி செய்தால் சட்ட சபையின் காலம் வீணாகாமல் இருக்கும். இதை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER : கேள்வி ஸ்பீக்கரைக் கேட்கவில்லை. நான் எப்படி திருத்தம் செய்ய முடியும் ? கேள்வியை மந்திரி அவர்களுக்கு அனுப்பினேன். மந்திரி அவர்கள் பதில் அனுப்பினார்கள். மந்திரி அவர்கள் அனுப்பிய பதிலைச் சபையின் முன் வைத்தேன். ஆகையால் பாய்ண்ட் ஆப் ஆர்டரைத் தள்ளி விடுகிறேன்.

MR. SPEAKER : Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member]**

## III,—CALLING ATTENTION TO THE NON-PAYMENT OF THE REBATE AMOUNT TO THE WEAVERS OF CO-OPERATIVE SOCIETIES IN MADURAI TOWN.

MR. SPEAKER : Now we will take up the motion under Rule 40 given notice of by the hon. Member Srimathi Lakshmikantham.

* SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : மதிப்புற்குரிய மன்றத் தலைவர் அவர்களே, மதுரை கூட்டுறவு சங்கங்களுக்கு சென்ற மூன்று மாத காலமாக ஏற்கெனவே கொடுக்கப்பட்ட கடன் தொகைகளும், நெசவாளர் சங்கங்களுக்குச் செஸ்மூலம் கிடைக்க வேண்டிய தொகைகளும் கொடுக்கப்படாமல் கூட்டுறவு பாங்கே வைத்துக்கொண்டிருப்பதனாலே, 9 மாதங்களாக ரிபேட் தொகை கிடைக்காமல் இருப்பதால் நெசவாளர்கள் வேலை கிடைக்காமல் கூலி கிடைக்காமல் கஷ்டப்படக் கூடிய நிலையில் இருக்கிறார்கள். இதற்குக் காரணம் என்ன என்பதை நான் கொஞ்சம் அறிவேன். அதாவது சர்க்காருடைய பணத்திற்கு உத்திரவாதம் வேண்டுமென்று மதுரை ஜில்லா கூட்டுறவு பாங்கின் உயர்தர அதிகாரிகள் இந்தக் கூட்டுறவுச்சங்கங்கள் பாங்கின் சிப்பந்திகளில் ஒருவரை முழு நேர ஊழியராகப் போட்டுக் கொள்ள வேண்டுமென்று ஒரு சுற்றறிக்கை அனுப்பியிருக்கிறார்கள். ஆனால் இந்தச் சங்கத்தின் தலைவர்கள் பாங்கின் சிப்பந்தியை முழு நேர ஊழியராகப் போட்டுக் கொள்ள வேண்டுமென்பதை ஒப்புக்கொள்ளவில்லையாதலால், இந்த இருவர்களுக்குமிடையே உள்ள தகராறினால் கஷ்டப்படுபவர்கள் இந்த நெசவாளர்கள்தான் என்று இங்கே குறிப்பிட விரும்புகிறேன். நெசவாளர்கள் அன்றாடம் வேலை செய்தாலொழிய அவர்கள் வயிற்றை நிரப்பிக் கொள்வதற்கு வேறு வழி கிடையாது. எனவே இந்தக் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்ந்துள்ள நெசவாளருக்கு தினசரி வேலை கொடுத்தால்தான் அவர்களுடைய வயிற்றுப் பிழைப்புக்கு வழி ஏற்படும். கூட்டுறவு பாங்க் அதிகாரிகளுக்கும் இந்த சங்கத்தின் தலைவர்களுக்கும் இடையே இருந்து வருகிற அபிப்பிராய பேதமானது நீக்கப்படவேண்டுமென்பதுதான் என்னுடைய முக்கியமான குறிக்கோள். சர்க்காருடைய பணத்திற்கு உத்திரவாதம் வேண்டியதுதான். இருவருக்கும் இடையேயுள்ள அபிப்பிராய பேதம் நீக்கப்பட்டு, கூட்டுறவு சங்கங்களுக்கு கொடுக்கப்படும் எல்லாவிதமான தொகைகளும் கொடுக்கப்பட்டு, இந்த சொஸைட்டிகள் நல்ல முறையில் நடக்க வேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நமது சர்க்காருடைய கொள்கையானது கூட்டுறவுச் சங்கங்களை அதிகப்படுத்த வேண்டுமென்பதுதான். செஸ் நிதி மூலமாக ஏற்பட்டுள்ள சங்கங்களுக்கு மட்டும்தான் இந்த நிபந்தனை ஏற்பட்டிருக்கிறதேயொழிய, அதற்கு முன்பே ஏற்பட்டுள்ள சங்கங்களுக்கு இந்த நிபந்தனை கிடையாது. இந்த இரண்டு சங்கங்களுக்கும் இப்படி வேற்றுமை காட்டப்பட்டு வருவதை நீக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், மதுரை ஜில்லா சொஸைட்டிகளை திண்டுக்கல் பகுதி, மதுரைப் பகுதி, என்று இருவிதமாகப் பிரித்திருக்கிறார்கள். இந்த இரு பகுதிகளிலேயுமே வித்தியாச மனப்பான்மை காட்டப்பட்டு வருகிறது. திண்டுக்கல் பகுதியில் செஸ் மூலமாக நடக்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு, இந்த பாங்கு சிப்பந்தியை முழுநேர ஊழியராக போட்டுக்கொள்ள வேண்டுமென்பது வற்புறுத்தப்படாமலிருக்கிறது. ஆனால் மதுரை சங்கங்களைப் பொறுத்த வரையிலோ அது வற்புறுத்தப்படுவதற்குக் காரணம் என்ன என்று தெரியவில்லை. சங்கங்களுக்கு பாங்கு சிப்பந்தியை முழுநேர ஊழியராகப் போட்டுக்கொள்ள வேண்டுமென்று சொன்னால், வேற்றுமை இல்லாதபடி அது எல்லாச் சங்கங்களுக்கும் ஒரே முறையில் இருக்க வேண்டும்.

இன்னொரு விஷயத்தையும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். புதிய கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுவதற்கு இப்பொழுது இது மிகவும் தடையாக இருக்கிறது. பல நெசவாளர்கள் ஒன்று கூடி பங்குத் தொகையைக்

கட்டி, ரெஜிஸ்தர் செய்ய வேண்டுமென்று சொன்னாலும்கூட, ரெஜிஸ்தர் செய்யப்படாமல் பல சங்கங்கள் இருந்து வருகின்றன. சர்க்காருடைய பணத்திற்கு உத்திரவாதம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது முக்கிய மாக இருந்தாலும், கூட்டுறவுச் சங்கங்கள் நசிந்துபோய் விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பங்கு தொகை கட்டியிருப்பவர்களுக்கு, புதுச் சங்கங்கள் ஏற்படுத்துவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். நான் இங்கேயிருந்து சென்ற பிறகு பாங்கு அதிகாரிகளைப் பார்த்துப் பேசினேன். இருவருக்கும் இடையே யுள்ள அபிப்பிராய பேதத்தை நீக்கியாவது, செஸ் நிதி மூலமாக ஏற்படுத்தியிருக்கிற சங்கங்களுக்குப் பணத்தைக் கொடுத்து விடுங்கள் என்று சொன்னேன்.

MR. SPEAKER : இது 40-வது விதியின் படி கொண்டுவந்துள்ள பிரேரேபணை. கனம் அங்கத்தினர் இதைப்பற்றி 10 நிமிடங்களுக்கு மேல் பேசிவிட்டார்கள். சீக்கிரமாக முடிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : தீபாவளி நெருங்கிவிட்டது. நெசவாளர்களுக்கு அன்றாட வேலை கொடுத்து அவர்களுக்கு வேண்டிய உதவியைச் செய்வதுடன் புதிய கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்துவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர் களையும், கூட்டுறவு இலாகா டைரக்டரையும் கேட்டுக் கொண்டு, முடித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : 40-வது விதிப்படி அமைச்சரைத் தான் கேட்டுக்கொள்ள முடியும் ? கூட்டுறவு இலாகா டைரக்டரை எப்படி கேட்க முடியும் ?

THE HON. SRI V. RAMAIAH : Sir, from 1953 onwards, schemes for the development of handloom industry are being financed by the Government of India from the Handloom Cess Fund and not by the State Government from their own funds. The payment of rebate to the weavers' societies on the sales of handloom cloth is one among the schemes financed from the Handloom Cess Fund. The expenditure on the disbursement of rebate to the weavers' co-operative societies is regulated by the allotment of funds made by the Government of India every year for the purpose. For the year 1957–58, the Government of India allotted a sum of Rs. 71 lakhs to this State towards the rebate scheme. With this grant of Rs. 71 lakhs, it was possible to settle the claims of the weavers' societies in the State for rebate only up to September 1957. The outstanding claims subsequent to September 1957 could not therefore be settled promptly. These claims have had to be settled from the allotment of Rs. 45 lakhs to be made by the Government of India for the rebate scheme during 1958–59. This allotment for 1958–59 was made by the All-India Handloom Board only in July 1958. In view of the delay in the allotment by the All-India Handloom Board, the Government had to sanction advances of Rs. 10 lakhs in April 1958 and Rs. 15 lakhs in July 1958 from the State funds to the Registrar of Co-operative Societies in anticipation of the grant from the Government of India to enable him to meet the claims of the societies at least in part. With these advances from the State funds and also the grant of Rs. 20 lakhs since available from the allotment of Rs. 45 lakhs for 1958–59,

3rd November 1958] [Sri V. Ramaiah]

the Registrar of Co-operative Societies had to take steps to disburse rebate in the societies in the State for the period subsequent to September 1957. He has since settled the claims in all the districts up to end of January 1958. With the balance of funds available from the allotment of Rs. 45 lakhs for 1958–59 the Registrar of Co-operative Societies can meet the claims for the two months, February and March 1958. The claims of societies in the Madurai circle for the two months, February and March 1958, which amount to Rs. 1·43 lakhs are under scrutiny and will be settled shortly.

The societies in the State including those in the Madurai circle have so far preferred claims only up to July 1958. It may be seen from what has been stated so far, that the claims of the weavers' societies in the Madurai circle for the months from April to June 1958 amounting to Rs. 2·26 lakhs could not be sanctioned for want of funds from the Government of India. The Government have already addressed the Planning Commission and the Government of India to increase the allotment for Rebate Scheme for 1958–59 by an additional allotment of Rs. 35 lakhs. On this additional allotment being made, the claims of the societies in the State for rebate for the period from April 1958 will have to be settled.

I may mention here that the Government have been alive to the need for the societies being assisted to proceed with their production uninterruptedly notwithstanding the non-payment of rebate to them. The Deputy Registrars of Co-operative Societies have been instructed to arrange with the local Central Co-operative Banks to allow special accommodation to the weavers' societies pending the receipt by the societies of the rebate due to them. The Central Banks will be sanctioning cash credit to the weavers' societies to be recouped at the time of disbursement of rebate. In the Madurai district, the Director of Handlooms recently discussed the question with the Madurai Central Bank and impressed on the bank the need to see that the societies in the district are not hampered for want of funds. In view this arrangement, there is no difficulty for societies in the Madurai district in getting working capital loan from the Central Bank. In the circumstances, there is no reason for any apprehension that the delay in the payment of rebate, results in unemployment and starvation among the weavers in Madurai town.

## IV.—ANNOUNCEMENTS.

### (1) OPEN PLACES (PREVENTION OF DISFIGUREMENT) BILL, 1958.

MR. SPEAKER: The following motion has been passed by the Council on 1st November 1958:

"That the concurrence of the Legislative Assembly be obtained for setting up a Joint Select Commitee of both the Houses consisting of 24 members (16 members of the Legislative Assembly

and 8 members of the Legislative Council) to consider the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1958 (L.C. Bill No. 8 of 1958) and that the following members of the Legislative Council be selected to serve on the Joint Select Committee :—

1. Sri K. Balasubramania Ayyar.
2. Sri G. Krishnamoorthy.
3. Sri John Asirvatham.
4. Sri T. Joghee Gowder.
5. Sri A. Chidambara Mudaliar.
6. Dr. A. Sreenivasan.
7. Srimathi K. B. Sundarambal.
8. Sri N. Nallasenapathi Sarkarai Manradiar."

## V.—CORRECTION TO AN ANSWER.

MR. SPEAKER : The Hon. Minister for Home wants to correct the answer given by him to the supplementary questions put by Sri A. A. Rasheed and Sri N. K. Palanisami to Question No. 102 on 14th February 1958, and I have permitted him to do so.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, in reply to the supplementary questions asked by Sri A. A. Rasheed and Sri N. K. Palanisami on Question No. 102, on 14th February 1958, it was stated by me that the Wool Processing Centre at Vinnamangalam, North Arcot district, was set up by the co-operation of the Andhra and Mysore Governments and that the capital invested was shared equally by the two Governments. But on verification, I find that the Wool Processing Centre at Vinnamangalam is a joint venture of the Governments of Mysore and Madras, with financial assistance from the Government of India.

## VI.—PRESENTATION OF THE REPORT OF THE RULES COMMITTEE.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I present the
10-20 a.m. report * of the Select Committee appointed to consider the amendments to the Madras Assembly Rules.

MR. SPEAKER : The Business Advisory Commitee will decide when it should be taken up for consideration.

## VII.—GOVERNMENT RESOLUTION.

### AMENDMENT TO THE ESTATE DUTY ACT, 1953 (34 OF 1953)—*cont.*

MR. SPEAKER : We will now take up the Resolution on the Amendment to the Estate Duty Act of 1953. Is it the desire of the Members that we should have a discussion If not, I shall put it to vote. It is left to Members to talk or not.

(The hon. Member Sri R. Sreenivasa Iyer was standing in his seat.)

If he wants, the hon. Member may speak. Not that it is necessary. I request him to be brief.

* Placed separately on the table of the House.

3rd November 1958]

* SRI R. SRINIVASA IYER : ரொம்ப சீக்கிரம் முடித்து விடுகிறேன். இந்தத் தீர்மானமானது இப்பொழுது இந்தச் சபையிலே வரவேண்டுமா என்பதே ஒரு பிரச்னை. அரசியல் அமைப்பு 269-வது பிரிவின்படி estate duty on property other than agricultural land விதித்து அதை மகாணங்களுக்குக் கொடுக்கலாம் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. Estate duty in respect of agricultural land என்பது "ஸ்டெட் ஸப்ஜெக்டாக" போடப்பட்டிருக்கிறது. ஆனால், 252-வது பிரிவின்படி இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாகாணங்கள் இதுப்பற்றித் தீர்மானம் போட்டால், பார்லிமெண்ட்டில் இது பற்றிச் சட்டம் போட்டு, அதுவும் விவசாய நிலங்களைப் பற்றியும் சேர்த்துக்கொள்ளலாம் என்று இருக்கிறது. நமக்கு அனுப்பப்பட்டிருக்கிற மந்திரி அவர்களின் பேச்சில் இதே மாதிரி சொல்லப்பட்டிருக்கிறது. ஆனாலும் கூட, இதுபற்றி ஏற்கெனவே 1955-வது வருஷத்திலேயே கவுன்சிலிலும், அசெம்பிளியிலும், இது விவாதிக்கப்பட்டு, தீர்மானம் போடப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. அப்பொழுது நடந்த விவாதங்களையும் நான் படித்துப் பார்த்தேன். அப்பொழுது அநேகமாக விவசாய நிலங்களுக்கு மரண வரி விதிப்பது பற்றி மாகாணங்களே தீர்மானம் அல்லது சட்டம் போட்டால் நல்லது என்றும், நமது ராஜதானிக்கும் மற்ற ராஜதானிகளுக்கும் நிலத்தினுடைய பொறுமானத்திலுள்ள வித்தியாசங்களைப் பற்றி நாம் தீவிரமாக ஆலோசிக்க வேண்டுமென்றும், விவசாய நிலங்களுக்குக் கூட மரண வரி விதிக்கப்பட்டால், உணவு உற்பத்தி பாதிக்கப்படும் என்றும் விவாதிக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும் கூட, சர்க்கார் மெஜாரிட்டி மூலமாக அந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுவிட்டது. அதன் விவரங்கள் பூராவும் இப்பொழுது சொல்லுவதற்குச் சாவகாசம் போதாது. நான் என்னுடைய பேச்சை ரொம்ப சீக்கிரம் முடிக்கவேண்டுமென்று தலைவர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

இந்த விஷயத்திலே நாம் முக்கியமாகச் சொல்ல வேண்டியது என்னவென்றால், ஒரு லட்ச ரூபாய்க்கு மேற்பட்ட பொறுமானமுள்ள சொத்தை விட்டுவிட்டு, அதற்கு மேலே போனால், அந்த சொத்திற்கு மட்டும் மரண வரி விதிப்பது என்று ஏற்கனவே இருந்தது. அதைச் சமீபத்திலே ரூ. 50,000-ஆக குறைத்து விட்டார்கள். இது நாம் ரொம்ப ஆலோசிக்க வேண்டிய விஷயம். மற்ற மாகாணங்களிலே இது மாதிரி தீர்மானம் போட்டு விட்டார்கள், எல்லோருடன் ஒற்றுமையாக நாமும் இந்தத் தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டுமென்ற முறையிலே இந்தத் தீர்மானம் கொண்டு வரப் பட்டிருக்கிறது என்று நான் சொல்ல விரும்புகிறேன். தற்கால நிலைப்படி 10 ஏகர் நஞ்சை நிலம் வைத்துக்கொண்டிருப்பவர்கள் கூட, 50,000 ரூபாய் பொறுமானமுள்ள விவசாய நிலத்தை வைத்துக்கொண்டிருப்பவர்களாக மதிக்கப்படும். ஏனென்றால், முதலிலே விவசாய நிலங்களுக்கு நில வரியின் பேரில் 20 பங்கு பொறுமானம் போடலாம் என்று இருந்ததை மாற்றி, இப்பொழுது அப்போதைக்கப்போது உள்ள மார்க்கெட் விலைப்படி விலை மதிப்பிடவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. வரவர நிலத்தினுடைய விலை ஏறிக்கொண்டு போவது நமக்குத் தெரியும். ஒரு சமயத்தில் விவசாயப் பொருள்கள், உணவு தானியங்களின் விலை ஏறிக்கொண்டே போகிறது என்று விவாதித்துக் கொண்டிருக்கிறோம். ஒரு சமயத்தில் அதைக் குறைக்க வேண்டுமென்று விவாதித்துக்கொண்டிருக்கிறோம். ஒரு சமயத்தில் உணவு தானியங்களின் உற்பத்தியின் விலை ஜாஸ்தியாகிவிட்டது, ஆகையால் விலையைக் குறைத்தால் விவசாயத்திற்கு கட்டுபடியாகாது, விவசாயத்தை விட்டுவிடும்படி நேரிடும் என்று விவாதிக்கொண்டிருக்கிறோம். பத்து ஏக்கர் நிலம் உள்ளவர்களுக்குக் கூட மரண வரி விதிக்கப்படும் என்று இருப்பதனால், சீக்கிரத்தில் அதை தவிர்ப்பதற்காக நிலத்தைப் பங்கிடும் முறையிலே அல்லது குறைத்துக்கொள்ளும் முறையிலே மக்கள் ஈடுபடுவர். சர்க்கார் வரி போட வெண்டுமென்று சொல்லுவது சகஜம். வரியைக் கொடுக்காமல் இருப்பதற்கு வழி தேடுவது மானிடத் தன்மை. அந்த முறையிலே நிலங்கள் பிரிக்கப்பட்டு, பாகப் பிரிவினை செய்யப்பட்டு, அல்லது விற்பனை செய்யப்பட்டு சிறு சிறு "ஹொல்டிங்களாக" ஆகிவிடும் என்பதை

[Sri R. Srinivasa Iyer] [3rd November 1958

நான் குறிப்பிட விரும்புகிறேன். அதனால் உணவு உற்பத்தி பாதிக்கப்படும். " எகனுமிக் ஹோல்டிங் " எவ்வளவு வேண்டுமென்பது பற்றி நாம் தீர்மானத்திற்கு வரவில்லை. இந்தப் பிரச்னை ரொம்பவும் சிக்கலான பிரச்னை. கனம் நிதி அமைச்சர் அவர்கள் ஓரிரு தினங்களுக்கு முன்பாக இதைப் பற்றி விரிவாக, அழகாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். மார்கெட் விலைப்படி 50,000 பொறுமானமுள்ள நிலம் வைத்திருப்பவர்களுக்கெல்லாம் மரண வரி விதிக்கப்படவேண்டுமா என்ற அளவில் ஆலோசிக்க வேண்டும். மத்திய சர்க்கார் தீர்மானம் கேட்டிருக்கிறார்கள். அவர்கள் கேட்டபடி இதர மாகாணங்களில் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள், நாம் எல்லோருடன் ஒற்றுமையாக இருக்கவேண்டுமென்ற முறையில் இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றி விடக்கூடாது. இப்பொழுது நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கனம் மந்திரி அவர்களின் பேச்சில், எவ்வளவு பேர்கள் இதனால் பாதிக்கப்படுவார்கள் என்ற விவரம்கூட இல்லை. அதுபற்றி நான் அன்று கூடக் கேட்டேன். 50,000 ரூபாய் பொறுமானமுள்ள நிலம் வைத்திருப்பவர்கள், அதாவது இந்த மரண வரி கொடுக்க வேண்டியவர்கள் இந்த ராஜதானியில் எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள் என்ற புள்ளிவிவரம் கூட நமக்குக் கிடையாது. சமீபத்திலே விவசாய வருமான வரி விதிக்கப்பட்டபொழுது, நமது ராஜதானியில் 3,000 அல்லது 4,000 பேர்கள் தான் இந்த விவசாய வருமான வரிக்கு உள்ளாவார்கள் என்று சொல்லப்பட்டது. ஆனால், ஓரிரண்டு தினங்களுக்கு முன், தஞ்சாவூர் ஒரு ஜில்லாவிலே மட்டும் 16,000 பேர்கள் விவசாய வருமான வரி கொடுக்கக்கூடியவர்கள் இருக்கிறார்கள் என்று பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. இது டிபார்ட்மெண்டு மூலமாக எடுத்த புள்ளி விவரம். இதனால் விவசாயம் எவ்வளவு பாதிக்கப்படும் ? விவசாய நிலத்திற்கு மரணவரி விதிப்பது அரசியல் அமைப்பில் 7-வது ஷெட்யூலில் இரண்டாவது லிஸ்டில் 48-வது அயிட்டமாக இருக்கிறது. அந்த முறையிலே நாம் ஏன் இதுபற்றித் தனியாக ஒரு சட்டம் கொண்டுவரக்கூடாது ? இதை நன்றாக யோசிக்க வேண்டும் ஆனால், ஏற்கனவே இந்தத் தீர்மானம் போடப்பட்டது, இப்பொழுது திருத்தின சட்டத்திற்கான இந்தத் தீர்மானத்தைத் தான் ஒப்புக்கொள்கிறோம் என்று வாதிக்கலாம். திருத்தின சட்டம் தான் நம்மை ஜாஸ்தியாகப் பாதிக்கிறது. " எஸ்டேட் டியூடி ஆக்ட்" எனக்கே புரியவில்லை என்று மத்திய நிதி மந்திரி அவர்கள் இதை " இண்டரடியூஸ் " செய்யும்போது சொல்லியிருக்கிறார்கள். ஏதோ சமஸ்கிருதப் பாடம் படிப்பது போல் இருக்கிறது. ஆங்கிலச் சட்டப்படி இந்த சட்டம் போடப் பட்டிருக்கிறது, என்று சொல்லியிருக்கிறார். இந்த சட்டம், சட்டத்தில் அனுபவம் வாய்ந்த பெரிய நிபுணர்களுக்குக்கூடப் புரியவில்லை என்று விவாதிக்கப்பட்டது. 1955-வது வருஷத்தில் சென்னை சட்டசபை கவுன்சிலில் ஏற்கனவே நமது மாகாண லா மினிஸ்டராயிருந்தவர் எனக்குப் புரியவில்லை என்று சொல்லியிருக்கிறார். 10 ஏக்கருக்கு மேற்பட்ட நிலம் வைத்திருக்கக்கூடியவர்கள் மரண வரிக்கு உள்ளானால், நம்முடைய ஸ்டேட்டிலுள்ள நிலைமையிலே உணவு உற்பத்தி எப்படி பாதிக்கப்படும், எவ்வளவு பேர்கள் இதனால் பாதிக்கப்படுவார்கள், சமீபத்தில் விவசாய வருமான வரி போட்டிருக்கிறோம், விவசாய பொருள்களுடைய விலை அடிக்கடி ஜாஸ்தியாக உயர்ந்து இருக்கிறது, ஒரு படி அரிசியின் விலை 13 அணுவிலிருந்து 1 ரூபாய், ரூ. 1-1-0 வுக்கு ஏறியிருக்கிறது என்றெல்லாம் ஒரு பக்கத்தில் " அஜிடேஷன்" இருக்கிறது. மற்ற விலைவாசிகள் ஜாஸ்தியாக இருக்கிறது என்று மற்றொரு பக்கத்தில் " அஜிடேஷன்" இருக்கிறது. " ஊருடன் ஒத்து வாழ் " என்று சொல்லுவதற்கொப்ப மற்ற மாகாணங்களில் தீர்மானம் போட்டுவிட்டார்கள், நாமும் அவர்களுடன் சேர்ந்து தீர்மானம் போட்டுவிடுவோம் என்று சொல்லிவிடலாம். இதிலே வரக்கூடிய வருமானத்தை அந்தந்த ஸ்டேட்களுக்கே உபயோகப் படுத்தப்படும் என்று சொல்லலாம். அது எப்படி வசூலிக்கப்படும் எவ்வளவு வரும், வசூல் செலவு எவ்வளவு போகும் இவைகளையெல்லாம் யோசிக்கவேண்டும். இதையெல்லாம் நாம் ஆலோசித்துப்பார்த்து நம்முடைய ஸ்டேட்டிலேயே ஒரு சட்டம் கொண்டுவரக்கூடாதா என்று என் மனதிலே ஒரு சந்தேகம் தோன்றுகிறது. சர்க்கார் இதைக் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

3rd November 1958] [Sri R. Srinivasa Iyer]

இது தவிர, இந்த வரிவதிப்பில் விவசாய நிலத்தையும் சேர்ப்பதிஞலே, அதாவது "லிமிடேஷன் ஆப் எக்ஸெம்ஷன்" 50,000 ரூபாய் என்று குறைக்கப்பட்டிருப்பதிஞலே, இதஞல் வரக்கூடிய வரி பூராவும் நம்முடைய மாகாணத்திற்குத் தான் வரவேண்டும். அந்தத் தொகையை விவசாய அபிவிருத்திக்குத்தான் உபயோகப்படுத்தவேண்டும் என்பதையும் சர்க்காரின் கவனத்துக்குக் கொண்டு வர நான் ஆசைப்படுகிறேன். இந்தத் தீர்மானத்தைக்கொண்டுவருவதிலே ஆட்சேபித்து பிரயோஜனமில்லை என்பது எனக்குத் தெரியும். நான் ஆட்சேபிப்பதாகவும் நினைத்துக்கொள்ள வேண்டாம். ஆட்சேபனைக்குள்ள விவரங்களைச் சொன்னேன். ஏனென்று கேட்டால், மற்ற மாகாணங்கள் இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றி விட்டன, சென்னை மாகாணம் மட்டும் நிறைவேற்றவில்லை என்று மத்திய அரசாங்கம் தவறுதலாக ஒருக்கால் நினைக்கக்கூடும். மற்றவர்கள் நினைக்கா விட்டாலும் அந்தச் சந்தேகம் எனக்கு உண்டு.

(Deputy Speaker in the Chair.)

எந்த முறையிலும் விவசாயிகளுடைய நிலைமை வரவர மோசமாகிக் கொண்டே வருகிறது. இதைப்பற்றி எவ்வளவோ தடவை இங்கே எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது நிலத்தைப் பிரித்துக்கொடுத்தாலும் நல்லபடி சாகுபடியாகுமோ, அல்லது உணவு உற்பத்தி அதிகரிகுமோ என்பதும் சந்தேகமாகத்தான் இருக்கிறது. இந்தத் தீர்மானத்திஞல் எப்படி அவர்கள் பாதிக்கப்படுவார்கள் என்பது தெரியவில்லை. அந்த முறையில் இதன் விவரங்களைக் கண்டு பிடித்து அதன் பிறகு இந்த தீர்மானத்தை நிறைவேற்றிஞல் நல்லது என்று தோன்றுகிறது. பூரா விவரங்களையும் கொடுத்து விட்டு நிறைவேற்ற வேண்டும் என்பதும், அதஞல் இதை இந்த செஷனில் நிறைவேற்றுமல் அடுத்த செஷனில் ஏன் நிறைவேற்றக்கூடாது என்கிற முறையில் என்னுடைய ஒரு அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்ள விருப்புகிறேன். வணக்கம். 10-30 a.m.

* **Sri V. K. RAMASWAMY MUDALIYAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தத்தீர்மானமானது சில மாதங்களுக்கு முன்பு இவ்விடம் கொண்டு வரப்பட்டு விவாதிக்கப்பட்டது. அப்பொழுதும் கனம் மந்திரி அவர்கள் சொன்ஞர் இது சென்ட்ரல் கவர்ண்மெண்டின் சட்டம், அதைப் பற்றி நம்முடைய அபிப்பிராயத்தைக் கேட்டிருக்கிருர்கள், அதஞல் நாம் அதை அப்படியே அங்கீகரித்துத்தான் ஆகவேண்டும் என்ற முறையில் பேசிஞர். இப்பொழுது முக்கியமாக ஸ்லாப் ரேட் ஒரு லட்சம் என்பதை ஐம்பது ஆயிரம் ரூபாய்க்குக் குறைவாகவுள்ள தீர்மானத்தை அங்கீகரிக்கும்படி மத்திய சர்க்காரிலிருந்து நமக்கு வந்திருக்கிறது. அதில் முக்கியமாக விவசாயிகளுக்கு இது அதிகமாகப் பாதிக்கும் என்பதைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. சமீப காலத்தில், என் சென்ற மாதம் தான் நாம் விவசாய வருமானத்தின் மீது ஒரு வரியைப் போட்டிருக்கிருேம். மற்ற எந்த மாகாணத்திலும் இல்லாத அதிகப்படியான வரியை நாம் விவசாயிகளுக்குப் போட்டிருக்கிருேம். இதைப்பற்றி நான் கனம் மந்திரி அவர்களுக்கு விளக்க வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். அநேக மாகாணங்களில் இப்படி அதிகப்படியான வரியை விவசாயி நிலங்களுக்குப் போடவே இல்லை என்பது நமக்கு நன்றுகத் தெரியும். விவசாய வரி, விவசாய வருமான வரி, போட்டு விவசாய வரியையும் அதிகப்படுத்தியிருக்கிருேம், சென்ட்ரல் இன்கம் டாக்ஸ் ஆக்ட் முறையில் அதிகப்படியாக நாம் விவசாயிகளுக்கு வரிகளைப் போட்டிருக்கிருேம். சர்சார்ஜ் வேறு நாம் அவர்களுக்குப் போட்டிருக்கிருேம். நில வரி, இம்மாதிரி பல முறைகளில் அவர்கள் வரி செலுத்திக்கொண்டு வருகிருர்கள். இப்படி இருக்கும்போது இதை 50,000 ரூபாய் என்று குறைந்த பச்சமாக வைத்தால் அதஞல் விவசாயிகள் அதிகப்படியாக பாதிக்கப்படுவார்கள். சென்ட்ரல் கவர்ண்மெண்ட் கேட்டதை அப்படியே நாம் பாஸ் செய்யவேண்டும் என்கிற கட்டத்தில் நாம் இருக்கிருேம் என்று நமது கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆர். ஸ்ரீனிவாச அய்யர் நன்றுக உணர்ந்து எடுத்துச் சொன்ஞர். அவர் ஒரு தீவிர காங்கிரஸ் வாதி. அவரே அவ்வாறு சொல்வதென்றுல் நாங்கள்

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [3rd November 1958

அதிகாமாகச் சொல்லத்தேவையில்லை. மத்திய சர்க்கார் கேட்பதையெல்லாம் நாம் தீர்மானம் போட்டு பாஸ் பண்ணிக்கொண்டிருந்தால் அதனுல் விவசாயிகள் எவ்வளவு தூரம் பாதிக்கப்படுவார்கள் என்பதைச் சற்று யோசித்துப் பார்க்கவேண்டும், எவ்வளவு வருமானம் அதன் மூலமாக நமக்கு வரும் என்பதை யோசித்துப் புள்ளி விவரங்களை நன்ருக எடுத்துப் பார்க்கவேண்டும். அதன் பிறகு அதை இந்தச் சட்டசபையில் கொண்டு வந்தால் நன்ருக இருக்கும். அப்படியே கொண்டு வரவேண்டும் என்று கனம் மந்திரி அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ஷெட்யூலில் என்ன சொல்லியிருக்கிறது என்று பார்த்தால் **Household goods other than agricultural implements as are necessary to earn his livelihood up to Rs. 2,500 in value.**

ஆகவே 2,500 ரூபாய்க்கு விலக்கு அளிக்கவேண்டும் என்று இருக்கிறது. அது போதாது. சாதாரணமாக அவர்கள் நான்கு ஜதை மாடுகள் வாங்கினுல் சரியாகப் போய்விடும். விவசாயத்திற்கு வேண்டிய முக்கியமான கருவிகள் வாங்கினுல் சரியாகப் போய்விடும். இவைகளுக்கே மூவாயிரம் நாலாயிரம் ரூபாயாகி விடும். சாதாரணமாக நடுத்தர விவசாயிகளுக்கே அப்படி ஆகும்போது அவர்களால் எப்படிப்பயிரிட முடியும் என்பதை யோசிக்கவேண்டும். ஆகவே விலக்குக் கொடுத்திருப்பதை அதிகப்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதன் அடிப்படையில் மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இதிலுள்ள கஷ்டங்களையும் எடுத்துச் சொல்லி, இந்த மாகாணத்தில் தான் அதிகப்படியான வரியைப் போட்டிருக்கிருேம் என்பதையும் எடுத்துச்சொல்லி சட்டசபையில் சொல்லிய அபிப்பிராயத்தையும், இந்த மாகாணத்தின் நிலைமை என்ன என்பதையும் நன்ருக அவர்களுக்கு எடுத்துச் சொல்லி விதிவிலக்குக் கொடுத்திருக்கும் தொகையை இன்னும் அதிகப்படுத்தவேண்டும் என்றும் தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இவைகளையெல்லாம் சொல்லி எவ்வளவு தூரம் குறைக்கச் சொல்ல வேண்டுமோ அவ்வளவு தூரம் குறைக்கச் சொல்ல ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயிகளுக்கு முக்கியமாக வேண்டியது கலப்பை, இரும்பு. விவசாயத்திற்கு இரும்பு வாங்குவதில் அவர்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிருர்கள். அதைப்பற்றி அனேகம் தடவை இங்கே எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் காரணமாகவும் அவர்களுக்கு இப்பொழுது விலக்குக் கொடுத்திருப்பதை அதிகப்படுத்தவேண்டும். இந்தத் தீர்மானத்தினுல் மத்தியதர விவசாயிகள் அதிகமாகப் பாதிக்கப்படுவார்கள் என்பதை மத்திய அரசாங்கத்திற்கு எடுத்துச் சொல்லி எவ்வளவு தூரம் விதிவிலக்கைக் குறைக்க முடியுமோ அவ்வளவு தூரம் குறைக்க ஏற்பாடு செய்யவேண்டும். அவர்களுடைய கஷ்டங்களைத் தவிர்ப்பதற்கும் முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI S. NAGARAJA MONIGAR :** ஆன் எ பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன். இதற்கு முன்பு பேசியபோது ஒரு அங்கத்தினரைப் பார்த்து "அவர் தீவிர காங்கிரஸ் வாதி" என்று குறிப்பிட்டு பேசினுர். சற்று முன்பு சபையின் எதிர் கட்சி தலைவர் அப்படிக் குறிப்பிட்டார். ஆனுல் சீர் திருத்த காங்கிரஸ் வாதிகள் அவ்வளவு தீவிர காங்கிரஸ் வாதிகள் இல்லையா என்பதை அறிய விரும்புகிறேன்.

**DEPUTY SPEAKER : It is not a point of in formation.**

**SRI S. LAZAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்பொழுது கனம் மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய தீர்மானத்தைப் பற்றி இரண்டொரு கருத்துக்களையும் குறைபாடுகளையும் தெரிவிக்க விரும்புகிறேன்.

முதலாவதாக 252 ஆவது பிரிவின் கீழ் அதாவது அரசியல் சட்டப் பிரிவின் கீழ் இந்த அதிகாரத்தை, மத்திய சர்க்காருக்குக் இருக்கக்கூடிய ஒரு அதிகாரத்தை நமக்குக் கொடுத்திருப்பதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது.

3rd November 1958] [Sri S. Lazar]

இதில் குறிப்பாகக் கவனிக்க வேண்டியது, இது போலச் சட்டங்கள்கொண்டு வருகிற நேரத்தில் அதிலும் குறிப்பாக மாகாண ரீதியாக இருக்கக்கூடிய ஒரு அதிகாரத்தை மத்திய சர்க்கார் சட்டம் கொண்டு வருவது என்ற நிலைமை சட்டத்தில் இருந்த போதிலும் அப்படிப்பட்ட சட்டங்களை நாமே கொண்டு வர முடியும் என்ற நிலைமை இருந்தால் அந்த முறை நன்றாக இருக்கும். அந்த முறையில் அப்படிப்பட்ட சட்டங்களை நாமே கொண்டு வரவாய்ப்பு எடுத்துக்கொண்டால் உள்ளபடியே அது நன்றாக இருக்கும். இது என்னுடைய முதலாவததான கருத்து என்பதை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இது போன்ற அதிகாரத்தை மத்திய சர்க்காரே எடுத்து அந்த அதிகாரத்தை நாமே அவர்களுக்குக் கொடுத்து அந்த ரீதியில் இது போன்ற சட்டங்கள் வருவதானது வரவேற்கத்தக்கது. இப்படிப்பட்ட சட்டங்கள் வரவேண்டும் என்று முன் கூட்டியே நாம் தீர்மானித்து, அப்படிப் பட்ட தீர்மானத்தை அவர்களுக்கு நாம் அனுப்பி வைத்து அந்தத் தீர்மானத்தின் அடிப்படையில் மத்திய சர்க்கார் சட்டங்களைக்கொண்டு வந்தால் அது உள்ள படியே நமக்குக் கௌரவத்தை அளிக்கும், அது நமக்கு பெருமையாகவும் இருக்கும். நாமும் பெருமைப்படக்கூடிய அளவில் இருக்கும். ஆனால் மத்திய சர்க்கார் சட்டம் கொண்டு வந்த பிறகு அதை நாம் ஏற்றுக்கொண்டு இருக்கவேண்டுமென்ற முறை இருந்தால் அது சரியல்ல. அப்படியில்லாமல் முன் கூட்டியே நாம் ஒரு தீர்மானம் கொண்டு வந்து ஒரு சட்டத்தைக்கொண்டு வரவேண்டும் என்று மத்திய சர்க்காரைக் கேட்டு அதன் பிறகு மத்திய சர்க்கார் அந்தச் சட்டத்தைக் கொண்டுவந்தால் அது நன்றாக இருக்கும், அது நமக்குப் பெருமையையும் கொடுக்கும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கிற கோரிக்கை ஏற்கெனவே மத்திய சர்க்காரில் இந்தச் சட்டத்தில் ஒரு சில திருத்தங்களைக் கொண்டு வந்திருக்கிறார்கள். கடைசியாக 1958-ல் இந்த திருத்தங்களின் காரணமாக ஒரு சில மாறுதல்கள் எஸ்டேட் டூட்டி ஆக்டுக்கு கொண்டு வந்தார்கள். அரசியல் சட்டத்தின் 252 (2) பிரிவின் கீழ் கொண்டு வந்து அதை நாம் ஏற்றுக்கொண்டு இருக்கிறோம். இதைப்பற்றி நாம் ஏற்கெனவே 1955-ல் தீர்மானித்திருக்கிறோம். அரசியல் சட்டம் 252 (2) பிரிவின் கீழ் இது போன்று திருத்தம் கொண்டு வரவேண்டும் என்று சொன்னால் அதைக்கொண்டு வருவதற்கு மாகாண சர்க்காருக்கு எந்த விதமான உரிமையும் இல்லை என்று தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது.

"Any Act so passed by Parliament may be amended or repealed by an Act of Parliament, passed or adopted in like manner, but shall not, as respects any State to which it applies, be amended or repealed by an Act of the Legislature of that State."

என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதன் முக்கியமான கொள்கை என்னவென்றால் அவர்கள் சட்டம் கொண்டு வந்தால் அதன் பிறகு ஏதாவது திருத்தங்கள் ஏற்பட்டால்—அது பின்னால் ஏற்படலாம்—அதற்கு நமக்கு ஒப்புதல் தெரிவிக்கிறது. ஒவ்வொரு தடவையும் நாம் ஒப்புதலை தெரிவிக்க வேண்டியது அவசியம் இல்லை என்று இருக்கிறது என்பது என்னுடைய தாழ்மையான கருத்து. ஏற்கெனவே இந்தச் சட்டத்திற்கு மூன்று அல்லது நான்கு திருத்தங்கள் மத்திய சர்க்கார் கொண்டு வந்து இயற்றி இருக்கிறார்கள். கடைசியாக இப்பொழுது நாலாவது திருத்தத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இது போன்ற தீர்மானம் சபைக்குக் கொண்டு வருவார்கலேயானால் இதற்கு முன் மூன்று திருத்தங்கள் கொண்டு வந்தபோது இது போன்ற தீர்மானத்தை இங்கே கொண்டு வந்து நிறைவேற்றவில்லை. அதன் காரணம் என்ன என்று புரியவில்லை. ஆகவே இப்பொழுது இருக்கிற தீர்மானம், எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டியிருக்கிற நேரத்தில் அவசியம் இல்லை என்பது எனது தாழ்மையான கருத்து என்பதைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

[3rd November 1958

* THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I feel it is not right at this stage to dispute the principle underlying the levy of this tax. The Estate Duty Act was passed by the Central Government in 1953 and subsequently in the year 1955, we have passed a Resolution agreeing to the levy of the tax on agricultural land. So, we have already agreed to the principle of levy on agricutural land. What we are called upon to pass now is, that as the Central Government have made certain amendments to the Act, they want a Resolution to be passed in this State approving those amendments.

Now, it was said that we have no other option but to pass the Resolution. It is not so. We have the option to refuse. But under what circumstances are we to refuse? We could refuse in the commencement, but not after having accepted the principle. Principle has been once accepted for the levy of the duty on property other than agricultural land, subsequently in the year 1955, we have agreed to the levy of the duty on agricultural land also. Now changes have been recently made in the Parliament with regard to certain exemption, varying the rate and then reducing the allowance for probate duty from 100 per cent to 50 per cent and giving a different schedule for levying the rate, etc. The important change is that the exemption has been reduced from one lakh to Rs. 50,000. These are the only changes. So these changes having been made, they require a Resolution to be passed accepting these.

As for the hon. Member, Mr. Lazar's observation that three other amendments were passed, then no such resolution was called upon to be passed, now when the fourth one is passed, why should we be passing a resolution, I should like to say that our passing this resolution is going to support all the amendments that have been passed and not only one. It is unnecessary that it should be required to be passed at every stage, for the Act will be given effect to only hereafter.

As regards this legislation, it was said that it is not easily understood, it is very difficult and all that. To me it appears to be very simple, in the sense that a levy is made on the value of the property when a person dies and the property passes to his heir or other claimants. The man getting the property gets it without any labour or effort. It is a sort of unearned property. That should be taxed. If a man puts in exertion and makes money, then no such duty will be levied. When he gets the property scot-free, without any effort or labour, then the levy is made.

It was also asked what the proportionate amount would be that will be realised, how many persons would be affected, etc., I have not been able to get the number of persons who will be affected by this levy. But I have got figures about the amount that had been got. In the year 1955–56, it was Rs. 17·56 lakhs, in 1956–57 it was 22·35 lakhs, in 1957–58, it was Rs. 19·59 lakhs, estimated. Now there is an advantage in one sense. By the

3rd November 1958] [Sri M. A. Manickavelu]

Centre administering this Act, the whole question of applying the Act, collecting money, etc., is all done by the Centre as in the case of income-tax and we are getting whatever share that is due to us, that is, the amount that has been levied and collected in this State will be handed over to us. The difficult process of collection is avoided.

The matter is simple. Since we have accepted the principle of levy on agricultural land, we can pass this Resolution now. If we were against that principle, we should have said so even then. But we have accepted the principle. Now what we are called upon to do is, since these amendments have taken place, we are asked to approve those amendments. That is the simple nature of this motion and therefore I request the House to pass this Resolution.

* Sri R. SRINIVASA IYER: கனம் துணைத் தலைவர் அவர்களே, 10-40 a.m.
இந்த விவசாய நிலங்களிலிருந்து 1955-ம் வருஷத்திலிருந்து கிடைக்கிற மரண வரி பூரணமாக நம்முடைய ராஜதானிக்கு வருமா? அல்லது, மற்ற எல்லா ராஜதானிகளில் வருகிற வருமானங்களை யெல்லாம் சேர்த்துக் கணக்குப்போட்டு, அதிலே ஏதோ ஒரு பங்கு பிரித்துக் கொடுக்கப்படுகிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

* The Hon. Sri M. A. MANICKAVELU: The benefit of the additional revenue which will be realised on account of the changes effected by the amending Act will all accrue only to the respective State.

DEPUTY SPEAKER: The question is: (Resolution:—
"Whereas by resolution passed in pursuance of Article 252 of the Constitution, the levy of estate duty in respect of agricultural land in the State of Madras is governed by the Estate Duty Act, 1953 (34 of 1953) passed by Parliament;

And whereas the Estate Duty Act, 1953 (34 of 1953) has been amended by Act 17 of 1954, Act 41 of 1954, Act 36 of 1957 and Act 33 of 1958 passed by Parliament;

And whereas it appears to this Assembly to be desirable that the matters specified in the amending Acts aforesaid in so far as they relate to estate duty in respect of agricultural land should be regulated, in the State by Parliament by law;

Now, therefore this Assembly hereby resolves in pursuance of Article 252 of the Constitution that the matters aforesaid in so far as they are matters with respect to which Parliament has no power to make laws for the State may be regulated in the State by Parliament by law and for this purpose the Estate Duty Act, 1953 (34 of 1953) may be amended accordingly.")

The resolution was put and carried.

## VIII.—MADRAS STATE ELECTRICITY BOARD BUDGET.

DEPUTY SPEAKER: Now we shall continue the discussion on the Madras Electricity Board Budget. Mr. A. Vedaratnam will now speak.

[3rd November 1958

**Sri A. VEDARATHNAM:** கனம் துணைத் தலைவர் அவர்களே, நேற்று நான் பேசியபோது, மின்சார விநியோகத்தை நிரம்ப நம்முடைய மாநிலத்தில் விருத்தி செய்திருக்கிறோம், ஆனால் அதற்கு வேண்டிய கருவிகளுக்கெல்லாம் நாம் அந்நிய நாட்டை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் நிலையில் இருக்கிறோம், அந்த நிலையிலிருந்து நம்மை விடுவித்துக்கொள்ள வேண்டும் என்பதைப்பற்றிக் கூறினேன். அத்துறையில் கனம் அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்தித்தான் வருகிறார்கள். எனினும் நாம் அதில் இன்னும் பூரணத்துவம் பெறவில்லை. மின்சாரத்திற்கு வேண்டிய எல்லா பொருள்களையும் நாம் இன்னும் உற்பத்தி செய்யவில்லை. மிகப் பெரும் பான்மையான கருவிகளை நாம் வெளிநாடுகளிலிருந்துதான் தருவிக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம்.

இப்பொழுது செப்புக் கம்பி (காப்பர் ஒயர்)களுக்குப் பதிலாக அலுமினியக் கம்பிகளை உபயோகிக்க முன்வந்திருக்கிறோம். அது மிக சிக்கனமாகவும், வெற்றிகரமாகவும் இருக்கிறது. அதுபோன்று இன்னும் பல துறைகளில் நம்முடைய கவனத்தைச் செலுத்தவேண்டியிருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்கு நினைவூட்டுகிறேன். நம்முடைய மாநிலத்தில் மின்சாரத்திற்கு வேண்டிய என்ன என்ன பொருள்களை இப்பொழுது நாம் உற்பத்தி செய்கின்றோம், என்ன என்ன பொருள்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டிய நிலைமையில் இருக்கிறோம், அவற்றை இங்கே செய்வதற்கு என்ன முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன என்ற விவரங்களை கனம் அமைச்சர் அவர்கள் தம்முடைய பதிலில் குறிப்பிடுவாரானால் அது பெரிதும் உதவியாக இருக்கும் என்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

அதே சமயத்தில், மின்சார விநியோகம் நிரம்ப நடைபெறுகிறது என்றாலும் அதற்குப் போதிய மின்சார சக்தி நம்முடைய மாநிலத்தில் உற்பத்தி செய்யப்படவில்லை. அந்தத் துறையில் அவர்கள் கவனம் நிரம்ப எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். மேட்டூரில் டன்னல் ஸ்கீம் போன்று, எழு மாதகாலத்திற்குப் பாசனத்திற்காக அளிக்கப்படும் தண்ணீரிலிருந்து மின்சார சக்தியை எடுத்து விநியோகம் செய்வதற்கும், இதுபோன்று பல துறை மூலமாக சக்தியை அதிகரிப்பதற்கும் வேண்டிய முயற்சி எடுத்துக்கொண்டி ருக்கிறார்கள். அவற்றைக்கொண்டுமட்டும் நம்முடைய மாநிலத்தின் தேவைக்குப் போதுமான மின்சாரம் அவ்வளவும் உற்பத்தி செய்ய முடியாது என்பது நன்றாகத் தெற்றென தெரிந்த விஷயம்.

10-50 a.m. எனவே நம்முடைய மாகாணத்தின் தேவைக்கான அதிகமான மின்சார சக்தி உற்பத்தி செய்யவேண்டுமானால் அதற்கு அணு சக்தியைத் தவிர வேறு எந்தச் சக்தியினாலும் அந்தத் தேவையைப் பூர்த்தி செய்ய முடியாது என்பதை நான் அமைச்சர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். சமீபத்தில் அணு சக்திப் பொருட்காட்சியில் நான் பார்த்தேன்—ஒரு கனம் அங்குலம் உள்ள அணு சக்தியை "வெல் லக்விட்டு பங்களோ" என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அந்த "பங்களோ" வானது ஒரு கன அங்குல அணுவில் 1050 வருஷத்திற்குப் போதிய சப்ளை செய்வதற்கு மின்சார சக்தி அடங்கி இருப்பதாக அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. அத்தகைய மின்சார சக்தியை நாம் இப்பொழுது விஸ்தரித்து இருக்கிற அளவுக்கு, நமக்குத் தடை இல்லாமல் மின்சாரம் சப்ளை செய்ய வேண்டுமானால் அந்த அணு சக்தியின் மூலமாகத்தான் அதைச் செய்ய முடியும். அந்தத் துறையில் கனம் அமைசச்ர் அவர்கள் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அவர்களுடைய உரையில் குறிப்பிட்டிருந்தால் சந்தோஷமாக இருந்திருக்கும். அவர் களுடைய பதிலிலாவது சந்தோஷமான அந்தச் செய்தியைப்பற்றிக் குறிப் பிடுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன். கிராமாந்திரங்களில் இந்த மின்சார சக்தியை அதிகமாக விஸ்தரிப்பதற்கு மாட்டுச் சாணத்திலிருந்தும், மலம் போன்ற கழிவுப் பொருள்களிலிருந்தும் "காஸ் ப்ளாண்ட்" மூலம் உற்பத்தி செய்யப்பட்டு அதன் மூலம் கிராமங்களுக்கு மின்சாரத்தை விநியோகிக்க வேண்டும். பம்பாயில், கோராக்கேந்திரம் என்ற ஒரு ஆசிரமத்தில் இந்த "காஸ் ப்ளாண்ட்" மூலமாக கிராமங்களுக்கு மின்சார சக்தியை விநியோகம் செய்கிறார்கள் என்பதைக் கனம் அமைச்சர் அவர்களுடைய

3rd November 1958] [Sri A. Vedarathnam]

கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். பம்பாயில் "காஸ் ப்ளாண்ட்" மூலமாகப் பெரிய தொழிற்சாலைகளும்கூட நடக்கின்றன. "காஸ் ப்ளாண்ட்" மூலமாக மின்சார சக்தியை விநியோகித்து கிராமங் களில் உள்ள ரஸ்தாக்களுக்கு விளக்குகள் போடமுடியும். இந்த விஷயத்தையும் கனம் அமைச்சர் அவர்கள் ஆலோசனை செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோன்று கிராமங்களில் மாட்டைக் கொண்டு மின்சார சக்தியை உற்பத்தி செய்து அதன் மூலமாக கிராமங்களுக்கு மின்சார சக்தியை விஸ்தரிக்கலாம். பண்டித ஜவஹர்லால் நேருவெல்லாம் அந்த இயக்கத்தைப் பார்த்தது பற்றிய படங்கள் எல்லாம் பத்திரிகைகளில் வந்திருக்கின்றன என்பதைக் கனம் அமைச்சர் அவர் களுக்கு நினைவூட்டுகிறேன்.

மின்சார சக்தியை விநியோகிக்கின்ற இடங்களில் எல்லாம் பல குறை பாடுகள் இருக்கின்றன. மின்சார சக்தியை ஏராளமாக விஸ்தரித்துக் கொண்டுபோய், ஓயாமல் மின்சாரவெட்டுக் குறைபாடுகள் வருமானால் விஸ்தரிப்பை நிறுத்திவிட்டு இருக்கக்கூடிய இடங்களில் பூரணமாக சப்ளை செய்ய முடியும் என்ற நிலையை ஏற்படுத்திக்கொண்டு, பிறகு விஸ்தரிப் பதற்காக நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டால் அதனால் பலன் அதிகமாக இருக்குமென்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த மாதிரித் துறைகளில் பம்பாய் கார்ப்பரேஷன் பல ரஸ்தாக்களில் விளக்குகளுக்கு மின்சாரம் விநியோகிக்கும் முறையில் பழுது இல்லாமல் இருந்து வருவதை யெல்லாம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

அதோடு தேசிய மயமாக்கப்படும் இந்தத் திட்டம் எந்தக் காலத்திலே பூர்த்தி செய்யப்படும் என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் முதலில் தனி நபர்கள் நடத்தும் லாபகரமான விநியோக ஸ்தாபனங்களையெல்லாம் எடுத்துக்கொள்ளாமல், முனிசிபாலிடிகளிடமும், ஸ்தல ஸ்தாபனங் களிடமும் இருக்கிற மின்சார விநியோகப் பொறுப்பை ஏன் முன்னதாக எடுத்துக்கொள்ளவேண்டுமென்பது எனக்குத் தெரியவில்லை. இப் பொழுது மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கத்திற்கு அதிகாரங்களை எல்லாம் கொடுக்கவேண்டுமென்கிறபோது, கிராமப் பஞ்சாயத்துக் களிடமும், ஸ்தல ஸ்தாபனங்களிடமும் இப்பொழுது இருக்கிற உரிமையை ஏன் நாம் பறித்துக்கொள்ளவேண்டும் என்பது எனக்கு விளங்கவில்லை. அப்படித் தனி நபர்களுக்கு இருக்கிற அந்த விநியோக உரிமைகளையெல்லாம் தேசிய மயமாக்கிய பிறகு முனிசிபாலிடிகளுக்கு வருவது உசிதம் அல்லவா என்று சிந்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ஏனெனில் இப்பொழுது நாம் தனி நபர்களிடத்தில் இருந்து எடுத்துக்கொண்டிருக்கிற ஸ்தாபனங்கள் எல்லாம்கூட லாபகரமாக நடந்துகொண்டு வருவதாகத் தெரியவில்லை. முதலில் லாபம் வரக்கூடிய ஸ்தாபனங்களை எடுத்துக்கொண்டு கடைசியில் நஷ்டம் வருகிற இடத்துக்குப் போவதுதான் சரியான முறை என்று கருதுகிறேன். அதில் தவறு இருக்குமானால் கனம் அமைச்சர் அவர்கள் விளக்கிக் கூறும்படி கேட்டுக்கொள்கிறேன். இந்த விநியோக முறையில் இன்னும் பல குறை பாடுகள் இருப்பதை அவர்கள் கவனத்திற்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

ரயில்வே லைன்களைக் க்ராஸ் பண்ணி அந்தப் பக்கத்திற்கு லைன் போகவேண்டுமென்றால் மின்சார விநியோக ஸ்தாபனத்தார் அதை விஸ்தரிக்கத் தயாராய் இருந்தபோதிலும்கூட, ரயில்வே அங்கீகாரம் அளிப்பதில் பெரிய தடை ஏற்பட்டு வருகின்றது. சாமானியமாக அவர்கள் அங்கீகாரம் கொடுப்பதில்லை. இதை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு கால தாமதமின்றி, உடனுக்குடன் காரியங்கள் நடைபெறுவதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதிக தொலைதூரத்திற்கு மின்சார சக்தி செல்ல வேண்டிய இடங்களில் 220 "வோல்டேஜ்" இருக்க வேண்டிய இடங்களில், சில சமயங்களில் ரொம்பவும் குறைந்து அங்கு இருக்கக்கூடிய ரேடியோக்கள் முதலியன வேலை செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டுவிடுகின்றன. இந்த மாதிரியான

குறைபாடுகள் எல்லாம் இல்லாமல் "பர்பெக்ட்" ஆக மின்சார விநியோகம் நடைபெறுவதற்குச் சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : **The time allotted to each Member is ten minutes.**

SRI W. P. A. R. CHANDRASEKARAN : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, நமது மின்சார அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் 1957–58-ம் வருஷ மின்சார போர்டின் அறிக்கையைப்பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கிராமாந்திரப் பகுதிகளில் மின்சார வினியோகம் முன்னணியில் நிற்கிறது என்று அமைச்சர் அவர்கள் தம்முடைய அறிக்கையில் தெரிவித்துள்ளார்கள். மிகவும் வரவேற்கத் தக்க விஷயம். அதாவது லட்சிய எண்ணிக்கை "டார்ஜெட் பிகர்ஸ்" ஆயிரம் கிராமங்கள் என்றும், பத்தாயிரம் பம்பு செட்டுகள் என்றும் வைத்து முன்னேறி இருக்கிறோம் என்று அமைச்சர் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். இந்த லட்சிய எண்ணிக்கையை அதிகப்படுத்துவது சாத்தியமாகுமா என்பதை ஆராய்ந்தறிந்து அதை அதிகப்படுத்தி விநியோகத்தை விஸ்தரிக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களை நான் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக இந்த விவசாய நிலங்களுக்கு மின்சார விநியோகம் கொடுப்பதில் "Grouping of Agricultural Lands" என்ற வழி முறையைக் கடைப்பிடித்து, அந்த முறையில் ஷிப்டு சிஸ்டத்திலும் விநியோகிக்கப்படுகிறது. அந்த மாதிரி நிலையில் காலை ஷிப்டில் இருக்கிற ஒரு விவசாயி நாற்றுநட வேண்டியிருந்தால், சாயந்திரம் 4 அல்லது 5 மணிக்கு நாற்றுநட வேண்டியிருந்தால், அந்த ஷிப்டு சிஸ்டம் அவனுக்குப் பாரமாக இருக்கிறது. அதன் காரணமாக சூப்பர்வைசர்களின் தயவை எதிர்பார்க்கும் நிலைமையில் விவசாயிகள் இருக்கிறார்கள். இந்தமாதிரி நிலைமை இருப்பதால், செல்வாக்கு உள்ளவர்களும், செல்வம் படைத்தவர்களுமே பயன் அடைய முடிகிறது. ஆகவே அந்த மாதிரிக் காரியங்கள் ஏற்படாதபடி மின்சார சக்தி பூரணமாகக் கிடைக்கும் இடங்களில் "டிரான்ஸ்பார்மர்"-கள் போதுமான அளவில் இல்லை என்ற பிரச்சனை மட்டும் ஏற்படாதபடி அதாவது, "பிக் லோடு" ஏற்பட்டிருப்பதைத் தாங்க முடியாத "டிரான்ஸ்பார்மர்" இருக்கும் இடங்களில் அவைகளை மாற்றி அந்த இடங்களில் உள்ள நிலங்களுக்கு மின்சார சக்தி விநியோகம் செய்ய தகுதிக்குத் தகுந்த பெரிய "டிரான்ஸபார்மர்களை" ஏற்படுத்தி அந்த ஷிப்டு சிஸ்டத்தை அறவே மாற்றவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இன்னும் ஒரு விஷயம். அதாவது சென்ற ஆண்டுவரை ஒவ்வொரு
11 தடவையும் "கட்" ஏற்படுத்தி வரும்பொழுது சூப்பர்வைசர்கள் தயவில்
a.m. இந்த விவசாயிகள் இருந்துவந்தார்கள். ஆகவே விவசாய நிலங்களுக்கு மட்டும் பவர் கட் செய்வதிலிருந்து விலக்கு அளித்து விவசாய நிலங்களுக்கு முதல் ப்ரையாரிடியும் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதுமாத்திரம் அல்ல. ப்ளாண்டேஷன் என்று சொல்லப்படும் மலைத் தோட்டங்களுக்கு ஏலக்காய் எஸ்டேட்டில் ரேடியேஷன் மூலம் ஏலக்காய் பாடம் செய்யப்படுகிறது. விறகுப் பற்றுக்குறையை முன்னிட்டு இதற்கு மின்விசியை உபயோகப்படுத்தலாம். இன்னும் காபி, பல்ப்பர் முதலிய வற்றுக்கும் மின்சக்தியை விநியோகிக்கலாம். மேலும் Labour quarters hospital போன்றவைகளுக்கும் மின்சாரம் அத்தியாவசியம். ஆகவே, மலைத் தோட்டங்களுக்கு முதலிடம் அளித்து மின்சார சப்ளை செய்யக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அது தவிர ஹரிஜன் காலனிகளுக்கு மின்சார விநியோகம் கொடுக்கும் தருவாயில் ஹரிஜன் வெல்பேர் பண்டிலிருந்து 1.5 லட்சம் இந்தப் பக்கம் divert பண்ணி உதவி செய்வதற்கு வழிவகை செய்திருக்கிறார்கள். அது போதாது. ஹரிஜன் காலனிக்கு விளக்கு வசதி செய்துகொடுப்பது எவ்வளவு முக்கியமோ அதைவிட முக்கியமானது அந்தக் காலனியில்

குடி தண்ணீர் வசதி செய்து கொடுப்பது, பாத் ரூம், கக்கூஸ் வசதி செய்து கொடுப்பது. குடி தண்ணீர் சப்ளை செய்ய, பாத் ரூம், கக்கூஸ் முதலியவற்றுக்கு நீர் சப்ளை செய்ய மின்சார வசதி செய்து கொடுப்பதை மிகவும் முக்கியமாக எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். (ஸ்ரீ வி. ராமையா : இது அவ்வளவு முக்கியமா ?) ஆமாம். ஏனென்றால் பொது சுகாதாரத்திற்கே அடிப்படையானது. ஆகவே ஹரிஜன் வெல்பேர் பண்டிலிருந்து 1·5 லட்சத்திற்கு அதிகமாக வேண்டுமானாலும் எடுத்துக்கொண்டு இந்த வசதியைச் செய்துகொடுப்பதில் முதலிடம் காட்டவேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அதுமாத்திரம் அல்ல. இன்னும் அமைச்சர் அளித்த அறிக்கையில் மின்விசை ஜல சக்தி போன்ற அநேக வழிகளில் உற்பத்தி செய்யப்படுவதாகச் சொன்னார்கள். இந்தச் சமயத்தில் பெரியார் ஆற்றில் மின்விசை தயாரிப்பு ஆரம்பித்தபோது கனம் முதல் அமைச்சர் போய் ஆரம்பித்துவைத்து சிறுசிறு ஆறுகளையும்கூட இதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். பழனி மலையில் குடவனாறு இருக்கிறது. சிறு மலையில் மாவுத்தானாறு இருக்கிறது. இந்த இரண்டு கிராமங்களிலும் சோதனை நடைபெறுகிறது. இவற்றைப் பற்றி ஒன்றும் அறிக்கையில் குறிப்பிடவில்லை. இந்த ஆற்றுத் திட்டங்கள் எந்த அளவில் இருக்கிறதென்பதை கனம் அமைச்சர் அவர்கள் தம் பதிலிலாவது தெரிவிப்பார்கள் என்று நம்புகிறேன்.

அதுமாத்திரம் அல்ல. இந்தத் திட்டங்களைப் போடும்போது ஒரு செலவு பட்டியல் போட்டு அதிலிருந்து எவ்வளவு வருமானம் வரும் என்று பார்த்து 10 சத விகிதம் லாபமாவது கிடைக்கும் என்றால் அந்தத் திட்டத்தை எடுத்துக்கொள்ளலாம் என்று இருக்கிறது. அது போதாது. 18 சத விகிதம் என்ற அடிப்படையில் மாற்றியமைக்க வேண்டும் என்று அறிக்கையில் இருக்கிறது. இந்த 18 சத விகிதம் எந்த அடிப்படையில் கணக்கிடப்படுகிறது. சதவிகிதம் என்ற அடிப்படை வீக்க தூக்கத்திற்குத் தகுந்தவாறு, தானே மாறிக்கொள்ளாதா ? பின் எதற்காக, இவற்றை பற்றியெல்லாம் அமைச்சர் அவர்கள் தம் பதிலில் விளக்கம் தர சத விகிதாசாரத்தை உயர்த்தவேண்டும். ஆகவே பழைய 10 சத விகிதத்திலேயே உத்தேசம் கணிக்கப்படும்போது அனுசரிக்க வேண்டுமாய் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக மின்சார போர்டு அமைத்திருக்கிறார்கள். அதற்கு ஸ்டேட் லெவலில் consulting கவுன்சில் இருக்கிறது. ஆனால் லோகல் அட்வைசரி கமிட்டி ஏன் ஏற்படுத்தவில்லை என்று தெரியவில்லை. அவ்வாறு ஏற்படுத்துவார்களா இல்லையா என்றே தெரியவில்லை. பொது மக்கள் இதைப்பற்றி சந்தேகமாகவே இருக்கிறார்கள். அதை உடனே ஏற்படுத்தி கிராமாந்திரங்களிலும் tran formers தேவைப்படும் அளவிற்கு ஏற்படுத்தியும், அடாமிக் எனர்ஜியைக் கொண்டு மின்விசையை விஸ்தரிக்க வேண்டிய ஏற்பாடும் செய்யவேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். அணுசக்தியைக் கொண்டு மின்விசையை உற்பத்தி செய்ய சர்க்கார் நினைக்குமானால் இதர மின்சாரசக்தி பூரணமாக, அபிவிருத்தி அடையாமலிருக்கும். இந்த சமயம்தான், சரியான சந்தர்ப்பம் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

**Sri N. S. RAMALINGAM :** கனம் துணைத் தலைவர் அவர்களே, நமது ராஜ்யத்தில் மின்சார இலாகா செய்துவரும் காரியங்களைப்பற்றி, அவர்களது சாதித்துள்ள சாதனைகளைப் பற்றி நாம் மிகவும் பெருமை படுகிறோம். இதற்கு அங்கு வேலை செய்யும் சாதாரண தொழிலாளர்கள் முதற்கொண்டு மந்திரி சபைவரையில் சம்பந்தப்பட்ட எல்லோரையும் பாராட்டுகிறோம். நமது ராஜ்யம் மின்சார சக்தி உற்பத்தி, கிராமங்களுக்கு மின்சார சக்தி விநியோகம் முதலிய எல்லாவற்றையும் மற்ற ராஜ்யங்களைவிட முதலில் இருக்கிறது. அதற்குக் காரணம் இந்த இலாகாவில் உள்ளவர்கள் அதிக அக்கறையுடனும், உற்சாகத்துடனும் வேலை செய்வது

[Sri N. S. Ramalingam] [3rd November 1958

தான் சமீபத்தில் அவர் கோரிய கடன் சில நிமிடங்களுக்குள்ளே, சேர்ந்த தென்பது மக்களுக்கு இந்த போர்டாரிடத்தில் நம்பிக்கை இருக்கிறது என்பது
11·10 a.m. தான். ஆனால் இந்த சமயத்தில் அரசாங்கத்திற்கு ஒரு விண்ணப்பத்தைச் செய்துகொள்ள விரும்புகிறேன்.

அரசாங்கம் 4 சதவிகித வட்டிக்கு பொதுமக்களிடமிருந்து கடன் வாங்கி யிருக்கிறது. ஆனால் அரசாங்கத்தார் மின்சார போர்டிற்கு கொடுத் திருக்கும் கடன்களை 5½ சத விகித வட்டிக்கு கொடுத்திருக்கிறார்கள். மின்சார போர்டு, தான் அரசாங்கத்துக்கு திருப்பிக் கொடுக்கவேண்டிய கடன் தொகைக்கும் வட்டித் தொகைக்கும் வேண்டிய பணத்தை உபயோகிப்பவர்களிடமிருந்து வசூலிக்கிறது. எனவே அரசாங்கத்தார் அதிக வட்டிக்கு மின்சார போர்டிற்குக் கடன் கொடுத்தால் உபயோகிப் பவர்கள் செலுத்த வேண்டிய கட்டணம் அதிகமாகும். அரசாங்கத்தார் மின்சார போர்டு கடனுக்கு தங்களுடைய வட்டி விகிதத்தை குறைகக வேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக பெரியாறு திட்டத்தை மின்சார போர்டு இவ்வளவு சீக்கிரத்திலும் குறைந்த செலவிலும் நிறைவேற்றியிருப்பது குறித்து நாம் எல்லோரும் மகிழ்ச்சியடையலாம். இந்தத் திட்டம் 3½ வருஷங்களுக்குள் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. தேவைப்பட்ட ஜெனரேட்டர்கள் தாமதமின்றி வந்திருந்தால், இன்னும் 6 மாதங்களுக்கு முன்னதாகவே திட்டத்தை நிறைவேற்றியிருக்கலாம் என்று கனம் மந்திரி தெரிவித்திருக்கிறார். இத்திட்டத்தை காலாகாலத்தில் நிறைவேற்றுவதற்கு ஒத்துழைத்த அண்டை ராஜ்யங்களையும் வெளிநாடுகளையும் பாராட்டவேண்டும். மதிப் பிடப்பட்ட செலவில் ஒரு கோடி குறைவாகவும் குறித்த காலத்திற்கு ஒரு வருஷத்திற்குள்ளும் திட்டத்தை நிறைவேற்றிய பிரதம எஞ்சினியரையும் மின்சார அமைச்சரையும் நாம் புகழாமல் இருக்கமுடியாது. அவர்களுக் குத் தமிழ் நாட்டு மக்களின் சார்பில் வாழ்த்துக்களையும் புகழுரைகளையும் தெரிவித்துக்கொள்கிறேன். மற்ற ராஜ்யங்களுடன் ஒப்பிடும்போது கிரா மங்களுக்கு மின்சார வசதி செய்து தருவதில் நமது ராஜ்யம் முன்னணியில் நிற்கிறது. இருந்தாலும், மொத்தம் மின்சாரம் தேவைப்படும் கிராமங் களில் 1/5 பங்கு கிராமங்களுக்குத்தான் மின்சார வசதி நமது ராஜ்யத்தில் செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது என்று அறிக்கையில் தெரிவிக்கப்பட்டிருக் கிறது. அணு சக்தியின் மூலம் மின்சாரம் உற்பத்தி செய்யக்கூடுமானால் தான், மற்றெல்லா கிராமங்களுக்கும் மின்சாரம் அளிக்க முடியும் என்று நினைக்கிறேன். சமீபத்தில் திருவனந்தபுரத்தில் நடந்த தென் மண்டலக் கவுன்சில் கூட்டத்தில் மத்திய மந்திரி ஸ்ரீ பந்த், அணுசக்தியைக்கொண்டு மின்சாரம் உற்பத்தி செய்வதுபற்றி யோசிக்கப்பட்டு வருவதாகத் தெரி வித்தார். அது சாத்தியப்படுமானால், அந்த முறையை நமது ராஜ்யத்தில் கனம் மந்திரி கொண்டுவருவார் என்பதில் எனக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. எல்லா முயற்சிகளையும் செய்து தமது பதவி காலத்திற்குள் எல்லா கிராமங்களுக்கும் மின்சார வசதியைச் செய்து கொடுத்த பெரு மையை கனம் அமைச்சர் இராமையா அவர்கள் அடைய வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன்.

(Mr. Speaker in the Chair.)

மின்சார போர்டிற்கு ஆலோசனைக் குழுக்கள் ஜில்லா ரீதியிலும் ராஜ்ய ரீதியிலும் அமைக்கப்படுவதாகக் கனம் மந்திரி சொன்னார். அதை நான் வரவேற்கிறேன். மின்சார போர்டுக்கு ஆலோசனை கூறுபவர்களுள் எத் தனையோ நிபுணர்கள் இருந்தாலும், உபயோகிப்பவர்களாக இருந்து அனு பவம் பெற்றவர்களும் அவர்களுள் இருக்கவேண்டும். அவர்களும் பல நல்ல யோசனைகளைச் சொல்லக்கூடும். "only the wearer knows where the shoe pinches" என்று ஒரு ஆங்கிலப் பழமொழி உண்டு. அதுபோல, உபயோகிப்பவர்களாக இருந்த அனுபவப்பட்டவர்கள் தங்கள் கஷ்டங்களை யும், கஷ்டங்களை நீக்குவதற்குரிய யோசனைகளையும் சொல்லக்கூடும். எனவே அவர்களும் இந்தக் குழுக்களில் இடம்பெறுவதற்குரிய ஏற்பாட்டைச் செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

3rd November 1958] [Sri N. S. Ramalingam]

மின்சார போர்டார் மின்சாரம் வினியோகம் செய்யும் பகுதிகளில் அதிக கிராமங்கள் மின்சார வசதி பெற்றிருக்கின்றன. ஆனால் லைசென்ஸ் உள்ள பகுதிகளில் அவ்வளவு கிராமங்கள் மின்சார வசதி பெற வில்லை. கனம் மந்திரி கொடுத்துள்ள விவரங்களிலிருந்தே இது தெரிய வரும். இந்த நிலைமையை மாற்றவேண்டும். அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். இதற்குச் சங்கரன்கோயில் தொகுதி அங்கத்தினர் சொன்ன மாதிரியான ஏற்பாட்டை யாவது செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் தான் மின்சாரம் ராஜ்யத்தில் எல்லா கிராமங்களுக்கும் கிடைக்கும்.

விவசாயிகளிடமிருந்தும் ஏழைகளிடமிருந்தும் மின்சாரத்திற்கு அதிகக் கட்டணம் வாங்கக்கூடாது. அவர்களைப் பொறுத்தவரையில், அவர்கள் மின்சாரத்திற்குக் கொடுக்க வேண்டிய கட்டணத் தொகையைக் குறைக்க வேண்டும். வேண்டுமானால் கல்யாணம் போன்ற காரியங்களுக்காக மின் சாரம் உபயோகிக்கும்போது அவர்களிடமிருந்து அதிக விகிதத்தில் கட் டணம் வசூலித்துவிட்டு மற்ற காரியங்களுக்காக அவர்கள் உபயோகிக்கும் மின்சாரத்திற்கு குறைந்த விகிதத்தில் கட்டணம் வசூலிக்கலாம்.

சமுதாய அபிவிருத்தித் திட்டம், தேசீய விஸ்தரிப்புத் திட்டம் முதலிய திட்டங்களில் "ஆர்டிபிஷியல் இர்ரிகேஷன்" (செயற்கை பாசனத்திற்க்கு) க்கு பணம் ஒதுக்கப்பட்டு அது செலவிடப்படாமல் இருக்கிறது. அதைச் செலவிட ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். அந்தப் பணத்தை (ஆற்று) "ரிவர் பம்பிங் ஸ்கீமிலும்", கிணறு "வெல் பம்பிங்ஸ்கீமிலும்" செலவழிக்க முன்வர வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன்.

குந்தா திட்டம் போன்ற திட்டங்கள் நிறைவேற்றப்படுவதற்கு தேவைப் படும் பல இயந்திரங்கள் அன்னிய நாடுகளிலிருந்து வரவழைக்கப்படவேண்டி யிருக்கின்றன. "பவர் ட்ரில்லிங் மெஷின்" போன்ற இயந்திரங்கள் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட வேண்டியிருக்கின்றன. இவைகள் நம் நாட்டிலேயே தயாரிக்கப்படுவதற்கு ஏற்பாடு செய்து அன் னியச் செலாவணி நெருக்கடியைக் குறைக்க வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன்.

**Sri S. M. ANNAMALAI** : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, உண்மையிலேயே, மின்சார போர்டின் வரவு செலவு கணக்கை சமர்ப் பித்திருக்கும் அமைச்சரவையை நான் பாராட்ட முடியாது. வேண்டுமா னால், "குழந்தை இல்லாதவள் குழவிக் கல்லை எடுத்து முத்தமிட்டது போல", பாராட்டத்தக்க காரியத்தை இந்த அமைச்சரவை செய்யாவிட்டா லும், பாராட்டத்தக்க காரியத்தை இந்த அமைச்சரவை செய்திருப்பதாக நான் பாராட்டுரை கூறலாமே தவிர, உண்மையிலேயே பாராட்டுரை கூற முடியாது. அதற்குக் காரணங்கள் கூறுகிறேன். நம் மாநிலத்தில் 19,000 சொச்சம் கிராமங்களும், 7,300 நகரங்களும் இருக்கின்றன. அவைகளில் "இண்டஸ்ட்ரியல் ஸப்ளை" யாக மின்சாரம் மொத்தம் உற்பத்தியில் 56·5 சதவிகிதம் தான் உபயோகிப்படுத்தப்படுகிறது. விவசாயத்திற்கும் நீர்ப்பாசனத்திற்குமான காரியங்களுக்காக 19 சதவிகிதம் தான் உபயோகப் படுத்தப்படுகிறது. சுமார் 19,000 கிராமங்கள் இந்த ராஜ்யத்தில் இருக்கும் போது 7,000 சொச்சம் கிராமங்களுக்குத்தான் மின்சாரம் வினியோகம் செய்யப்படுகிறது. சுமார் 7,300 நகரங்கள் இங்கே இருக்கும்போது 259 நகரங்களுக்குத்தான் மின்சார வசதி செய்துகொடுக்கப்பட்டிருக்கிறது. மேலை நாடுகளில் "பெர் காபிடா கன்ஸம்ஷன்" 2,000-லிருந்து 4,000 யூனிட் வரை இருக்கிறது. நம் மாநிலத்தில் 36 யூனிட் தான் பயன்படுத்தப்படு கிறது. கிராமங்களில் மிகவும் சொற்பமான பேர்களுக்கே மின்சார வசதி அளிக்கப்பட்டிருக்கிறது. சென்ற மார்ச் மாதம் வரவு செலவு திட்டத்தில் "The actual expenditure incurred on rural electrification during 1956–57 was Rs. 514 lakhs. The provision proposed for 1957–58 is Rs. 441 lakhsan1 Rs. 323 lakhs for 1958-59" என்று கனம்

நிதி அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார். கிராம மின் வசதிக்காகச் செலவிடப்படும் பணம் வருடத்திற்கு வருடம் குறைக்கப்பட்டு வருகிறது. மேலும் மார்ச் மாதம் வரவு செலவுத் திட்டம் போட்டபோது 1958–59-ம் ஆண்டில் இதற்காக 323 லட்சம் ரூபாய் செலவிட சர்க்காரால் உத்தேசிக்கப்பட்டது. ஆனால், இப்போது இந்த அறிக்கையில், இதற்காக 305·64 லட்சம் ரூபாயே 1958-59-ல் செலவழிக்கப்போவதாக கனம் மின் சார அமைச்சர் சொல்லியிருக்கிறார். அந்தத் தொகை ஏன் குறைக்கப்பட்டிருக்கிறது ?

11-20 a.m. இது, முன்னுக்குப் பின் முரணாகயிருக்கிறது. முதலில், 58, 59-ம் ஆண்டுகளில் 323 லட்சம் ரூபாய் செலவிடப் போகிறோம் என்று சொல்லி விட்டு ஏறத்தாழ 17 லட்சம் ரூபாய் ஏன் குறைக்கவேண்டுமென்று கேட்கிறேன் ? கிராமப்புறங்களில் மின்சக்தியை அதிகமாக உபயோகிக்க நல்ல வசதி செய்து தந்திருக்கிறோம் என்று சொல்லும் இந்தச் சர்க்கார் நகரப் புறங்களில்தான் நல்ல வசதிகளைத் தேடித்தந்திருக்கிறார்கள். ஆகவே, நாட்டுப்புறங்களை, நல்ல முறையில் ஆக்க வேண்டுமென்று, அங்கு நல்ல வசதிகளை செய்து கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு இந்த வரவு செலவுத் திட்டம் இல்லவேயில்லை. அடுத்தபடியாக, சில சலுகைகள் கொடுக்கப்பட்டிருப்பதாக இந்த புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, " நான் ரெம்யூனரேட்டீவ் ", அதாவது சில திட்டங்கள் கட்டுப் படியாகவில்லை என்றால் அதை எப்படி நிறைவேற்றுவது என்பது பற்றிச் சில குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஸ்டேட் எலெக்ட்ரிஸிட்டி போர்ட் மூலம் சென்னை சர்க்காரை நாலு லட்சம் ரூபாய் சப்ஸிடி கேட்டிருக்கிறார்கள், கிராமப்புறங்களில் உள்ள திட்டங்களை நிறைவேற்ற. அது, எந்தெந்த மாவட்டங்களில் உபயோகப்படுத்தப் போகிறார்கள் என்று இதில் குறிப்பிடவில்லை. அடுத்தபடியாக, பகலில் கரெண்ட் சில மாவட்டங்களில் கொடுக்கலாம் என்று யோசித்துக்கொண்டிருக்கிறோம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எந்தெந்த மாவட்டங்களில் பகலில் கரெண்ட் கொடுக்கலாம் என்று நீங்கள் யோசித்துக்கொண்டிருக்கிறீர்கள் என்று திட்டவட்டமாகச் சொல்லியிருந்தால் பிற மாவட்டங்களில் இருந்து வந்திருக்கும் சட்டமன்ற பிரதிநிதிகள் அவரவர்கள் மாவட்டங்களில் உள்ள குறைபாடுகளை விளக்கமாக எடுத்துச் சொல்ல முடியும். கிராமப்புற மக்களிடம் இருந்து வாங்கப்பட்டிருக்கும் மினிமம் சார்ஜ் எக்ரிமெண்டை மேலும் குறைக்கப்பட வேண்டுமென்று பெருவாரியான கோரிக்கைகள் வந்திருக்கின்றன. ஆனால் சர்க்கார் கொடுத்திருக்கும் இந்த வரவு செலவு திட்டத்தில் 10% ஆக இருந்தது பொருள்களின் விலையேற்றம் காரணமாக 18·2% ஆக உயர்ந்துவிட்டது. இருந்தபோதிலும் 10% எக்ரிமெண்ட் வந்தாலும் இந்தத் திட்டங்களை எடுத்துக்கொள்கிறோம் என்று சொல்லிவிட்டு 10ரூ.-க்கு அதிகமாகப் போனால் அந்த இடங்களில் நாங்கள் அக்ரிமெண்ட் வாங்கவில்லை என்று சொல்கிறார்கள். 12ரூ. அல்லது 15ரூ. வந்தாலும் கூட, அந்த இடங்களில் கூட ஒரு ஹார்ஸ் பவருக்கு 50 ரூபாய் என்று அக்ரிமெண்டு வாங்குகிறார்கள். இதைபற்றி நான் இங்கு முன்னமேயே சொல்லியிருக்கிறேன். இச்சமயத்தில் நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். அதாவது, மினிமம் அக்ரிமெண்டு என்று வாங்கிவிட்டு, இந்த வருடம் 400 ரூபாய் கரெண்ட் சார்ஜ் தருகிறேன் என்று வைத்துக்கொள்வோம். ஐந்து குதிரை ஓட்டத்திற்கு வருடம் ஒன்றுக்கு 250 ரூபாய் கட்ட வேண்டும். ஒருவன் இந்த வருடம் 400 ரூபாய்க்கு மின் சக்தியை உபயோகப்படுத்தியிருக்கிறான், ஆனால் அடுத்த வருடம் நூறு ரூபாய்க்கு உபயோகப்படுத்தினால் இரண்டு வருடங்களில் 400, 100, 500 ரூபாய்க்கு ஓட்டுகிறான். ஆனால் இரண்டாம் வருடத்தில் ஓட்டக்கூடியதற்கு 100 ரூபாய்க்கு மேல் 150 ரூபாய் அதிகமாகத் தரவேண்டுமென்று இரண்டாவது வருடத்தில் வசூல் செய்கிறார்கள். ஆகவே, மினிமம் எக்ரிமெண்ட் என்று சொல்லிக்கொண்டு 150 ரூபாய் அதிகம் வசூல் செய்கிறார்கள். ஆகவே, ஒரு வருடத்தில் 400 ரூபாய்க்கு மின்சக்தியை உபயோகப்படுத்திவிட்டு அடுத்த வருடம் 100 ரூபாய்க்கு உபயோகப்படுத்தினால் ஏன் அந்த கொண்டையை குறைக்கக் கூடாது ? என்று அமைச்சர் அவர்களிடம் கேட்க ஆசைப்படுகிறேன். அடுத்தபடியாக, " ஜாயின்ட் வெல்ஸ் ". கூட்டுக் கிணறுகள்-க்கு சர்வீஸ் தரவேண்டுமென்று இங்கு பலமுறை நான் கேள்வி போட்டிருக்கிறேன். " இன்டெம்னிட்டி

3rd November 1958] [Sri S. M. Annamalai]

பாண்ட்" வாங்கிக்கொண்டு கூட்டு கிணறுகளுக்கு சர்வீஸ் தரமுடியாது என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் இன்று இங்கு கூட்டு கிணறுகளுக்கு முதலில் அக்ரிமெண்ட் செய்து கொண்ட பிறகு பின் அவர்களிடையே தகராறு ஏற்படுமானால் அந்த இடங்களில் "இன்டெம்னிட்டிபாண்ட்" வாங்கிக்கொண்டு சர்வீஸ் தரலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். இதை ஏன் முன்கூட்டியே செய்யக் கூடாது என்று நான் கேட்கிறேன். பத்து ஏக்கர்கள் வைத்து இருக்கும் சிறு பட்டாதார்கள், அப்படிப்பட்ட இரண்டு சகோதரர்கள் இடையே ஒரு தகராறு ஏற்பட்டு "அவன் சர்வீஸ் எடுக்கக்கூடாது, இவன் சர்வீஸ் எடுக்கக்கூடாது" என்று ஆட்சேபனை செய்கிறார்கள். அந்த இடங்களில் முன்கூட்டியே இன்டெம்னிட்டி பாண்டு எழுதி வாங்கிக்கொண்டு உண்மையிலே சர்வீஸ் தந்தால் அதனால் விவசாயிகளுக்கு நல்ல பலன் ஏற்பட முடியும். ஆகவே, இந்த ஒரு சிறு சலுகை கூட இந்த வரவு செலவுத் திட்டத்தில் தரப்படவில்லை. அதற்கு அடுத்தபடியாக "ட்ரைவெல்ஸ்". ட்ரை வெல்ஸ்க்காக வேண்டி, தண்ணீர் இல்லாத கிணறுகளை ஏ. இ. அவர்களிடம் முன் கூட்டியே. ரெஜிஸ்டர்ட் போஸ்ட் மூலமாக அறிவித்து விட்டால் அவர்கள் வந்து பார்வையிட்டு இந்த கிணற்றில் உண்மையிலேயே தண்ணீர் இல்லை, ஆகவே குறைந்த பட்ச கட்டணத்தை வசூல் செய்யக்கூடாதென்று உத்தரவு இடலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதே இடத்தில்

"If, however the consumers intimate the fact of dryness of wells after a considerable lapse of time dryness certificate from the Revenue Department is insisted upon for the past period ". ஏன் உங்கள் அதிகாரிகளிடம் சொல்லவேண்டுமென்று கேட்கிறீர்கள்? எதற்காக அவர்களிடம் செல்ல வேண்டும். ரெவின்யூ இலாகாவினரிடம் சர்டிபிகேட் தர வேண்டுமென்று சொன்னால், அவர்களுக்கு நேரம் கிடையாது. கிணற்றை வந்து பார்வையிட அவர்களுக்கு நேரம் கிடையாது. விவசாயி, கிணற்றில் தண்ணீர் இருந்தால் அந்த கிணற்றில் உள்ள தண்ணீரை எடுத்து நல்ல முறையில் விவசாயம் செய்யவேண்டுமென்று ஆசைப்படுவானேயொழிய கிணற்றில் தண்ணீரை வைத்துக்கொண்டு குறைந்தபட்ச கட்டணத்தைக் கட்டவேண்டுமென்று எந்த விவசாயியும் ஆசைப்படமாட்டான். ஆகவே, பில்லைப் பார்ப்பீர்களேயானால், யார் 15 ரூபாய்க்குக் குறையாமல் கட்டணம் கட்டி வருகிறார்களோ அவர்களுக்கு ஏன் சலுகை தரக்கூடாது என்று நான் கேட்கிறேன்? அவனை ஏன் சர்டிபிகேட் வாங்கி வரவேண்டுமென்று கேட்கிறீர்கள்? ஆகவே, அந்த விவசாயிகள் ரெவின்யூ டிபார்ட்மென்டாரிடம் செல்லாமல், ஏ. ஈ அவர்கள் கூட பார்வையிடாமல் இருந்த இடத்தில் இருந்துகொண்டே குறைந்த பட்சக் கட்டணத்தைத் தள்ளிவிடலாம். அடுத்தபடியாக சில இடங்களில் சர்வீஸ் எடுக்கவில்லை.

Mr. SPEAKER : The hon. Member's time is up.

Sri S. M. ANNAMALAI : இன்னும் ஐந்து நிமிடங்கள் வேண்டும்.

Mr. SPEAKER : I will allow only two minutes more.

Sri S. M. ANNAMALAI : ஐந்து வித காரணங்களைக் காட்டி அக்காரணங்களால் சர்வீஸ் எடுக்காமல் இருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். அதை ஒத்துக்கொள்கிறேன். அதே சமயத்தில் சில இடங்களில் சர்வீஸ் சாங்ஷனாகிவிட்டது. வொர்க் ஆர்டரும் தீர்ந்தாகிவிட்டது. அப்படி தீர்ந்து விட்டதற்குப் பின்னால் வருடத்திற்கு 15 ரூ. மினிமம் சார்ஜ் கட்டவேண்டுமென்று டிமாண்ட் நோட்டீஸ் கொடுத்துவிட்டார்கள். இன்னும் கம்பமும் நடவில்லை, லைனும் இழுக்கவில்லை. அதற்கு மேல் அவர்களை, ஏன் சர்வீஸ் எடுத்துக்கொள்ளவில்லை, ஆகவே 15 ரூ. கட்டவேண்டுமென்று சொல்கிறார்கள். இப்படிப் பல கேஸ்கள் எனது தொகுதியில் மட்டுமல்ல, வட ஆற்காடு மாவட்டத்தில் மட்டுமல்ல, மாகாணம் பூராவும் இருக்கின்றன. உதாரணமாக ஒன்று சொல்லுகிறேன், ஆத்தன்பாடியில் வெங்கட்ராம அய்யர் என்று ஒருவர் இருக்கிறார். அவர் இன்டெம்னிட்டி பாண்டும்

எழுதிக்கொடுத்திவிட்டார், அக்ரிமெண்டும் செய்துவிட்டார், ஆனால் லைனும் இழுக்கப்படவில்லை, கம்பமும் நடவில்லை. அவர் இரண்டு வருடமாக மினிமம் சார்ஜ் கொடுத்துக்கொண்டு வருகிறார். ரூல்ஸ் ஆண்ட் ரெகுலேஷன்ஸ்ம் . . .

(The hon. Member had not concluded his speech when the Hon. Speaker rang the bell and made the following announcement.)

### IV.—ANNOUNCEMENTS—*cont.*

#### (2) DECISIONS OF THE BUSINESS ADVISORY COMMITTEE.

MR. SPEAKER : I have to make the following announcement regarding the decisions of the Business Advisory Committee which met at half past ten to-day.

The Committee decided that the consideration of the Report of the Rules Committee be taken up at the next sitting of the Assembly.

The Committee decided that the following items of business be taken up on the 5th November 1958 :—

(1) Motion relating to the setting up of a Joint Select Committee to consider the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1958.

(2) The further consideration of the Tiruchirappalli-Kaiaeruwaram and Mattuwaram Bill, 1958.

(3) Consideration of the amendments to the Madras Panchayats Bill, 1958, if any.

(4) The Madras Betting Tax (Amendment) Bill, 1958.

The Committee also decided that the Assembly, if necessary, shall sit in the afternoon of the 5th November. It is hoped that it will adjourn on that day.

The Committee considered the proposal for holding a session of the Legislature at Ootacamund and decided, Sri C. N. Annadurai dissenting, that a session of the Legislature may be held at Ootacamund whenever possible.

### VIII.—MADRAS STATE ELECTRICITY BOARD BUDGET—*cont.*

11-30 a.m.

* SRI A. SAMUEL NADAR : கனம் சபாநாயகர் அவர்களே, நமது ராஜ்யத்தில் 70 கோடி மூலதனமுள்ள நமது மின்சார அமைப்பைப்பற்றியுள்ள அறிக்கையை படிப்பதற்கு மிக உற்சாகமும் நம்பிக்கையும் அளிப்பதாக இருக்கிறது. கடந்த வருடங்களில் நாலைந்து மடங்கு நாம் வளர்ச்சியடைந்திருக்கிறோம். நமது மாநிலம் மற்ற மாநிலங்களைவிட, கிராமிய மின்சார விஷயத்தில் முதல் ஸ்தானத்தை அடைந்திருக்கிறது. விவசாய உபயோகத்திற்கும் மின்சாரம் அதிகமாக உபயோகப்படுத்தப்படுகிறது. இது விஷயத்தில் இப்போதுள்ள சில விதிகளைத் தளர்த்திப் போடப்பட்டிருக்கும் திட்டம் மிகவும் வரவேற்கத்தக்கது. 1951-லிருந்து நமது மின்சார இலாகா பரந்த அளவு விரிவடைந்திருக்கிறது. 1951-ம் வருஷத்திலிருந்து நமது இலாகா நிச்சயமாக ஆறு லட்சம் கிலோவாட்ஸ் உற்பத்தி செய்து நமது லட்சிய அளவை அடையலாம் என்று நாம் நம்பலாம். இவ்வளவு வளர்ச்சிக்கிடையே நமது இலாகா விவசாயத்திற்கு இன்னும் அதிகமாகச் சலுகை கொடுத்து விவசாயத்தைச் செழிக்கச் செய்யவேண்டும். பகல் நேரத்தில் ஹெவரேஜ் லோடு கணக்கெடுத்து அதிகநேரம் உபயோகப்

3rd November 1958] [Sri A. Samuel Nadar]

படுத்துவதற்கு வழி செய்ய வேண்டும். அதற்குப் பெரும் தடையாய் இருப்பது கம்பெனிகளின் லைஸன்ஸ் உரிமைகள் தான். இதை உடனடியாகப் பரிசீலனை செய்து கம்பெனி ஏரியாக்களில் எங்கெல்லாம் மின்சாரம் விஸ்தரிக்கப்படவில்லையோ அந்த ஏரியாக்களில் எல்லாம் நேரடியாகச் சர்க்கார் எடுத்து வளப்படுத்த வேண்டும். இதற்குத் தடையாக இருக்கிற சட்டங்களையும் விதிகளையும் திருத்தி எல்லா கிராமங்களுக்கும் மின்சாரம் கிடைக்க வழி செய்யவேண்டும். குறிப்பாகத் தூத்துக்குடி பிர்க்கா தேசிய அபிவிருத்திப் பிரதேசமாக இருந்தும் கூட அப்பகுதியிலுள்ள பல கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கப்படவில்லை. இதைப்பற்றி கேட்டால் கம்பெனி ஏரியா என்று சர்க்கார் கையை விரிக்கிறார்கள். இந்தச் சங்கடத்தை உடனடியாக போக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக, தூத்துக்குடியில் பல தொழில்கள் நடக்கின்றது. அந்த ஏரியாவைச் சுற்றிப் பல கிராமங்கள் இருக்கின்றன. அந்தக் கிராமங்களிலிருந்து ஆயிரக் கணக்கான தொழிலாளிகள் தூத்துக்குடியில் வந்து தொழில் செய்கின்றார்கள். குறிப்பாக கப்பல் கடலில் முத்து எடுக்கும் தொழில், சங்கு குளிக்கும் தொழில் முதலிய தொழில்கள் நடக்கின்றன. குறிப்பாக முத்து எடுக்கும் தொழில், சங்கு குளிக்கும் தொழில் இந்த தொழில்களிலிருந்து சர்க்காருக்கு வருமானம் அதிகமாகக் கிடைக்கிறது. இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளிகள் குடியிருக்க வசதியில்லாமல் ஒரு மைல், ஒன்றரை மைல் தள்ளிப்போய் குடிசை கட்டி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு அங்கு மின்சார வசதி அறவே கிடையாது. இது தவிர பக்கத்தில் உப்பளத்தில் வேலை செய்கின்ற பல தொழிலாளிகள் பக்கத்திலுள்ள கிராமங்களில் வசிக்கிறார்கள். அந்த தொழிலாளிகளுக்கும் மின்சார வசதி அறவே கிடையாது. இதை அடுத்து பெருமளவு விவசாயம் நடக்கின்றது. அந்த தொழிலில் ஈடுபட்டிருக்கும் விவசாயிகளுக்கும் மின்சார வசதி அறவே கிடையாது. இதைப்பற்றி கேட்டால் கம்பெனி லைஸன்ஸ் முறையின் கீழ் இருப்பதால் இந்த இடங்களுக்கு மின்சாரம் கிடைப்பதற்குத் தாமதம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இதைச் சர்க்கார் உடனடியாகக் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாகத் தூத்துக்குடிப் பக்கத்தில் மூன்று பர்லாங் தூரத்தில் ஆரோக்கியபுரம் என்ற இடம் இருக்கிறது. அங்கு ஒரு குஷ்ட ரோக ஆஸ்பத்திரி இருக்கிறது. அங்கு சுமார் 250 நோயாளிகள் இருக்கின்றார்கள். அந்த ஆசுபத்திரிக்கு பல வருட காலமாக மின்சார வசதி இன்னும் கிடைக்கவில்லை. இதற்கும் காரணம் கம்பெனியாரின் போக்குத்தான் என்று சொல்லப்படுகிறது. ஆகவே இதை உடனடியாக சர்க்கார் எடுத்து அந்தப் பகுதியில் இருக்கும் எல்லாத் தொழிலாளிகளுக்கும் எல்லா கிராமங்களுக்கும் மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* SRI C. R. RAMASWAMI: Mr. Speaker, as required under the Electricity (Supply) Act, 1948, the Electricity Board has to place the Annual Financial Statement every year before this House and take note of the comments that we make. In accordance with this procedure this Statement is now before us for discussion.

The State Electricity Board has been in existence for the last 15 months or so. It is now purely an official body and the Secretary, Public Works Department, is the Chairman and the other part-time members are the Chief Engineer for Electricity and one other Member. I wish to urge upon the Government that some non-officials should also be associated with the working of the Board. At present, the Chairman is a part-time Chairman. The work involved is heavy and there should be a full-time Chairman so that he may be in a position to do full justice to his job and take note of what is going on in the Board. Only when there is

a full-time Chairman, he can pay his best attention to the department. So, I urge upon the Government to consider the desirability of appointing a full-time Chairman. I know the present Chairman has been doing his job very well and I have no objection to his being appointed as the full-time Chairman. Only then, he can look after the interests of the department carefully and well. I hope there will be non-officials also, who will be associated with the working of the Board so that they can also bring to bear their advice and suggestions on the Board. I think this Board is the largest spending agency to-day. In our national activities, about Rs. 10 to 11 crores of public money is being pumped into this electricity sector. Several new projects have been undertaken. The overall output of electricity has been increased. The present output of 321,500 K.W. is expected to be increased to 391,500 K.W. with the installation of a generator in the Periyar Hydro-Electric Scheme. Well, the rate of progress has been very good and I congratulate the Board on the excellent work that it has done. In the matter of extension of power, I feel that in the years to come, they should not only maintain the present rate of progress, but also plan for greater and greater progress.

We are also glad to note that the Kundah Project is also progressing satisfactorily. It is also expected to add to the power supply in this State. We find that it is expected to be commissioned in 1960 or so with a capacity of 180,000 K.W.

11-40 a.m. The Neiveli Thermal Scheme promises another 250,000 K.W. and we do not know when the power will become available. If that comes in, it will become a healthy reinforcement to our National Grid. So, I would strongly urge the Government to see that the Neiveli Thermal station is put into effective commission as early as possible.

While on the subject of capital expenditure, I would like to make a few comments. The department is no doubt expanding very rapidly and is doing its best to supply electricity to as many villages as it can. Several villages have been electrified. But has any Member here or any member of the public enquired about the productive use to which electricity is put in villages? If electricity is supplied for working a pump, well and good. It increases production of food. If electricity is supplied to a small-scale industry, well and good. It increases production. But electricity for non-productive purposes such as mere lighting, especially when it is scarce, is not. the direction in whch we should expand. I would urge the department to find out to what productive use electricity is put in the various villages to which it has been supplied and give out the details of the connected load, etc. I would request the Hon. Minister to get a statement from the Board every month of the villages to which electric supply was given, the capital cost incurred, the connected load under industrial, agricultural and domestic and the anticipated revenue. The Minister should satisfy himself that the money that is being spent on rural electrification is

3rd November 1958] [Sri C. R. Ramaswami]

being properly spent. Electricity used for agriculture definitely increases production and it is very necessary that it is supplied to agriculturists at cheap rates. In the same way, electricity supplied to small-scale industries also should be at cheaper rates so that more and more small-scale industries may come up in the countryside. When I say this, we should not at the same time ignore large-scale industries. Without basic industries, we will not be making much headway in our State in the matter of industrial expansion. To enable basic industries to grow, electricity cost should be cheap. There is a proposal, I believe, before the Elctricity Board, to revise the tariffs of supply. I may utter a warning here. If the basic and heavy industries feel that the cost of electricity will go up, they may shift to the neighbouring States of Kerala and Andhra. My own view is, the Board should keep a very healthy watch over the rates and see that it attracts large-scale industries also to this State, as without large-scale indusries, our State would not become economically sound. So, I would urge the Board to revise the rates by striking a *via media* between the rates obtaining in Kerala and Andhra, so that they may be lower than those obtaining in those States.

Sir, apart from generation, we have been extending the lines all over the State. The cost of construction is very important. If a licensee can get a reinforced concrete pole for sixty-five rupees, the Electricity Board pays as much as 120 to 150 rupees for the same. The cost of extension, in the result, goes beyond all proportion. The Board should, therefore, concentrate and find out whether it cannot get reinforced concrete or other poles at a cheaper cost. That alone will help to reduce the cost of rural electrification and then only electricity will be within the easy reach of the villagers. Otherwise, the 10 per cent return will never be obtained. Therefore, I would once again request the Board to see whether it cannot reduce the cost by going in for cheaper materials.

With the advent of the Electricity Board, the accounts of the Electricity Department do not come within the purview of the Public Accounts Committee. The Board's annual financial statement is placed before the House and we discuss it here, except that this House has no control over the expenditure of the Board. My own feeling is that in the absence of a Public Accounts Committee, there should be a Committee of this House to go into the accounts of the Electricity Department. Unless there is a public scrutiny of expenditure and unless there is public vigil, there is likely to be extravagant expenditure and to a certain extent there may be mismanagement also. So, I would strongly appeal to the Hon. Minister in charge of Electricity to see whether he cannot constitute some sort of a Committee of this House similar to the Public Accounts Committee. If need be, he can invoke the provisions of the Electricity Supply Act which says, it is within the competence of the local Government to see what should be done in such matters. The Board may be guided by the Government. There is no difficulty at all. We may have a small Committee of the House to go into the accounts of the Electricity System which may make such

[Sri C. R. Ramaswami] [3rd November 1958

enquiries as it deems fit from time to time. If the Board feels there is a body above it to go into the expenditure and other things connected with it and say this is right and that is wrong, it will do much good to the Board itself.

I would congratulate the Board on the agreement it has reached with labour and I would request the Government to see that the award is implemented as quickly as possible so that any discontent that may be prevailing among labour may soon disappear. The Board is paying its workers very well. The recent recommendations are very satisfactory and I hope, given goodwill and mutual understanding, the Board will continue to function as one of the most important industrial units in our State and provide the most important industrial requirements, viz., electricity at economic rates.

With these few words, I thank you for having given me this opportunity to speak.

* **Sri K. SATTANATHA KARAYALAR :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மின்சார போர்டு வரவு-செலவுத் திட்டத்தைச் சபை முன்னிலையில் விவாதத்திற்கு வைத்திருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் ஒன்றிரண்டு வார்த்தைகளைச் சொல்ல அவாவுறுகிறேன்.

மிக மிக முக்கியமான ஒரு இனம் இது என்பது இந்த இனத்திலே செலவு செய்யக்கூடிய பணத்திலிருந்து தெரியும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே 152 கோடி ரூபாய் இந்த மாகாணத்திலே செலவு செய்வதில் 50 கோடிக்கும் அதிகமாக இந்தத் துறையிலே செலவு செய்கிறோம். செலவு இனம் இப்போது சுமார் 60 கோடிவரையில் எட்டிப் பிடித்து விடுமோ என்று தோன்றுகிறது. தொழில்களுக்கெல்லாம் தொழிலாக இருக்கும் இந்தத் தொழில் துறையில் இருக்கும் சிக்கல்களை நாம் ஊன்றிக் கவனிக்க வேண்டியிருக்கிறது. இந்தத் திட்டம் இன்று நாட்டிலே மிக நல்ல முறையில் வளர்ச்சி யடைந்துள்ளது என்பது நம் எல்லோருக்கும் தெரியும். இருப்பினும் இந்தத் தொழில் துறையிலே வேலை செய்து வரும் தொழிலாளர்கள் மத்தியிலே பெரும் அதிருப்தியிருந்து வருகிறது. அவர்களுக்குப் பல்வேறு குறைகளும் இருந்து வருகிறது. அதே நேரத்தில், மின்சார உற்பத்தி வளர்ச்சியடைந்து விட்டது என்று எண்ணக்கூடிய நேரத்தில்; இன்னும் வளர்வதற்கான சந்தர்ப்பங்கள் என்ன என்று சிந்திக்க வேண்டிய அவசியம் இருக்கிறது.

இந்த மின்சார போர்டைப் பொறுத்தவரையில், சர்க்கார் இலாகாவாக இருந்ததை, இப்போது தனியாக ஒரு போர்டு என்று அமைத்ததன் காரணம், நல்ல முறையில், இதிலே வரக்கூடிய வருவாய் அத்தனையையும் அந்தத் துறையிலேயே செலவழித்தால் இன்னும் நன்றாக வளர்ச்சி யடையும் என்பதுதான். அதற்காக இதை நடத்துவதற்கு ஒரு போர்டு சர்க்காரினாலே நிறுவப்பட்டது. ஆனால், தற்சமயம் இருந்து வருவதிலே, முன்பு இலாகாவாக இருந்ததை விட, அடிப்படையான மாறுதல்கள் எதும் ஏற்படவில்லை. "இன்பண்ட் ஸ்டேஜ்" ஆரம்பகாலம் என்று மந்திரி அவர்கள் குறிப்பிட்டிருப்பதுபோல, இடைக்காலக் காரியங்களுக்காக டிபார்ட்மெண்டில் இருப்பவர்களும் இன்னும் குறிப்பிட்ட ஒரு சில உத்தியோகஸ்தர்களும் இதிலே முழு நேரத்தையும் செலவழிக்க முடியாமல், இரண்டு இலாகாவிற்கும் கிட்டத்தட்ட ஒரு இணைப்பு போல இருந்து வருகிறார்கள். இது சரியல்ல. நிரந்தரமான உத்தியோகஸ்தர்களை, சேர்மன் முதலிய உத்தியோகஸ்தர்களை போட வேண்டியது உடனடியாக கவனிக்கப்பட வேண்டிய ஒரு விஷயம். அப்படி நியமித்தால் மாத்திரம்தான்

3rd November 1958] [Sri K. Sattanatha Karayalar]

அவர்களுக்கு முழு அக்கரையும் ஏற்பட்டு, ஊக்கத்துடன் வேலை செய்து இந்தத் திட்டம் வளர்வதற்கு சௌகரியமாக இருக்கும். சுமார் பல கோடி ரூபாய்களைச் செலவு செய்து வளரும் திட்டத்தை, சர்க்கார் இலாகாவிலே இருக்கக்கூடிய காரியதரிசியே இதற்கும் சேர்மனாக இருக்க வேண்டும் என்றால், சர்க்கார் மறைமுகமாக இந்தத் துறையில் பிடிப்பு வைத்துக் கொண்டிருப்பதற்குப் பயன்படுமே தவிர, ஒரு கமெர்ஷியல் கன்ஸெர்ன் என்ற முறையில் வளர்ச்சியடையும் முறையில் வேலை செய்வதற்குப் பயன்படாது.

இப்போது இந்த மின்சார போர்டின் வரவு-செலவுத் திட்டத்தைச் சபையின் முன் வைத்திருப்பதைப் பார்த்தால் இது சர்க்கார் இலாகாவின் பட்ஜெட் அடிப்படையில் இல்லை. அல்லது கமெர்ஷியல் முறையில் என்றால் பாலென்ஸ் ஷீட்டாக வைக்கவேண்டும். அப்படியும் இல்லை. இரண்டும் இல்லாத நிலையில் இன்கம்-டாக்ஸ் கணக்கு வைத்திருப்பதுபோல, வியாபாரிகள் இரண்டு கணக்கு வைத்திருப்பார்களே அந்த மாதிரி இரட்டைக் கணக்கு முறையில் இது அமைந்திருக்கிறது.

சர்க்காருக்கும் பாதகம் வராத முறையில் 70 கோடி ரூபாய் இதனுடைய முதலீடு என்று மதிப்பிட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது. எழுபது கோடி ரூபாய் என்பது எந்த அடிப்படையில் கணக்கிடப்பட்டது என்று தெரிய அவாவுறுகிறேன். எழுபது கோடி ரூபாய் என்று சொல்லும்பொழுது நாம் பல ஆண்டுகளாக இதிலே முதலீடு செய்த அத்தனையும் கணக்கிட்டு, அதோடு கடைசியில் இன்று உள்ள "assets" அடிப்படையிலே கணக்கெடுத்து இந்தத் தொகை கணக்கிடப்பட்டுள்ளது என்று நினைக்கிறேன். 11-50 a.m. இந்த 70 கோடி ரூபாயைக் கணக்கிட்டபோது, எற்கெனவே இந்தத் துறையிலே சர்க்கார் இலாகாவின் ஒரு பகுதியாக இருந்த காலத்திலே இதிலேயிருந்து கிடைத்திருக்கக்கூடிய லாபத்தில் ஒரு பங்கு சர்க்காருடைய இதர துறைகளிலேயும் சேர்ந்திருக்கிறது. அதைக் கணக்கிட்டதாகத் தெரியவில்லை. வட்டி இனத்திலே, $5\frac{1}{2}$ விகிதம் வட்டி என்று கணக்கிட்டு, சர்க்காருக்குச் சுமார் நான்கு கோடியே 10 லட்சம் வரையிலும் வரவேண்டுமென்று சொல்லப்படுகிறது. அந்த முறையில் கணக்கிட்டு, மறு ஆண்டுக்குத் திரும்பவும் அதைச் சர்க்காரிடமிருந்து கடன் கொடுத்ததாக வைத்துக் கொண்டு, மேலும் மேலும் மூலதனத்தை ஏற்றிக் கொண்டு போகிறோம். வட்டிக்கு மேல் வட்டியிட்டு மூலதனத்தை உயர்த்திக்கொண்டே போகும் தன்மையில் இருக்கிறது. அதிகமாக முதலீட்டைக் காட்டுவதற்கும், அதே நேரத்தில் லாபமில்லை என்று சொல்லுவதற்கும் இது சௌகரியமாக இருக்கும். முதலீட்டை அதிகமாகக் காட்டியிருக்கும் அதேபோது செலவினங்கள் எப்படியிருக்கிறது என்றால், பழைய காலங்களிலே தொழிலாளர்களுக்கு என்ன சம்பளம் கொடுத்து வந்தார்களோ அந்த அடிப்படையில் இன்றும் இருக்கிறது. வருங்காலத்திலே செலவினங்கள் இன்னும் உயரும். அப்படி உயரும்பொழுது, இப்பொழுது 63 லட்சம் ரூபாய் வரையில் துண்டு விழும் என்று சொல்லும் தொகையானது மேலும் உயரக்கூடும். அதைச் சரிகட்ட வேண்டுமானால் திட்டவட்டமாக ஏதாவது ஒன்று செய்யவேண்டும். சர்க்காரிடமிருந்து வாங்கக்கூடிய கடன் தொகைக்கு வட்டியைக் குறைக்க வேண்டும். ஐந்தரை சதவிகிதம் வட்டி வாங்கப்படுகிறது. அதே நேரத்தில் இந்த போர்டார் வெளியிலே கடன் கேட்டபொழுது, அவர்களுக்குத் தேவைப்பட்டது இரண்டு கோடி ரூபாயாக இருந்தாலும், 3 கோடியே 9 லட்சம் ரூபாய் கிடைத்தது. இது 45 நிமிஷத்திலே கிடைத்தது என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். இப்படி வெளியிலிருந்து குறைந்த வட்டியிலே கடன் கிடைக்கும்பொழுது, கமர்ஷியல் ஸ்தாபனமாக இருக்கும் இந்த போர்டானது, என் சர்க்காரிடமிருந்து கூடுதல் வட்டிக்கு கூட்டுவட்டி முறையில் கடன் வாங்கவேண்டுமென்று கேட்கிறேன்.

அதோடு, இந்த மின்சார சக்தியை விநியோகிப்பதிலே, சுமார் 56 சதவிகிதம் தொழில் துறைக்குக் கொடுக்கப்பட்டு வருகிறது. ஆனால் அதற்காக வாங்கக்கூடிய கட்டணத்தைப் பார்க்கும்பொழுது, 1932-ல் இருந்த

[Sri K. Sattanatha Karayalar] [3rd November 1958

டாரிப் ரேட்டைத்தான் இன்றும் வைத்திருக்கிறார்கள். டாரிப் ரேட்டை மாற்றாத வகையில், வருமானத்தை உயர்த்துவதற்கு வேறு மார்க்கம் இல்லை என்றுதான் சொல்லவேண்டும். மாற்றினால் பல சிக்கல்கள் ஏற்படுமென்று எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர்கள் சொன்னார்கள். தொழில்களை வளர்ப்பதற்காக, மின்சாரத்தை உபயோகிக்ககூடிய பஞ்சாலைகள், செமண்ட் பாக்டரிகள், காஸ்டிக் ஸோடா பாக்டரிகள் போன்ற தொழிற்சாலைகளுக்கு இந்த போர்டு மின்சாரத்தை உற்பத்தி செய்து கொடுக்கிறது. அந்தத் தொழில் துறையில் வேலை செய்கின்ற தொழிலாளர்களுடைய சம்பளமானது, இந்த மின்சார உற்பத்தி செய்வதற்குக் காரணமாயுள்ள தொழிலாளிகளின் சம்பளத்தைவிட இரண்டு அல்லது மூன்று மடங்கு அதிகமாகயிருக்கிறது. அதனால் இந்தத் துறையிலே வேலை செய்யக்கூடிய 40,000 தொழிலாளர்களுக்கும் அதிருப்தி ஏற்படுவது இயற்கை. 1932-வது வருஷத்திலுள்ள டாரிப் ரேட்டை வைத்துக்கொண்டு பெரிய பெரிய முதலாளிகளுக்கு மிகக் குறைந்த விலையிலே மின்சாரத்தை வழங்குகிறார்கள். அதே நேரத்தில் 1932-வது வருஷத்திய விலைவாசிகள் அடிப்படையிலேயே, தொழிலாளிகள் தங்களுடைய சம்பளத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று சொன்னால், அது ஒரு நியாயமான வாதமாக இருக்காது. "வெல்பேர் ஸ்டேட்" டை உண்டாக்கவேண்டும் என்று சொல்லுகிற நேரத்தில், இது ஒரு "**human approach**" ஆக இருக்க முடியாது. நியாயமான அடிப்படையில் அவர்களுக்கு மினிமம் வேஜஸ் கொடுத்துத்தான் ஆகவேண்டும். டாரிப் ரேட்டை உயர்த்தி அவர்களுக்குச் சம்பளத்தை உயர்த்தினால் தொழில் துறையில் பல சிக்கல்கள் ஏற்படும், நம்முடைய தமிழ் நாட்டில் இருக்கக்கூடிய பல தொழில்கள்-இதர பகுதிகளுக்குப் போய்விடும் என்ற வாதம் வருகிறது. அந்த அடிப்படையிலே பார்ப்போமேயானால் இது மிக தவறான வாதமாகும். ஏனென்றால், ஸோஷலிசத்தை இலட்சியமாக வைத்துக்கொண்டு நாம் முன்னேறவேண்டுமென்று சொல்லுகிறோம். எந்த அளவுக்குப் பாகுபாடுகள், வித்தியாசங்கள் இவற்றை மாற்றி சம நிலைக்குக் கொண்டுவர முடியுமோ, அந்த அடிப்படையிலே திட்டங்களை இட வேண்டும். தொழில்கள் வளருவதற்கு மாத்திரம் சௌகரியம் என்ற அடிப்படையில் செய்வோமேயானால், அண்டையிலே இருக்கக்கூடிய ராஜ்யங்களிலுள்ள போர்டுகள் கொடுக்கக் கூடிய ரேட்டைப் பார்க்கிலும் குறைந்த ரேட்டிலே கொடுக்கவேண்டாமென்று சொல்லுகிறேன். அப்படிக் குறைந்த ரேட்டிலே கொடுக்க வேண்டுமென்றால், அதற்கு வேறு வழிவகைகள் உண்டா என்பதைப் பார்க்கவேண்டும். தொழிலாளிகளை பலியிடக் கூடாது.

இங்கே ஒரு கிலோவாட்ஸுக்கு என்ன செலவாகிறதோ அதைக் காட்டிலும் குறைவாக அண்மையிலே இருக்கக்கூடிய ராஜ்யங்களிலே உற்பத்தி செய்தால் போட்டியாக அமையும் என்று சொன்னார்கள். அங்கே இயற்கை வசதியிருக்கிறது என்பது உண்மை. அப்படியிருக்கக் கூடிய சூழ்நிலையில், நாம் இன்று வளர்ந்துள்ள விஞ்ஞானத்தைப் பயன்படுத்திக்கொண்டு இன்னும் குறைந்த செலவில் மின்சாரத்தை உற்பத்தி செய்வதற்குத் திட்டமிடவேண்டும். இதற்கு, நமக்கு இருக்கக்கூடிய மார்க்கம் ஒன்றுதான். அடாமிக் ஜெனரேட்டர் மூலமாகத்தான் இது முடியுமென்று சொல்லுகிறார்கள். மந்திரி அவர்களும் இதைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். அடாமிக் ஜெனரேட்டர் நமது தமிழ் நாட்டிலே நிறுவப்படுமா என்பதிலே ஐயப்பாட்டிற்கு இடமிருக்கிறது. சமீபத்திலே சிலருடைய பேச்சுக்களைப் பார்க்கும்பொழுது தொழில் வளம் அதிகமாக இல்லாத தமிழ் நாட்டிற்கு வேண்டுமா, அல்லது அது பம்பாயிலே அமைக்கப்பட வேண்டுமா என்ற ஒரு வாதம் கிளம்புவதுபோல் இருக்கிறது. **Heavy electrical goods**-ஐ நமது தமிழ் நாட்டிலே உற்பத்தி செய்வதற்காக ஒரு தொழிற்சாலையை இங்கே நிறுவ வேண்டுமென்று நாம் பல ஆண்டு காலமாக சொல்லிக் கொண்டிருந்தோம். ஆனால் அது வேறு எங்கேயோ அமைக்கப்பட்டது. இதுவும் கடைசியிலே பம்பாயிலே போய் நிற்குமோ என்று தோன்றுகிறது. இதற்கு சூசகமாக "ஈஸ்டர்ன் எக்னாமிஸ்ட்" என்ற பத்திரிகையைப் படித்தால், அதிலே சொல்லப்பட்டிருக்கும் கருத்து வெள்ளிடைமலைபோல இருக்கிறது. அது பெரிய முதலாளிகளுடைய பத்திரிகை. அவர்கள் கருத்து என்னவென்றால், இது போன்ற தொழில் வளர்ச்சியடைந்த

3rd November 1958] [Sri K. Sattanatha Karayalar]

இடங்களில்தான் இந்த மாதிரி அடாமிக் ஜெனரேட்டரை அமைக்க வேண்டும். தொழில் துறையில் ஆரம்ப கட்டத்தில் இருக்கும் இடங்களில் இதை அமைத்தால் அது அவ்வளவு தூரம் விவேகமாக இருக்காது என்று அந்தப் பத்திரிகையில் எழுதப்பட்டிருக்கிறது. அந்த வகையில் ஒருவேளை இந்த அடாமிக் ஜெனரேட்டர் யூனிட் நமக்குக் கிடைக்காமல், வேறு எங்கேயாவது போய்விடாமல் இருப்பதற்கு அவசியமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும். ஏதோ மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள ஆறுகளின் தண்ணீரைப் பயன்படுத்திக் கொள்ளலாமென்று நினைத்தால் அது வெறும் பகற்கனவாகத்தான் முடியும். கேரளத்திலே பெரியாற்றை திறந்துவிட்ட பிறகு, அங்கேயுள்ள சில பத்திரிகைகள், கேரளத்திலுள்ள தண்ணீரை ஏன் தமிழ் நாட்டிற்குக் கொடுக்கவேண்டுமென்று தலையங்கங்கள் எழுதிக்கொண்டு வருகின்றன. ஸ்வீடன் போன்ற நாடுகள் மின்சார உற்பத்தி செய்து பிரான்ஸ் போன்ற நாடுகளுக்கு விற்கும்பொழுது, கேரளாவில் மின்சார உற்பத்தி செய்து அதைத் தமிழ் நாட்டுக்கும், ஆந்திர நாட்டுக்கும் விற்றுப் பணம் சம்பாதிக்கக் கூடாதா என்ற சர்ச்சை கேரளாவில் எழுந்துள்ளது. அண்மையிலுள்ள ராஜ்யங்களிலிருந்து மின்சார உற்பத்தி செய்யும் அளவில் நமக்குத் தண்ணீர் கிடைக்குமென்று தோன்றவில்லை. குறைந்த விலையிலே மின்சார உற்பத்தி செய்து, அதைத் தொழில் வளம் பெருவதற்காகப் பல தொழில்களுக்குக் கிடைக்கும் வாய்ப்பு ஏற்படவேண்டுமானால், அடாமிக் ஜெனரேட்டரை நிறுவவுது ஒன்றுதான் நமக்கு உகந்த வழி. அதற்கான, தோரியம், மானசைட் ஹில்மெனட் போன்ற பொருள்கள் நமது பகுதியிலே இருப்பதனால், அவற்றைப் பயன்படுத்திக்கொண்டு, ஒரு அடாமிக் ஜெனரேட்டரை இங்கே அமைப்பதற்குத் திட்டவட்டமான நடவடிக்கைகளை நமது அமைச்சர்களும், போர்டும் எடுக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டு, எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Srimathi RAJATHI KUNJITHAPATHAM** : தலைவர் அவர்களே, 12 noon.
மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கும் மின்சார போர்டின் அறிக்கையை வரவேற்று, அதன்மீது ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். மின்சாரத்தின் உபயோகத்தை எடுத்துக்கொண்டால், இந்தக் காலத்திலே வீட்டிலே ஆனாலும் சரி நாட்டிலே ஆனாலும் சரி அதை அறியாதவர்கள் எவரும் இருக்க முடியாது. அதோடுகூட, மின்சாரத்தில் நம் சென்னை மாநிலம் முதன்மை ஸ்தானம் வகிக்கிறது. ஐந்தாண்டுத் திட்டத்திலே அகில பாரதத்தில் கொடுக்கப்படும் மொத்தத் தொகையிலே 150 கோடி ரூபாய் சென்னை மாநிலத்திற்கு ஒதுக்கப்பட்டிருப்பதில், மற்ற இலாகாக்களைவிட மின்சார இலாகா 150 கோடி ரூபாயில் மூன்றில் ஒரு பங்கிற்கு திட்டம் வகுத்துக்கொண்டிருக்கிறது. ரூபாய் 52·25 கோடி ரூபாய்க்கு திட்டம் தீட்டிக்கொண்டு, மற்ற இலாகாக்களை விட அதிகமாக முன்னேறியிருக்கிறது. இதிலிருந்து இந்த மாநிலத்தில் எத்தனை விதத்தில் மின்சாரம் முன்னேறிக்கொண்டிருக்கிறது என்பது சொல்லாமலே விளங்கக்கூடிய நிலைமையில் இன்று இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மூன்றுவது வருஷத்தில் இருக்கிறோம். நாட்டில் இருக்கிற 20,000 கிராமங்களில், 8,000 கிராமங்கள் வரையில் மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சென்னை மாநிலத்தில் 70,000 பம்பு செட்டுகளுக்கு மேலே கொடுத்திருக்கிறோம் என்று பெறுமையுடன் கூறத்தக்க வகையிலே மின்சாரம் முன்னேறியிருக்கிறது. திட்டம் போட்டு மூன்றில் ஒரு பங்கு தொகை மட்டும் எடுத்துக்கொள்ளவில்லை. மின்சார அபிவிருத்தியில் வருஷத்திற்கு வருஷம் முன்னேறுகிறோம். 1956–ம் ஆண்டைவிட 1957-ல் முன்னேறியிருக்கிறோம். 1957–ம் ஆண்டைவிட 1958-ல் முன்னேறியிருக்கிறோம். 1958–ல் ஆயிரம் கிராமங்களுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டியதில், செப்டம்பர் மாதத்திற்குள் 500 கிராமங்களுக்குக் கொடுத்துவிட்டோம், 10,000 பம்பு செட்டுகள் கொடுக்க வேண்டியதில், செப்டம்பர் மாதத்திற்குள், 8.000 பம்பு செட்டுகள் கொடுத்துவிட்டோம் என்று பெருமையுடன் சொல்லக்கூடிய முன்னேற்றத்தை பாராட்டாமல் இருக்க முடியாது. அதை யொட்டித்தான் இந்தச் சபையிலே அங்கத்தினராக இருக்கக்கூடிய ஒரு பெரியவர் நேற்று முன்தினம் கனம் மந்திரி அவர்கள் இளைஞராக இருக்கிறார்கள் என்று குறிப்பிட்டது போற்றத்தக்கது

[Srimathi Rajathi Kunjithapatham] [3rd November 1958

மந்திரி சபையில் இளைஞராக இருக்கக்கூடிய மந்திரி மின்சார அபிவிருத்தியில் அவருடைய முதிய பருவத்தை காட்டிவிட்டார் என்று நாம் பாராட்டக்கூடிய நிலைமையில், இன்று மின்சார இலாகாவில் முன்னேற்றம் காணப்படுகிறது. இருந்தபோதிலும், எதிர் கட்சி அங்கத்தினர்கள் ஆமோதிக்கக்கூடிய வகையிலே இல்லை என்பதற்கு இணங்க, முழு மனதுடன் மின்சாரம் முன்னேறியிருக்கிறது என்பதை ஆமோதிக்காத வகையிலே, மூன்றுவதாக இருக்கிறது என்பதையாவது அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டிய பெருமை அமைச்சர் அவர்களைச் சாரும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்று தேவாரம் பாடிக்கொண்டிருக்கிற எதிர் கட்சி அங்கத்தினர்கள், வடக்கே மின்சாரம் இருளுகிறது, தெற்கே மின்சாரம் மிளிருகிறது என்ற மாற்றுப் பாட்டை பாடவேண்டிய நிலைமையில், மூன்றுவது கட்டத்திலாவது நாம் இருக்கிறோம் என்று அவர்கள் கட்டாயமாக ஒப்புக்கொள்ள வேண்டிய வகையில் மின்சாரத்தை அபிவிருத்தி செய்த பெருமை அமைச்சர் அவர்களைச் சாரும்.

எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் அண்ணாமலை அவர்கள் மனவெறுப்புடன் பேசியது அவருடைய பழமொழியிலிருந்து தெரியவருகிறது. குழந்தைக்குப் பதிலாக குழவியையாவது முத்தமிடுவோம் என்று சொன்னார். அந்த வகையிலே நான் அவருக்கு ஒரு பழமொழியைச் சொல்ல விரும்புகிறேன். குழந்தை பெறுதவள் அம்மிக்கல்லை எடுத்து அடிவயிற்றில் இடித்துக்கொண்டது போல, என்று நம் நாட்டில் ஒரு பழமொழி உண்டு. அந்த வகையிலே, இந்த மாநிலத்தில் மின்சாரம் முன்னேறிவிட்டது. மக்களுடைய ஆசியைப் பெற்றுவிட்டது ஆளும் கட்சி என்பதை அறிந்த எதிர் கட்சிக்காரர்கள் இதை ஆமோதிக்கமுடியாத நிலைமையில், என்ன செய்வோம் என்கின்ற மாதிரி, அம்மிக்கல்லை எடுத்து அடிவயிற்றில் இடித்துக்கொள்ளக்கூடிய முறையில் பேசுகிறார்கள். நம்முடைய மந்திரியின் போற்றத்தக்க ஆர்வத்தையும், அவர் மின்சாரத்தை அபிவிருத்தி செய்வதின் மூலம் மக்களுக்குச் செய்யும் சேவையையும் பாராட்டவேண்டிய நிலைமையில் இருக்கிறோம்.

அதோடுகூட. எதிர்கட்சிக்காரர்கள் நேற்று முன்தினம் பேசும்போது கூட, விவசாயத்திற்கு மின்சாரம் உபயோகப்படுத்துவதில்தான் சென்னை மாகாணம் முன்னேறியிருக்கிறது என்று சொன்னார்கள். விவசாயத்திலே தான் சென்னை மாகாணம் முன்னேறியிருக்கிறது என்று ஒரு அங்கத்தினர் எடுத்துச் சொல்லும்பொழுது, சந்தைக்கடைப் பொருள்களை உற்பத்தி செய்வதற்குத்தான் மின்சாரம் உபயோகப்படுகிறது என்ற அளவிலே எளனமாகச் சொன்னார்கள். பழம் தமிழ் நாட்டைப்பற்றி பேசுபவர்கள், முத்தமிழ் வளத்தைப் பற்றி பேசுகிறவர்கள், பழம் பெருமையைப் பற்றி பறைசாற்றுகிறவர்கள், பழந்தமிழ் நாட்டிலே இருக்கக்கூடிய விவசாயப் பொருள்களான மிளகு முதலியவற்றை யவனத்திலும், எகிப்திலும் தெரு வீதிகளில் விற்பனை செய்தது பற்றி பேசக்கூடியவர்கள், விவசாயத்தில் மின்சாரம் முன்னேறியிருக்கிறது என்பதை ஆமோதிக்காத வகை என் என்று என் போன்றவர்களுக்குப் புரியவில்லை. விவசாயம் நாட்டினுடைய அச்சாணி போன்றது. நாட்டினுடைய சமுதாயத்தின் சக்கரம் ஓடவேண்டுமானுல், விவசாய அச்சாணி முறிந்துவிடக்கூடாது, ஒடிந்துவிடக்கூடாது. இப்படி ஒடியாமல் அச்சாணியான விவசாயத்தை பாதுகாப்பது நம் கடமை. விவசாயம் முன்னேறுவதற்கு பாராட்டத்தக்க வகையிலே மின்சாரம் உதவி இருக்கிறது. 70,000 பம்பு செட்டுகள் கொடுக்கப்பட்டிருக்கிறது என்றுல், 2 லட்சத்திற்கு மேலான எகர்கள் விளைவிக்கப்பட்டிருக்கிறது என்பது ஒரு முன்னேற்ற அம்சமாக இருக்கிறது. உழவுக்கும், தொழிலுக்கும் வந்தனை செய்வோம், எரைத் தேடுவோம் என்பதற்கேற்ப விவசாயத் துறையில் அதிகமாக மின்சாரம் உபயோகப்படுவது பெறுமைக் குறியதே. அப்படியிருக்கும்பொழுது சந்தைக்கடைப் பொருள்களை உற்பத்தி செய்வதற்குத்தான் மின்சாரம் பயன்படுகிறது நம் மாநிலத்திலே என்று எளனமாகவும், கேவலமாகவும் கூறினர் ஒரு அங்கத்தினர். தொழில் துறைக்கு ஒருபோதும் மின்சாரம் கொடுக்காமல் இல்லை, தொழில் துறையிலே முன்னுக்கு வந்து தொழில் செய்யக்கூடியவர்கள் இல்லாத கார

ணத்தினுல்தான் தொழில் துறையில் மின்சாரம் அதிகமாக உபயோகப் படுத்த முடியவில்லை என்று அமைச்சர் அவர்கள் அன்றையதினம் எடுத்துச் சொன்னுர். சென்னையிலிருந்து கன்னியாகுமரி வரையிலும் போய் பார்த்தால், போகும்பொழுதும், வரும்பொழுதும் ஒரு வருஷத்திற்கு முன்பு கட்டான்தரையாக இருந்த இடங்களிலெல்லாம் ஒவ்வொரு மாவட்டத்திலும் நாளுக்கு நாள், மாதத்திற்கு மாதம் ஒவ்வொரு இடத்திலும் புதிய கட்டிடங்கள் ஏற்பட்டு வருவதைப் பார்க்கலாம். என்னுடைய தொகுதியாகிய திருநெல்வேலியைச் சேர்ந்த ஆத்தூரில் கெமிகல் பாக்டரி ஏற்படுத்துவதற்கு லைசென்ஸ் வழங்கப்பட்டிருக்கிறது. பல நாட்களாக முதல் போடுவதற்கு தென் பகுதியிலிருந்து ஒருவரும் முன்வரவில்லை. வட நாட்டிலிருப்பவர்கள் முன் வந்து முதல் போட்டு இங்கே தொழிற்சாலை ஏற்படுத்துவதை நாம் பார்க்கிறோம். முதல் போட்டு தொழிலை நடத்துவதற்கு தென் நாட்டிலிருந்து முதலாளிகள் முன்வராத காரணம்தான் தொழில் அபிவிருத்திற்கு தடங்கலாக இருக்கிறதே தவிர, மின்சாரம் கொடுக்கப்படாததால் அல்ல என்பதை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

அதோடுகூட, நாம் அண்டை நாட்டிற்கு உணவுப் பொருள்களை கொடுத்துக்கொண்டிருக்கிறோம். "உண்டிற்கழகு விருந்தோடு உண்ணல்," "மருந்தேயாயினும் விருந்தோடு உண்ணல்", "கூழானாலும் கூடிக் குடி," என்ற நம் தமிழ் நாட்டுப் பண்பிற்கேற்ப, நாமும் உண்டு, பக்கத்திலிருப்பவர்களுக்கும் கொடுக்கிறோம். இந்த நிலைமையிலே நாம் கேரளத்திற்கும் மின்சாரம் கொடுக்கிறோம், ஆந்திராவுக்கும் கொடுக்கிறோம், புதுச்சேரிக்கும் கொடுக்கிறோம் என்று அமைச்சர் அவர்கள் அறிக்கையில் கண்டிருப்பது வரவேற்கத்தக்க அம்சமாகும்.

சமுதாயத்திலே சமத்துவம் ஏற்படுத்தவேண்டுமென்ற கொள்கைக்கிணங்க, காங்கிரஸ் ஆட்சியில் ஹரிஜனங்களுக்கு முக்கியமாக 1·5 லட்சம் ரூபாய் சலுகை (ஸப்ஸிடி) கொடுத்துக்கொண்டிருப்பதை இன்னும் 2 லட்சம் ரூபாயாக அதிகப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மினிமம் சார்ஜைப் பற்றி பேசும்போது எத்தனையோ குறைகளைச் சொன்னுர்கள். பியூஸை உருவி விடுகிறுர்கள் சர்க்கார் என்று அங்கத்தினர்கள் சொன்னுர்கள். சர்க்காரிடம் உரிமை கேட்கும்போது நம்முடைய கடமையையும் மறந்துவிடக்கூடாது என்பதைக் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கிராமங்களுக்கு விவசாயத்திற்கு மின்சாரம் வேண்டுமென்று உரிமை கேட்கக்கூடிய அதேசமயத்தில், கடமையைச் செய்ய தவறிவிடுகிறோம். மாதாமாதம் கட்டுகின்ற தொகையை ஏன் கட்டாமல் இருக்கவேண்டுமென்று கேட்கிறேன். "பியூஸை உருவிவிடுகிறுர்கள்" என்று சர்க்காரை குற்றம் சாட்டுவது பெருமை அல்ல. மின்சார போர்டு ஒரு "கமர்ஷியல் பேஸிஸில்" நடத்தப்படுகிறது. நேற்று முன்தினம் பேசிய கனம் சீனுவாசய்யர்கூட "தன் காலிலேயே நிற்கவேண்டும்", "தன் கையே தனக்கு உதவி" என்ற முறையில் இந்த போர்டு தன்னுடைய வருமானத்தை வளர்த்துக் கொண்டு நாளுக்கு நாள் மக்களுக்கு அதிகமான சேவை செய்யக்கூடிய தன் பலம் பொருந்திய ஒரு போர்டாக அமையவேண்டுமென்று குறிப்பிட்டார்கள். அப்பொழுதுதான் அதை கமர்ஷியல் பேஸிஸில் நடத்த முடியும். அது வரவேற்கத் தக்க அம்சந்தான். சர்க்கார் பியூஸை உருவிக்கொண்டு போகிறுர்கள் என்று சொன்னுல், கட்டணத்தை செலுத்தாவிட்டாலும்கூட, அவர்கள் கையை கட்டிக்கொண்டு வேறு எந்தவித நடவடிக்கையும் எடுக்காமல் இருந்தால், போர்டு எவ்வாறு இயங்கமுடியும் என்பதைச் சிந்தித்துப்பார்க்கவேண்டும். வயலிலே விளையக்கூடிய நெல்லை ஒரு தர்ம சத்திரத்திலே கொண்டு வந்து போட்டுவிட்டு, எல்லோரும் அதைச் சாப்பிடலாம் என்று சர்க்கார் சொல்லிவிட்டால் அது கேட்பதற்கு இனிப்பாகத்தான் இருக்கும். ஆனுல், அது நடைமுறையில் நடக்குமா என்பதை நாம் யோசித்துப்பார்க்கவேண்டும். ஆகவே, கிராம விவசாயிகள் உரிமைக்குப் போராடக்கூடிய சமயத்தில் கடமையையும் செய்யக்கூடிய நிலைமையில் இருக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதோடுகூட, "இன்வெஸ்டிகேஷனுக்கு" 4 லட்சம் ரூபாய் ஒதுக்கப் பட்டிருப்பது மிகவும் போற்றத்தக்க அம்சம். மேலும் நாம் எந்த விதத்தில் மின்சாரத்தில் முன்னேற்றமடையலாம் என்பதை ஆராய்வ

[Srimathi Rajathi Kunjithapatham] [3rd November 1958

தற்கு இது ஒரு வாய்ப்பைத் தரும். இந்த இலாகாவில் அதிகமாக வேலை நிறுத்த வியாதி பரவாமல் இருக்கிறது. மேற்கொண்டு இந்த வியாதி இந்த இலாகாவில் பரவுவதற்கு வேண்டிய எத்தனங்களைச் செய்யாது இருக்குமாறு நான் எல்லாக் கட்சியைக் சாாந்தவர்களையும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தப்படியாக, என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரையில் கனம் அமைச்சர் அவர்களிடம் ஓரிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

12-10 p.m. லைசென்சுதார்களைப்பற்றி அவர் அவர்களுடைய ஏரியாக்களில் இருக்கக்கூடிய நிலைமையைப்பற்றிப் பல விதமாகப் பேசினார்கள். ஆனால் எங்கள் தொகுதி அது விஷயத்தில் ஒரு துர்ப்பாக்கிய நிலைமையில் இருக்கிறது. என் தொகுதியாகிய தூத்துக்குடி தொகுதிக்குள் லைசென்சுதார் தூத்துக்குடி எலெக்ட்ரிக் சப்ளை கார்பொரேஷன். அவர்கள் ஆரம்ப காலத்திலேயிருந்தே இருக்கிறார்கள். அப்படி அங்கே தனிப்பட்டவர்களுடைய கையில் மின்சாரம் வழங்கப்பட்டு இருப்பதால் என் தொகுதியிலுள்ள மக்கள் துர்ப்பாக்கிய நிலையில் இருக்கிறார்கள். அங்கு மின்சாரம் விநியோகிக்க வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டால் "உங்கள் பகுதியில்தான் மின்சாரம் சப்ளை செய்யும் கம்பெனி இருக்கிறதே, அதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்" என்று சொல்லுகிறார்கள். ஆனால் அவர்களைக் கேட்டால் அவர்கள் சரிவர கவனிக்க மாட்டேன் என்று சொல்லுகிறார்கள். அதனால் அங்குள்ள விவசாய மக்கள் அதிகப்படியாகப் பாதிக்கப்படுகிறார்கள். ஆனால் சர்க்கார் எடுத்து நடத்தக்கூடிய பகுதிகளில் இருக்கக்கூடிய மக்களுக்கு நல்ல முறையில் மின்சாரம் சப்ளை செய்யப்படுகிறது. அவர்களுக்குச் சில சலுகைகள் கிடைக்கின்றன. அந்தச் சலுகைகள் தனிப்பட்டவர்கள் வைத்து நடத்தும் பகுதிகளிலுள்ள மக்களுக்குக் கிடைக்கவில்லை. இந்த நிலைமையில் அங்குள்ள மக்கள் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இந்த முறையில் கணக்கிட்டால் கிராமப் பகுதிகளிலுள்ளவர்கள் விவசாயம் செய்வதற்குப் பம்பு செட்டுகள் இல்லாமல் இருக்கிறார்கள். மின்சாரம் இல்லாமல், நல்ல வீட்டு விளக்குகள் இல்லாமல், விளக்கு இல்லாததால் பட்டினியாய் இருக்கிறார்கள். நல்ல விளக்கு வெளிச்சம் இல்லாததால் நல்ல முறையில் அவர்களால் சாப்பிட முடியாமல் பட்டினியால் வாடி வதங்குகிறார்கள். சோறு இல்லாவிட்டாலும் அவர்களுக்குப் பாதகம் இல்லை, நல்ல வெளிச்சம் அவர்களுக்குத் தேவையாக இருக்கிறது. அப்பொழுதுதான் பசித்திருந்தாலும் வெளிச்சம் இருந்தால் மனிதன் சந்தோஷமாக இருக்க முடியும். பக்கத்து வீட்டுக்காரர்கள் பாலும் சோறும் தின்னும் இந்தப் பக்கத்திலுள்ளவர்கள் பழைய சோறு சாப்பிட வேண்டியதாக இருக்கிறது. அதைச் சாப்பிடுவதற்கும் அவர்களுக்கு விளக்கு வேண்டியதாக இருக்கிறது. இப்படிப்பட்ட பரிதாபகரமான நிலைமையில் எங்கள் பகுதியிலுள்ள மக்கள் இருக்கிறார்கள். மழை என்றால் புயல் வந்து விடுமோ என்று பயந்து கொண்டிருக்கிறார்கள். இடி இடித்தால் அவர்கள் பயப்பட வேண்டியதாக இருக்கிறது. இந்த நிலைமையில் கனம் மின்சார அமைச்சர் அவர்கள் அந்தத் தொகுதிக்கு வந்தபோது இதைப்பற்றி அவருக்குத் தெரியப்படுத்தியதின் பயனாக ஒரு வித பலன் ஏற்படும் என்று தோன்றுகிறது. கடந்த மாதம் 30-ம் தேதியன்று சீப் இஞ்சினியரைக் கண்டு பேசியதில் ஏதாவது செய்வதாகவும் சொல்லியிருக்கிறார். மின்சார நிலயங்களைத் தேசீயமயமாக்கப்போகிறோம் என்ற காரணத்தினால் தனிப்பட்டவர்கள் நல்ல முறையில் மக்களுக்கு உதவி செய்ய முன்வர மாட்டேன் என்று சொல்லுகிறார்கள். அவைகளைச் சர்க்கார் எடுத்துக்கொள்வது என்ற நோக்கத்துடன் இருந்தால் அவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுத்து விட்டு எடுத்துக் கொண்டு விடலாம். அவர்களுக்கு ஒன்றும் சொல்லாமல் இருந்தால் அவர்கள் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கிறார்கள். அவர்களுக்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்ய முன் வரவேண்டும். அப்படிச் செய்தால்அவர்கள் உற்சாகத்துடன் இருந்து மக்களுக்கு என்னென்ன செய்து கொடுக்கவேண்டுமோ அதைச்செய்துகொடுக்க முன்வருவார்கள். இப்பொழுது அவர்களுடைய நிலைமை எப்படி இருக்கிறது என்றால் அவர்களுடைய மூக்கணாங்கயிறை நாம் இழுத்துப் பிடித்துக்கொண்டிருப்பதுபோல் இருக்கிறது.

அந்த மூக்கணாங்கயிறை நீக்கிக்கொண்டு வெளி வர முடியாத நிலைமையில் அவர்கள் இருக்கிறார்கள். அதனால் மக்கள் கஷ்டப்படக்கூடிய பரிதாபகரமான நிலையில் இருக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கு அரசாங்கம் ஒரு திட்டத்தை வகுக்க வேண்டும். அதாவது இன்னும் ஐந்து அல்லது பத்து வருஷங்களுக்கு அந்த நிலையங்களை எடுத்துக்கொள்ளப்போவதில்லை என்று சொல்லிவிட்டால் அவர்கள் பொறுப்பு எடுத்துக்கொண்டு வேலை செய்ய முன் வருவார்கள். அந்த விதத்தில் இந்த ஜில்லாவில் தனிப்பட்டவர்களுக்கு ஏதாவது சொல்லி அங்குள்ள மக்களுக்கு வசதி செய்து கொடுக்க சர்க்கார் முன் வரவேண்டும். சர்க்காருடைய பிடியிலிருந்து அவர்கள் விடுவித்துக்கொள்வதற்காக வழி கண்டு பிடிக்க வேண்டும். அவர்களுக்குள்ள நிர்ப்பந்தத்தைப் போக்க வேண்டும். அங்குள்ள பகுதி மக்களுக்கு மின்சாரம் ரொம்பவும் அவசியமாக வேண்டியதாக இருக்கிறது. வீட்டிற்கு வெளிச்சம்கூட இல்லாமல் இருக்கிறார்கள். ஆகவே தொகுதியிலுள்ள மக்களின் தேவைகளை கனம் மந்திரி அவர்கள் (பேச்சு முடிவதற்குள் கனம் சபாநாயகர் அவர்கள் மணிஅடித்து வேறு அங்கத்தினரைப் பேசக் கூப்பிட்டார்.)

* **Sri A. E. CHANDRASEKARA NAYAGAR** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் மின்சார மந்திரி அவர்கள் சபையின் முன் சமர்ப்பித்த மின்சார போர்டு செலவுத் திட்டத்தைப்பற்றிச் சில வார்த்தைகளைச் சொல்லவிரும்புகிறேன். இம்மாதிரியான மின்சார போர்டை அமைத்த போது அதைப்பற்றி இந்தச் சபையில் விவாதிக்கலாமா விவாதிக்கக்கூடாதா என்ற சந்தேகம் இருந்தது. அதன் பிறகு இப்பொழுது அதைப்பற்றி விவாதிக்கலாம் ஆனால் வோட்டு செய்யக்கூடாது என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. இன்னும் போகப்போக மின்சார போர்டு அமைத்ததே தவறு என்று நினைக்கும்படியாகப் போய் விடுமோ என்று நினைக்கிறேன்.

மின்சாரம் எவ்வளவு அத்யாவசயமான தேவை, மக்களுக்கு அது எவ்வளவு தேவைப்படுகிறது என்பதெல்லாம் விவசாய அபிவிருத்தி கண்ணோட்டத்துடன் பார்க்க வேண்டும், இது ஒரு வியாபார ஸ்தாபனமாகவோ அல்லது ஒரு தனிப்பட்ட ஸ்தாபனமாகவோ இருக்கக்கூடாது. அந்த நிலைமையில் அதை வளர விடக்கூடாது. அந்த இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகளும், ஊழியர்களும் அந்த மனப்பான்மையில் வளரக்கூடாது. அப்படி வளரவும் விட்டு விடக்கூடாது என்று நினைக்கிறேன்.

மின்சாரம் ஒவ்வொரு கிராமத்திற்கும் உணவு உற்பத்திக்கும் மிகவும் அத்தியாவசியமான சாதனமாகும். அதை அபிவிருத்தி செய்வதற்கு இப்பொழுது நம் ராஜ்யத்தில் விவசாயிகளுக்குக் கொடுக்கப்படும் மின்சாரம் பத்து சத விகிதம் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. அப்படிக் கணக்கிடப்பட்டு வசூலிக்கப்பட்டு வருகிறது. மைசூர் ராஜ்யத்தில் இதற்கு என்று போர்டு அமைப்பதற்கு முன் 5 சத விகிதம் என்று கணக்கிடப்பட்டு வசூலிக்கப்பட்டு வந்தது. அதன் பிறகு 7 சத விகிதம் என்று ஏற்பட்டிருப்பதாக தெரிய வருகிறது. விவசாயம் மின்சாரத்தின் மூலமாக நல்ல பயன் அடைய வேண்டுமென்று 5 சத விகிதத்திற்கு குறைத்திருக்கிறார்கள். மைசூர் ராஜ்யத்தில் தொழிற்சாலைகளுக்கும், இண்டஸ்ட்ரீஸ்க்கு அதிகப்படுத்தி விவசாயத்திற்கு குறைத்திருக்கிறார்கள். நம் ராஜ்யத்திலும் அதே மாதிரி தொழிற்சாலைகளுக்கு மின்சாரத்தை அதிகப்படுத்தியும் விவசாயத்திற்கும் மற்றும் சிறு தொழில்களுக்கும் குறைத்தும் போடலாம் என்று நான் கருதுகிறேன். மேலும் விவசாயத்திற்கு என்று கொடுக்கப்பட்டிருக்கும் மின்சாரம் சிறு சிறு தொழிலுக்கு உபயோகப்படுத்தவேண்டும் என்று அதற்கு ஒரு ஆதரவு அளிக்க வேண்டும். விவசாயிகள் ஒழிந்த நேரத்தில் சிறு தொழில்களில் ஈடுபட்டு அவர்கள் அதன் மூலம் தங்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்திகொள்வதற்கு வேண்டிய வழி செய்து கொள்ளவேண்டும். அந்த முறையில் வேண்டிய பிரசாரங்களை நாம் செய்வதற்கு முற்படவேண்டும். அதற்காகத் தீவிர நடவடிக்கைகளை போர்ட் எடுத்துக்கொள்ள வேண்டும். மின்சாரத்தைக் கொடுப்பதன் மூலமாக அவர்களுடைய வாழ்க்கைத்தரம் உயருவதற்கு நல்ல ஏற்பாடு செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும் இந்த மின்சார போர்டு அப்படியே இருக்குமானால் அந்த போர்டில் மின்சார உத்தியோகஸ்தர்கள் சார்பாகவும், விவசாயிகள் சார்பாகவும், தொழிற்சாலைகள் சார்பாகவும் மற்றும் ஸ்தல ஸ்தாபனங்களின் சார்பாகவும் பிரதிநிதிகள் அமைத்துக்கொடுத்து அவர்களும் பங்கு எடுத்துக்கொள்வதற்கு வசதி இருக்கவேண்டும். இப்படி இருந்தால் தான் அதிலுள்ள கஷ்ட நஷ்டங்கள் எல்லாவற்றையும் எல்லோரும் அறிய முடியும் என்று நான் நினைக்கிறேன்.

குறிப்பாக என்னுடைய ஜில்லாவை எடுத்துக்கொண்டால் அங்கே வாலாஜா தாலூக்காவில் வேலூர் எலெக்ட்ரிக் கார்பரேஷன் என்று இருக்கிறது. அதற்கு சந்திரா அண்டு கம்பெனி அவர்கள் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் போட்ட திட்டத்தை இன்னும் நிறைவேற்ற முடியாமல் இருக்கிறார்கள். பல சங்கடமான நிலைமையில் அவர்கள் இருக்கிறார்கள். குறிப்பாக பல வருஷங்களுக்கு முன்னதாகவே நடக்கவேண்டிய மின்சார விஸ்தரிப்பு இன்னும் நடக்காமலேயே இருக்கிறது. அதைப்பற்றிக் கேட்டால் ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லுகிறார்கள். அத்துடன் விவசாயத்திற்கு மின்சாரம் கொடுக்கவேண்டும் என்று கேட்டால் முன் கூட்டியே 300 அல்லது 400 ரூபாய் அட்வான்ஸ் தர வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அப்படிக் கொடுத்தால்தான் கனெக்ஷன் கொடுப்போம் என்றும் சொல்லுகிறார்கள். அவர்களுடைய எஸ்டிமேட் அதிகமாக இருப்பதால் விவசாயிகளால் கட்ட முடியவில்லை. அதனால் விவசாயிகள் அதிகப்படியாக பாதிக்கப்படுகிறார்கள். ஆகவே வாலாஜா தாலூக்காவில் ஏற்பட்டிருக்கக்கூடிய பெரிய பிரச்னையை தீர்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தற்சமயம் மின்சார இலாகாவிற்கு ஓரளவு நல்ல பெயர் இருப்பதற்குக் காரணம் மின்சார மந்திரி அவர்கள் சுற்றுப்பிரயாண காலத்தில் நல்ல வேலை செய்வதாலும், அவர் மக்களுக்கும் இலாகாவிற்கும் நேரடி தொடர்பு ஏற்படுத்துவதாலும் அந்த இலாகாவிற்கு நல்ல பெயர் இப்பொழுது இருந்து வருகிறது. அதை மேலும் மேலும் வளர்த்திக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு மக்களும் மின்சாரத்தை உபயோகப்படுத்திக்கொண்டு நல்ல முறையில் பயனடைய வேண்டுமென்ற திட்டத்தை வகுக்கவேண்டும். வருங்காலத்தில் விவசாயிகள் மின்சாரத்தை நல்ல முறையில் உபயோகித்துக் கொள்வதற்கு வழிசெய்வதில் சர்க்கார் கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் சொற்பொழிவை நான் முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri A. V. P. PERIAVALAGURUVA REDDI**: கனம் தலைவர் அவர்களே, மின்சார அறிக்கையைப்பற்றி நான் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். இந்த அறிக்கையில் எல்லா மாகாணங்களையும்விட நம் மாகாணம் விவசாயத்திற்கு மின்சார விஸ்தரிப்பை அதிகமாக ஆக்கி இருக்கிறது. விவசாயித்திற்காக 72 ஆயிரம் பம்புசெட்டுகள் கொடுத்திருப்பதாகவும் சொல்லப்படுகிறது. அது ரொம்பவும் வரவேற்கக்கூடிய காரியம். ஏனென்றால் மக்களுக்கு முக்கியமானது உணவுதான். அந்த உணவு உற்பத்தியைச் செய்கிறது விவசாயிகள்தான். ஆகையினால் 72 ஆயிரம் பம்பு செட்டுகளுடன் கரும்பு, வாழை, வெங்காயம், இப்பேர்ப்பட்ட விவசாயத்தைத் தவிர நெல்லிலிருந்து பல தானியங்கள்வரை சுமார் ஏழு லட்சம் மூட்டை வரைக்கும் தானியங்கள் இங்கே உற்பத்தியாகிறது. அதில் எந்த விதமான சந்தேகமும் இல்லை. ஆகையால், விவசாயத்திற்கு மின்சாரம் வழங்குவதில் இன்னும் எத்தனை ஆயிரம் ரூபாய் செலவு செய்தாலும் பரவாயில்லை. விவசாய அபிவிருத்திக்கு மின்சாரத்தை ஏராளமாக உபயோகப்படுத்தினால்தான் உணவுப் பஞ்சம் ஒருவிதமாகத் தீரும்.

அதோடுகூட, விவசாயத்திற்கு மின்சாரம் கொடுப்பதிலே அனேக குறைபாடுகள் இருக்கின்றன. என்னவென்றால், ஷிப்ட் முறையில் கொடுக்கிறார்கள். வயலில் தண்ணீர் பாய்ச்சக்கூடியவன் பம்பை ஓடவிட்டுவிட்டு, அரை பர்லாங்கு, ஒரு பர்லாங்கு தூரத்தில் இருந்துகொண்டு தண்ணீர் இறைத்துக்கொண்டிருப்பான். தண்ணீர் இறைத்துக்கொண்டிருக்கும்போது, மூன்று மணி நேரம் சரியாய்ப் போச்சு என்று சொல்லி லைன்மென் ப்யூசைப் பிடுங்கிவிடுகிறான். எனக்கு முன்னே பேசிய அம்மையார், " பணம்

3rd November 1958] [Sri A. V. P. Periavalaguruva Reddi]

கட்டாததனால் பிடுங்குகிறார்கள்" என்று சொன்னார்கள். பணம் கட்டாமல் வைத்திருப்பவர்கள் ஒருவரும் இல்லை. எல்லோரும் பணத்தை காலா காலத்தில் தான் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். ஷிப்ட் முறையினால் லைன்மென் ப்யூசைப் பிடுங்கிவிடுகிறார்கள். பிடுங்கினவுடனே தண்ணீர் குறைந்து விடுகிறது. தண்ணீர் பாய்ச்சுகிறவர் கையில் கடிகாரமா கட்டிக் கொண்டு பாய்ச்ச முடியும்? கையில்தான் மண் வெட்டி இருக்கிறதே. கடிகாரத்தை வைத்துக்கொண்டு எப்படி தண்ணீர் பாய்ச்ச முடியும்? மண் வெட்டி வைத்துக்கொண்டு அரை பர்லாங்கு, ஒரு பர்லாங்கு தூரத்தில் தண்ணீர் இறைத்துக் கொண்டிருப்பார். மூன்று ப்யூஸிலே ஓடிக் கொண்டிருந்தது இரண்டு ப்யூஸிலே ஓடும்போது காயில் பர்ன் ஆய் விடுகிறது. மூன்று ஹார்ஸ் பவர் மோட்டாருக்கு காயில் போடுவதற்கு ரூ. 125 வரையில் பிடிக்கிறது. இம்மாதிரி லைன்மென்கள் செய்வதினால், அனேக மோட்டார்கள் ரிப்பேர் ஆகிப் போய் விடுகின்றன.

மக்களுக்கு முக்கியமாக வேண்டியது உணவு. உணவு இல்லாவிட்டால் ஒன்றுமே நடக்காது. உலகத்திலே, சாமி, கட்சி, பூதம் என்று சொல்வது எதுவும் இல்லாமல் போய்விடும். சாமி இல்லை என்று சொல்பவர்களுக்கும் உணவு வேண்டும். சாமி இருக்கிறது என்று சொல்பவர்களுக்கும் உணவு வேண்டும். உணவிலே தான் உலகமே இருக்கிறது. அப்படியிருக்கும் நிலைமையிலே இந்த உணவுத் தானியத்தை உற்பத்தி செய்யக் கூடிய விவசாயத்திற்கு மின்சாரம் முதலில் கொடுக்கவேண்டும். ஷிப்ட் முறை, மின்சார வெட்டு என்பதெல்லாம் விவசாயத்தைப் பொறுத்த வரையில் இருக்கக்கூடாது. யாதொரு தொல்லை இல்லாமல் விவசாயத்திற்கு மின்சாரம் கொடுக்கப்படவேண்டும். சர்ச்சார்ஜ் ரொம்பப் போடுகிறார்கள். அதுவும் குறைக்கப்படவேண்டும். பங்களாக்களின் வெளியே ஒருவிதமான லைட் தெரியவேண்டும், உள்ளே ஒரு விதமான லைட் தெரிய வேண்டும் என்றெல்லாம் போடுகிறார்களே, அவர்களுக்கு நாலணா, ஆறணா வீதம் சர்ச்சார்ஜ் போடட்டும். சினிமாவும் உலகம் பூராவும் பரவியிருக்கிறது. அதற்கும் ஆறணா, எட்டணா சர்ச்சார்ஜ் போடட்டும். அதைப் பற்றி கவலை இல்லை. மில்களுக்கும் யூனிட் ஒன்றுக்கு காலணா ஏற்றலாம். சினிமாக்கள் நடத்துபவர்களும், டவுனிலே இருக்கும் மக்களுங்கூட உணவு இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது. சட்டசபை 1–30 மணிக்கு முடிந்தவுடன் உணவு இல்லையென்றால், அங்கத்தினர்களுக்குக்கூட பசியினால் கண் தெரியாமற் போய்விடும். உணவு என்பது மக்களுக்கு இன்றியமையாதது. அரசாங்கம் கூட உணவு உற்பத்திக்கு முதல் இடம் கொடுத்திருக்கிறது. நேற்று முன்தினம் இதே சபையில், அரிசி விலை ஏறிவிட்டது என்பது பற்றிய கேள்வி வந்தவுடனே, அனேக அங்கத்தினர்கள் கேள்வி கேட்க எழுந்ததில், யாரைக் கூப்பிடுவது என்பது தலைவர் அவர்களுக்கு ஒரு பிரச்னையாகப் போய் விட்டது. ஏன் இதைச் சொல்கிறேன் என்றால், உணவுப்பிரச்னைக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறோம். ஆகவே, இதற்கு முதல் இடம் கொடுத்து, மின்சாரம் கொடுத்தால்தான் உணவுப் பஞ்சம் தீரும். ஆயிரக்கணக்கான மோட்டார்கள் ஓடும்படி செய்ய வேண்டும். அவைகளுக்கெல்லாம் மின்சாரம் தாராளமாகக் கொடுக்கப்பட வேண்டும்.

வடமதுரை பக்கங்களிலும், சாணார்பட்டி பகுதி மக்களும் மனுக்கள் கொடுத்திருந்தும் இன்னும் பம்ப்செட்டுகள் கிடைக்காமல் கஷ்டப்படுகிறார்கள். சிறுகுடி வட்டாரங்களிலும் சர்வே பண்ணி வேலை நடக்கவில்லை. சாமான் இல்லை, அது இல்லை, இது இல்லை என்று கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லலாம். எப்படியிருந்தாலும் விவசாயத்திற்கு முதன்மை ஸ்தானம் கொடுக்கவேண்டும். அதற்கு அடுத்தபடியாகத்தான் தொழில்களுக்கு கொடுக்கவேண்டும் அம்மாதிரி ஒரு ஸிஸ்டம் வைத்து, கொடுத்தால்தான் மக்களுக்கு உணவுப் பஞ்சம் தீருமேயொழிய வேறு வழியினால் தீர்ப்பதற்கு முடியாது.

ஒரு கிராமம் வரையில் மின்சாரம் வந்திருந்து, அதையடுத்த இன்னொரு கிராமத்திற்கு மின்சாரம் கொண்டுபோகவேண்டுமென்றால், பத்து வருஷத்திற்குப் பத்தாயிரம் ரூபாய் செலவாகும் என்றால், வருஷா வருஷம்

இந்த ஐந்து பம்ப்செட்காரர்களும் சேர்ந்து மின்சார இலாகா வினருக்கும் கட்ட வேண்டும் என்று இஞ்சினீர் சொல்கிறார். இந்த ஐந்து பேர்கள் ஒவ்வொருவரும் வருஷா வருஷம் ரூ. 200 வீதம் கட்டுகிறார்கள். அதற்கான அக்ரிமெண்ட் இந்த ஐந்து பேர்களும் எழுதிக் கொடுத்தால் தான் மின்சாரத்தை விஸ்தரிக்கிறார்கள். இப்படி அக்ரிமெண்ட் எழுதி மனுப்போட்டு, லைன் கொண்டுபோகிறார்கள். இப்படியாக ஒரு வருஷத் திற்கான பணத்தைக் கட்டி லைனைக் கொண்டுபோய் விவசாயம் செய்து கொண்டிருக்கிறார்கள். அடுத்த வருஷம், அதே கிராமத்திலே மற்றவர் கள் அதைப் பார்த்து, அனேக பம்ப் செட்டுகளை வைத்துக் கொண்டு விடு கிறார்கள். இத்தனை பேர்கள் அதிகமான பம்ப் செட்டுகளை அந்தக் கிரா மத்தில் வைத்துக் கொண்டபோதிலும், முதலில் அக்ரிமெண்ட் எழுதிக் கொடுத்தவர்களிடமிருந்தே அந்த ஆயிரம், இரண்டாயிரம் ரூபாயை வசூ லித்து, கழுத்தைப் போட்டு அமுக்குகிறார்கள். இலாகாவுக்கு அதிக லாபம் வந்துவிட்ட பிறகாவது, அக்ரிமெண்ட் முதலில் எழுதிக் கொடுத்த வர்களிடமிருந்து மினிமம் சார்ஜ் வசூல் செய்யாமல் இருக்கலாம். ஆனால், இன்னும் அம்மாதிரி நடந்துகொண்டு இருக்கிறது.

ஆகையால், இந்த மின்சாரத்தினாலே விவசாயிகளுக்கு எவ்வளவோ நன்மை இருக்கிறது. இப்பொழுது தோட்டங்களிலே கூட நெல் பயிரிடு கிறார்கள். கிணறுகளுக்கு மோட்டார் பம்ப் செட்டுகளைப் பொருத்தி விவ சாயம் செய்து, ஒரு எக்கருக்குச் சுமார் 60 படி கொண்ட 30, 35 மூட்டை கள் மகசூல் எடுக்கிறார்கள். அம்மாதிரி விவசாயம் நடந்து கொண்டிருக் கிறது. ஆகையால், ஏதோ சொன்னார்கள், போனார்கள் என்று சொல்லி கனம் மந்திரி அவர்கள் நினைக்காமல், ஷிப்ட் முறையை நீக்க வேண்டும். என்னுடைய மோட்டார்களே இரண்டு எரிந்து விட்டன ஆகையால், என் னுடைய அனுபவத்தையே நான் சொல்கிறேன். அதைப்போல எங்க ளுடைய ஊரில் அனேக விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, ஷிப்ட் முறை அவசியம் எடுக்கப்பட வேண்டும். மினிமம் சார்ஜ் விஷயமும் கவனிக்கப்பட வேண்டும். இம்மாதிரி செய்தால், விவசாயம் இன்னும் அதிகமாகப் பெருகும் என்பதில் சந்தேகம் இல்லை.

மின்சாரத்தை அதிகரிக்கும் விஷயத்தில் நம்முடைய கனம் அமைச்சர் அவர்கள் அதிக ஊக்கம் எடுத்துக் கொள்கிறார்கள். அந்த டிபார்ட்மென் டில் இருக்கும் முதல் இன்ஜினீர் அவர்களும் வருஷக் கணக்கில் முடிக்கக் கூடிய திட்டத்தை ஒரு வருஷத்திலேயே முடித்து, அதிகமான மின் சாரத்தை உற்பத்தி செய்யக்கூடிய விதத்தில் கவனம் செலுத்திக்கொண் டிருக்கிறார்கள். அது சந்தோஷப்பட வேண்டிய காரியம் தான். அவர் கள் விவசாயிகளுடைய குறைகளைக் கவனிப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. விவசாயத் துறையில் ஸ்ட்ரைக் பண்ண ஆட்கள் இல்லை. ஐயா யிரம் பேர்கள், நாலாயிரம் பேர்கள் ஒன்று சேர்ந்து கத்தமாட்டார்கள். ஏதோ அவர்கள் நிலத்தில் உழைத்துக் கொண்டிருப்பார்கள். மில் தொழிலாளர்கள் மாதிரி பத்தாயிரம் பேர்கள் சேர்ந்து கொண்டு, இந்தக் கட்சி, அந்தக் கட்சி என்றெல்லாம் சொல்லிக்கொண்டு, ஊர்வலம் வந்து கூச்சல் போட்டால் அமைச்சர்கள் ஓடோடியும் செல்கிறார்கள் விவ சாயிகள் வாயில்லாப் பூச்சிகளாக இருக்கிறார்கள். அரசாங்கம் தான் அவர் களுடைய நிலைமையைக் கவனித்து ஆவன செய்யவேண்டும். ஒரு வீட் டில் சாதுவான பிள்ளை இருக்கலாம், வாயாடிப் பிள்ளையும் இருக்கலாம். வாயாடிப் பிள்ளை அழுது ஆர்ப்பாட்டம் செய்து தனக்கு வேண்டியதை வாங்கிக்கொண்டுவிடலாம். ஆனால், சாதுவான பிள்ளையும், நாம் பெற்ற பிள்ளை என்பதை யோசித்துப் பெற்றோர்கள் அந்தப் பிள்ளையையும் கவனிப்பது போல், வாயில்லாப் பூச்சிகளாக இருக்கும் விவசாயிகளையும் அரசாங்கம் கவனித்து, கண்டிப்பாக அவர்களுக்கு மின்சார வசதி அதிக மான அளவில் கொடுத்து உதவ வேண்டும். மினிமம் சார்ஜ், ஷிப்ட் முறை முதலிய கஷ்டங்களைப் போக்கும்படியாகக் கேட்டுக் கொண்டு, என் னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கின்றேன்.

* **SRIMATHI A. S. PONNAMMAL** : கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது அமைச்சர் அவர்களால் கொண்டுவரப்பட்டிருக்கும் மின் சாரக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்பு

கிறேன். மனிதனுக்கு அறிவும் நாகரீகமும் வளர வளர, பலவிதமான தேவைகள் அதிகப்பட்டிருக்கின்றன. நாம் எவ்வளவோ அதிகப்படியான மின்சாரத்தை உற்பத்தி செய்திருந்தாலும், பல பல தொழில்களுக்கும், இன்னும் பல துறைகளுக்கும் மின்சாரம் அதிகப்படியாக தேவைப்படுகிறது. ஆகவே, மேலும் அதிகப்படியாக மின்சாரத்தை உற்பத்தி செய்ய வேண்டிய நிலையில் இருந்து கொண்டிருக்கிறோம்.

என்னுடைய தொகுதியைப் பொறுத்த வரையில், அங்கே மாவூற்றுறு என்ற ஆறு சிறுமலையில் உற்பத்தி ஆகிறது. அதையும் அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்வதற்கான ஏற்பாடு செய்து, அங்கே மின்சாரம் உற்பத்தி செய்வதற்கு வழி செய்தால் அங்கிருக்கும் விவசாயிகளுக்கு நல்லதோர் காரியம் செய்ததாக இருக்கும் என்று கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

மனிதனுடைய முதல் தேவை உடை, உணவு, தொழில், அடுத்தபடியாக கலை. எந்த மனிதனுக்கும் உணவு இல்லா விட்டால், உடை இல்லா விட்டால், அவைகளைத் தேடிக்கொள்ள தொழில் இல்லாவிட்டால், கலை உள்ளம் தோன்றுது என்பது உலகம் அறிந்த உண்மை. எனவே, நாம் இன்றைக்கு நகர்ப் புறங்களில் எடுத்துக் கொண்டால், சினிமாவுக்கு முதல் ஷோ, இரண்டாம் ஷோ மூன்றும் ஷோ, மாட்டினி ஷோ, காலை ஷோ இவைகளுக்கு எல்லாம் அதிகப்படியாக மின்சாரத்தைக் கொடுத்துக்கொண்டிருந்து கிராமத்திலே இருக்கும் ஏழை எளிய விவசாயிகளுக்கு மின்சார வெட்டு செய்வதால் அவர்கள் மிகவும் வருந்தக்கூடிய நிலைமையில் இருக்கிறார்கள். என்னைப்போன்ற விவசாயக் குடும்பத்தில் பிறந்த பெண்கள், கிராமப் புறங்களுக்குச் செல்லும்போது, விவசாயிகள், "எங்களுக்கு மின்சாரம் 'கட்' செய்துவிட்டார்களே, இது நியாயமா ? நாங்கள் தண்ணீர் கட்ட முடியாமல் கஷ்டப்படுகிறோமே" என்று கதறுகிறார்கள். அந்த நிலைமையைப் போக்கவேண்டியது சர்க்காருடைய முதல் கடமையாகும். முதன்மையாக விவசாயத்திற்கான மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டும். இரண்டாவது தொழிலுக்குக் கொடுக்கவேண்டும். விவசாயத்திற்கும் தொழிலுக்கும் கொடுத்து விட்ட பிறகு தான் மூன்றாவதாக கலைக்கு கொடுக்க வேண்டும். அதற்காக, சினிமாவுக்கு மின்சாரம் கொடுக்கவேண்டாம் என்று நான் சொல்வதாக யாரும் நினைத்துக் கொள்ளவேண்டாம். கலைக்கும் ஓரளவு கொடுக்கலாம் என்றாலும்கூட, அதைவிட ஒரு படி அதிகமாக விவசாயத்திற்கு மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டும். விவசாயத்தைப் பொறுத்த வரையில், மின்சார வெட்டு என்பதே இல்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டுமென்று அமைச்சர் அவர்களை ஏழை எளிய விவசாயிகளின் சார்பில் நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அடுத்தபடியாக, என்னுடைய தொகுதியில் பாலமேட்டுப் பகுதி மிகவும் வறண்ட பகுதியாகும். அங்கே தண்ணீர் இல்லாமல் இருக்கிறது. மழை காலங்களில் தண்ணீர் வருகிறது. மழை இல்லாத காலங்களில் கிணறுகள் வறண்டு போய் விடுகின்றன. அப்பொழுது அந்தக் கிணறுகளை அதிகமாக ஆழப் படுத்துகிறார்கள்.

அங்கே இருந்த 32 கிணறுகளுக்கு பம்புசெட்டுகள் வைக்கவேண்டு மென்பதற்காக அவர்கள் செக்யூரிட்டி டெபாசிட்டும் கொடுத்து விட்டார்கள். இது முடிந்து 1½ ஆண்டுகள் ஆகியும் கூட இன்னும் பம்ப் செட்டுகள் வைக்கப்படவில்லை. சமீபத்தில் நான் பாத யாத்திரை சென்ற பொழுது மக்கள் இது பற்றி என்னிடம் முறையிட்டார்கள். எனவே செக்யூரிட்டி டெப்பாசிட் கட்டியிருப்பவர்களுக்கு உடனடியாப் பம்பு செட்டுகள் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 12-30 p.m.

அதோடு கூட நிலக்கோட்டையின் அருகிலுள்ள கவிராயபுரத்தில் 32 கிணறுகளுக்குப் பம்பு செட்டுகள் வைக்க வேண்டுமென்று செக்யூரிட்டி டெப்பாசிட் கொடுத்தும் பம்பு செட்டுகள் வைக்காத படியால் அவர்கள் மனுக்கள் கொடுத்திருக்கிறார்கள். அவ்வாறு மனுக்கள் கொடுத்துப் பல

வருஷங்கள் ஆகியும் கூட இன்னும் கவனிக்கப்படவில்லை என்பதைப் பரிதாபத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த மாதிரியாக இருக்கும் என்னுடைய தொகுதி மக்களுடைய குறைகளை எல்லாம் உடனடியாக நீக்க வேண்டுமென்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாகத் தொழில் அபிவிருத்திக்கு அதிகப்படியான முக்கியத்துவம் கொடுத்திருப்பதாக இந்த அறிக்கையில் நான் பார்த்தேன். என்னுடைய தொகுதியில் ஆறு மாத காலம் வேலை செய்கின்ற பகுதி போக, மீதி ஆறு மாத காலத்தில் வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள் என்று பல தடவை நான் கூறி இருக்கிறேன். என்னுடைய தொகுதியிலுள்ள மக்கள் எல்லாம் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். நிலக்கோட்டைக்கு முக்கால் மைல் தூரத்தில் நிறைய ஆசாரிகள் இருக்கிறார்கள். அவர்கள் மண்வெட்டி போன்ற விவசாயக் கருவிகளைச் செய்து வருகின்றார்கள். அங்கே மின்சார சப்ளை கிடையாது. நிலக்கோட்டையில் அதிகப்படி ஆசாரிகள் இருக்கிற காரணத்தால் அங்கே மின்சார வசதி செய்து கொடுத்தால் விவசாயக் கருவிகள் உற்பத்தி செய்வது பெருகும். அதன் விலையும் குறைவாக இருக்கும். ஒரு மண்வெட்டி ஒரு ரூபாய், ஒன்றரை ரூபாய் என்று முன்பு விவசாயிகள் வாங்கியது போக இப்பொழுது ஆறு ரூபாய், ஏழு ரூபாய் கொடுத்தால் கூட கிடைப்பதில்லை. ஆகவே இந்த "அக்ரிகல்ச்சர்" சம்பந்தப்பட்ட இந்தத் தொழிலுக்கு மின்சார வசதி செய்து கொடுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

குருவபட்டியில் புதிய பித்தளை தொழிற்சாலை ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அந்தத் தொழிற்சாலை ஏற்பட்டிருப்பதன் காரணமாக அங்கே ஓரளவுக்கு வேலை கிடைக்கும் நிலைமை இருக்கிறது. நிலக்கோட்டையில் 100-க்கு 50 பேருக்குக்கூட வேலை கிடைக்கப் போதிய வசதி இல்லை. எனவே அந்தத் தொகுதியை அபிவிருத்தி செய்வதற்குத் தக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். என்னுடையத் தொகுதியில் ஏதாவது தொழிலை ஆரம்பிக்க யோசனை செய்யப்படுகிறதா என்று கேட்கும்பொழுது "நோ" என்று பதில் சொல்லப்படுகிறது. அந்தத் தொகுதியில் "ரா மெடீரியல்ஸ்" ஏராளமாகக் கிடைக்கிறது. செங்கல் மண் அங்கே இருக்கின்றது. நாட்டில் சிமெண்ட் பற்றுக்குறை அதிகமாக இருக்கும் இந்த நேரத்தில், 50,000 ரூபாய் மூலதானம் போட்டு அங்கே ஒரு செங்கல் அறுக்கும் தொழிற்சாலை ஏற்படுத்தினால் நிறைய செங்கல் செய்ய முடியும், சிமெண்ட் இல்லாமலே வெறும் செங்கல்லினால் கட்டிடங்கள் கட்டலாம். அதன் மூலம் சுமார் 200 பேர்களுக்கு மேல் வேலை கிடைக்க வாய்ப்பு ஏற்படும். நாட்டின் சிமெண்ட் பற்றுக்குறையையும் பூர்த்தி செய்ததாக முடியும். இது சம்பந்தமாக டிபுடி டைரக்டர் ஆப் இண்டஸ்ட்ரீஸ் என்னுடைய தொகுதியில் வந்து சுற்றிப் பார்த்ததாக பி.டி.ஓ. மூலமாகத் தெரிந்தது. இப்படி மிகவும் பிற்பட்ட, வரண்ட பகுதியாக இருக்கும் என்னுடைய தொகுதிக்கு மின்சார வசதியைக் கொடுப்பதோடு, அங்கே இருக்கிற மக்களுக்கு வேலை வாய்ப்பையும் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக ஹரிஜனங்கள் இருக்கும் தெருக்களுக்கு அந்த ஊரி பஞ்சாயத்து போர்டில் இருப்பவர்கள் கூட லைட் போடுவதில்லை. அவர்கள் வசிக்கும் பகுதியை ஒதுக்கி விடுகிறார்கள். எங்களிடம் அந்த ஹரிஜன மக்கள் மனுக் கொடுத்திருக்கிறார்கள். தெரு விளக்குகள் போடும்போது எல்லாப் பகுதிகளுக்கும் விஸ்தரிக்க வேண்டுமென்பதுதான் நமது நோக்கம். ஆகவே ஜாதி ஹிந்துக்களின் தெருக்களுக்கு லைட் போடும்பொழுது தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் தெருக்களுக்கும் லைட் போட வேண்டு, மென்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

மின்சாரத்தில் கை வைத்தால் எப்படி ஷாக் அடிக்கிறதோ, அப்படி மின்சார இலாகாவினர் திடீர் திடீரென்று விவசாயிகள் பணம் கட்டவில்லை என்று சொல்லி "ப்யூஸ்" பண்ணிவிட்டுப் போய் விடுகிறார்கள் என்று ஒரு அங்கத்தினர் குறிப்பிட்டார். பனிரெண்டு நாட்களுக்கு முன்பே இவ்வளவு, கரண்ட் ஆகி இருக்கிறது, இவ்வளவு பணம் கட்டவேண்டு

3rd November 1958] [Srimathi A. S. Ponnammal]

மென்பதற்கு மின்சார இலாகாவினர் நோட்டீஸ் கொடுக்கிறார்கள். ஒரு விவசாயி ஒரு மாடு வைத்துக் கொண்டிருந்தால் அதற்குத் தீனி போட மாதாமாதம் 30 ரூபாய் 40 ரூபாய் என்று செலவழிக்கவேண்டி வரும். மின்சாரத்தினால் தண்ணீர் பாய்ச்சுவதன் காரணமாக மாதாமாதம் இந்த மின்சாரத் தொகையைக் கட்டுவதுதான் நல்லது. சர்க்காரிடம் நான் இதைச் செய்யுங்கள், அதைச் செய்யுங்கள் என்று கோரிக்கைகளை வைக்கும்பொழுது, நாமும் நம்முடைய கடமைகளைச் செய்யவேண்டும் என்ற உணர்ச்சி மக்களிடம் வளர வேண்டும். மொத்தமாகச் சேர்த்துக் கட்டிக் கொள்ளலாம் என்றால், வருஷ முடிவில் 300, 400 என்று சேர்ந்து விவசாயிக்குப் பெரும் சுமையாக முடியும். ஆகவே, அம்மையார் ராஜாத்தி குஞ்சிதபாதம் அவர்கள் குறிப்பிட்டது போல் மக்களும் தங்களுடைய கடமையை நன்றாக உணர்ந்துகொள்வதற்கு வாய்ப்பு அளிக்கும் வகையில், மாதாமாதம் இந்தத் தொகையைக் கட்டும்படியாக இருப்பதுதான் நல்லது. வேண்டுமானால் ஒரு மாதமோ, 15 நாட்களோ "ப்யூஸ்" கட் செய்யாமல் இருந்து கட்டவேண்டிய பணத்தை வசூல் செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்படியாக அமைச்சர் அவர்கள் செய்யும்படி தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். திரு. சந்திரசேகரன் அவர்கள் கக்கூஸ், பாத் ரூம், குடி தண்ணீர் வசதிகளுக்காக மின்சார வசதி செய்து கொடுப்பதில் முதலிடம் இருக்க வேண்டும் என்று சொன்னார்கள். அவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களும் கேட்டார்கள். நிச்சயமாக அவற்றுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப் பட வேண்டுமென்று நானும் கூறுகிறேன். பாத் ரூம், கக்கூஸ் என்று தெரியாமல் குழந்தைகள் அதனுள் சென்று அசுத்தம் செய்து விடுகிறார்கள். அதனால் மிகவும் மோசமான நிலைமை ஏற்பட்டு விடுகிறது. தண்ணீர் வசதியும் இல்லாவிட்டால் மிகவும் கஷ்டமாகிவிடுகிறது. ஆகவே பொது சுகாதாரத்தை உத்தேசித்துத் தண்ணீர் சப்ளை எப்பொழுதும் இருப்பதற்கு, கக்கூஸ், தண்ணீர் சப்ளை, பாத் ரூம் முதலியவற்றுக்கு மின்சார வசதி அளிப்பதில் முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

சாகுபடி செய்யப்படும் நிலங்களின் விஸ்தீரணம் அதிகப்பட்டுக் கொண்டிருப்பதன் காரணமாகத் தேவையும் அதிகப்பட்டுக் கொண்டிருக்கின்றது. அதற்காக இன்னும் கொஞ்சம் பணத்தை ஒதுக்கிப் பம்பு செட்டுகளின் எண்ணிக்கையை ஒரு லட்சம் என்று ஆக்கினால் விவசாயப் பெருங்குடி மக்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri K. PERIANNAN**: கனம் சபாநாயகர் அவர்களே, நமது மின்சார அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் மின்சார போர்டின் 1957–58-ம் வருஷ அறிக்கையை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இப்பொழுது மின்சாரத்தின் உபயோகத்தைப் பற்றிப் பல அங்கத்தினர்கள் நல்லமுறையில் சொல்லியிருக்கிறார்கள். என்னுடைய ஏரியா மின்சாரவசதி விஷயத்தில் மிகவும் பிற்பட்ட ஏரியா என்றுதான் இச்சந்தர்ப்பத்தில் சொல்லவேண்டியிருக்கிறது. எங்கள் ஏரியாவுக்குச் சென்ற ஆண்டுதான் மின்சாரம் வந்திருக்கிறது. அதுவும் பெரம்பலூரில் மட்டும்தான் இருக்கிறது. அதை இன்னும் பல கிராமங்களுக்கு விஸ்தரித்து விவசாய மக்கள் வாழும் அந்தப் பிரதேசத்திலே மின்சாரத்தை விவசாயத்திற்குப் பயன்படுத்தும் முறையில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

(Deputy Speaker in the Chair.)

இரண்டாவதாக, நமது அமைச்சர் அவர்கள் சேரிகளுக்கு இரண்டு லட்சம் ரூபாய் வருஷாவருஷம் ஒதுக்கப்பட்டிருப்பதாக குறிப்பிட்டிருக்கிறீர்கள். அதை மிகவும் வரவேற்று நல்ல முறையிலே சேரிகளுக்கு மின்சாரம் கொடுத்து உதவி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri K. Periannan] [3rd November 1958

எங்கள் ஏரியாவிலே கம்பெனியாரால் மின்சார சப்ளை செய்யப்படுகிறது. அவர்களால் மின்சார வசதியை விஸ்தரிக்கவும் முடியவில்லை. சர்க்காரும் அதைத் தேசிய மயமாக்கி எடுத்து நடத்தமுடியாது பல கஷ்டமான சூழ்நிலைகளும் இருக்கின்றன. இதன் காரணமாக அந்தப் பிரதேசத்திலுள்ள மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே சர்க்கார் இந்தக் கம்பெனியாருக்குக் கடன் கொடுத்தாவது இந்த ஏரியா பூராவுக்கும் மின்சார வசதியை விஸ்தரிப்பதற்கு வேண்டிய ஏற்படுகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

12-40 p.m. SRI A. GOVINDASAMY : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, அமைச்சர் ஸ்ரீ ராமையா அவர்கள் கொண்டு வந்திருக்கிற மின்சார போர்டு வருடாந்திர அறிக்கை மீது என்னுடைய கருத்தைச் சொல்லவிரும்புகிறேன்.

நமது தமிழ் நாட்டில் ஏழாயிரம் கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரித்திருப்பதைப் பெருமையாகக் கூறுகிறார்கள். ஆனால் நமது நாட்டில் எவ்வளவு கிராமங்கள் மின்சாரம் இல்லாத நிலையில் இருக்கிறதென்பதைக் கணக்குப் பார்க்கும்போது ஏழாயிரம் கிராமங்களுக்கு விஸ்தரிப்பதைப் பெருமையாகக் கொள்வதற்கில்லை என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இருபதாயிரம் கிராமங்களுக்கு இந்த ராஜ்யம் பூராவிலும் மின்சாரம் தேவை என்று சொல்கிற நேரத்தில் ஏழாயிரம் கிராமங்களுக்கு விஸ்தரித்துவிட்டோம் என்று இன்றைக்கு இவர்கள் சொல்கிறதைப் பார்த்தால் எத்தனை ஐந்தாண்டுத் திட்டங்கள் வரவேண்டுமோ முழுவதுமாக விஸ்தரிக்கப்படுவதற்கு என்கிற ஐயம் நமக்கு இல்லாமலில்லை. ஆனால் இதற்காகச் சர்க்காரைப் பாராட்டுகிறார்களே என்றால் இந்த ஏழாயிரம் கிராமங்களுக்காவது விஸ்தரித்திருக்கிறார்களே என்பதற்காகத்தான் இந்தப் பாராட்டு என்று சொல்லாமல் இருக்க முடியாது. செய்திருக்கக் கூடிய இந்தக் குறைவான காரியங்களுக்காக ஸ்ரீ ராமையா அவர்களை இறைவனுக்கு ஒப்பிட்டு . . . .

SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, on a point order. Even a hon. Member should not be referred to by name but only as the hon. Member representing such and such a constituency. Therefore, is it in order for the hon. Member to refer to the Hon. Minister by name?

DEPUTY SPEAKER : If he does not know a Member's constituency, he has only to refer him by name.

SRI A. GOVINDASAMY : எங்கள் மாவட்டத்தைப் பொறுத்த வரையிலும் முன்பு மின்சார சப்ளை கார்ப்பரேஷன் தனியாரிடத்தில் இருந்தபோது என்ன என்ன சலுகைகள் மக்களுக்கு இருந்ததோ அது கூட இப்போது இல்லை. அந்தக் கம்பெனியைச் சர்க்கார் தேசீயமாக்கி, போர்டின் நிர்வாகத்திற்கு வந்த பிறகு. நான் முன்பு ஒரு தடவை எங்கள் தென்னாற்காடு மாவட்டம் மின்சார விநியோகத்திலும் கூடப் புறக்கணிக்கப்படுகிறது என்று குறிப்பிட்டபோது எந்தப் புள்ளிவிவரத்தைக் கொண்டு நான் பேசுவதாக கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அவர்களே இன்றையதினம் சமர்ப்பித்திருக்கிற புள்ளிவிவரத்தைப் பார்க்கலாம். எங்கள் தென்னாற்காடு மாவட்டத்திலே ரெவினியூ கிராமங்கள் 2,256 இருக்கிறது. அவற்றில் மின்சாரம் விஸ்தரிக்கப்பட்ட கிராமங்கள் 205 தான்.பத்தில் ஒரு பாகம் கூட அங்கே விஸ்தரிக்கப்படவில்லை என்பதைத்தான் பார்க்கிறோம். அதே சமயத்தில் செங்கல்பட்டு ஜில்லாவில் 2,054 கிராமங்கள் இருக்கின்றன. அவற்றில் 917 கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. அதேபோல கோவை ஜில்லாவில் உள்ள ரெவின்யூ கிராமங்கள் 941. அதில் 926 கிராமங்களுக்கு மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். வடநாடு அரசாங்கம் தென்னாட்டைப் புறக்கணிக்கிறது என்று நாங்கள் அடிக்கடி சொல்வோம் என்று அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். சென்னை அரசாங்கம் தென்னாட்டிலும் தென்னாற்காடு

3rd November 1958] [Sri A. Govindasamy]

ஜில்லாவைப் புறக்கணிக்கிறது என்று நான் குறிப்பிடவேண்டிய நிலைமையில் இருக்கிறேன் என்பதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. இதை நான் சொல்கிற நேரத்தில் மின்சார விஷயத்தில் வடநாடு மங்கிப் போய் தென்னாடு பொங்கப்போய்விட்டது என்று காங்கிரஸ்காரர்கள் தங்கள் பேச்சை ஆரம்பித்தாலும் கூட கடைசியில் தம்முடைய பேச்சை முடிக்கிற நேரத்தில் "ராமையா கொஞ்சம் திரும்பிப் பாரையா" என்று தங்கள் தொகுதியைச் சுட்டிக் காட்டினார்கள்.

DEPUTY SPEAKER: It is desirable that the hon. Member does not mention his name but refers to him as the Hon. Minister for Electricity.

SRI A. GOVINDASAMY: ஒரு அங்கத்தினர் இங்கே குறிப்பிட்டதைத்தான் நான் சொன்னேன். துணைத்தலைவரின் ஆணைக்கு அடங்கி அவர் அப்படிப்பேசியதும் தவறு என்றால் நானும் பேசியது தவறு என்பதை ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆகவே பாராட்டினாலும், புகழ்ந்தாலும் கடைசியில் அவர்கள் குறிப்பிட்டது போல எல்லா இடங்களிலும் மின்சாரம் குறைவு தான் என்பதைத் குறிப்பிட விரும்புகிறேன்.

எங்கள் மாவட்டத்தில் இருந்த தனியாரிடம் இருந்து மின்சார வினியோக கார்ப்பரேஷனை போர்டார் எடுத்துக்கொண்டபின் என்ன நிலைமை இருக்கிறது என்பதைச் சொல்ல விரும்புகிறேன். முன்பு ஊழியர்கள் 20 ரூபாய் அலவன்சு வாங்கினால் இப்போது 34 கொடுக்கப்படுகிறது. ஆனால் முன்பு 80 ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குபவர்கள் 20 யூனிட் வரையிலும் இலவசமாக உபயோகித்துக்கொள்ளலாம், 40 ரூபாய்க்கு மேல் 80 ரூபாய் வரையிலும் 10 யூனிட் வரையில் உபயோகித்துக் கொள்ளலாம் என்று இருந்த சலுகை இப்போது நிறுத்தப்பட்டுவிட்டது. அதேசமயத்தில் விவசாய மக்களுடைய நிலைமையாவது முன்னேறியிருக்கிறதா என்று பார்த்தால் அதுவும் இல்லை. அமைச்சர் அவர்களுடைய உரையில் 14 மணி நேரம் அவர்களுக்குச் சப்ளை செய்யப்படுவதாகச் சொன்னார்கள். எங்கள் மாவட்டத்தைப்பொறுத்த வரையில் 10 மணிக்கு மேல் வழங்கப்படுவதே இல்லையென்பதை இங்கே குறிப்பிடவிரும்புகிறேன்.

இதேசமயத்தில் இரவு நேரங்களில் விவசாயிகளுக்கு மின்சாரம் சப்ளை செய்வதனால் கொங்கு நாட்டிலே பருத்தித் தோட்டத்தில் பாம்புகள் கடித்து விவசாயிகள் சாகக் கூடிய நிலைமை எவ்வாறு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதைப்பற்றி ஒரு அங்கத்தினர் குறிப்பிட்டார். என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டால் கரும்புத் தோட்டத்திலும், வெற்றிலைக் கொடிக்காலிலும் இரவு நேரங்களில் அவர்கள் தண்ணீர் பாய்ச்சும்போது அடைகிற துன்பம் கொஞ்சநஞ்சமல்ல என்று குறிப்பிடுவேன். இப்படி விவசாயிகளுக்கு இரவு நேரங்களில் மின்சாரம் சப்ளை செய்வதை நிறுத்தி பகல் வேளைகளில் சப்ளை செய்ய என்ன ஏற்பாடு செய்யப்போகிறார்கள் என்பது ஒன்றும் தெரியவில்லை.

மேலும் ஒரு கிராமத்திற்கு மின்சாரம் விஸ்தரிக்கவேண்டுமென்று மனுச் செய்துகொண்டால் அந்த மனு ரிஜிஸ்டர் செய்யப்பட்டு ப்ரையாரிட்டி லிஸ்டில் வைத்துக்கொண்டு செய்யப்படுவதாகச் சொல்லுகிறார்கள். அப்படி ப்ரையாரிட்டி லிஸ்டில் இருக்கக்கூடிய கிராமங்களைக் கூட விலக்கிவிட்டு வேறு கிராமங்களுக்கு மின்சார வசதி செய்து கொடுக்கப்பட்டு இருப்பது எனக்குத் தெரியும். என்னுடைய வளவனூர் தொகுதியில் பனங்குப்பம் என்று ஒரு கிராமம் இருக்கிறது. அந்த கிராமத்தைச் சேர்ந்தவர்கள் எங்களுக்கு மின்சார விஸ்தரிப்புக் கொடுக்கவேண்டுமென்று கேட்டபொழுது நீங்கள் இதர சாமான்கள் எல்லாவற்றையும் வாங்கிவைத்துக்கொள்ளுங்கள். பம்பு செட்டுகள் எல்லாம் தயாராக வைத்துக்கொள்ளுங்கள். அவை எல்லாம் தயாராக வைத்துக்கொண்டால் மின்சார விஸ்தரிப்புச் செய்து விடுகிறோம் என்று சொல்லுகிறார்கள். அதை எழுத்து மூலமாகக் கேட்டால் கொடுக்கமாட்டேன் என்று சொல்லுகிறார்கள். இவர்களுடைய வார்த்தையை நம்பி ஒவ்வொரு விவசாயியும் 300, 400 என்று செலவு செய்து பம்பு செட்டுகள் எல்லாம் வாங்கிவிட்டால் இவர்களும் உடனே மின்சார

[Sri A. Govindasamy] [3rd November 1958

விஸ்தரிப்பைச் செய்யாது போனால் விவசாயிகள் எவ்வளவு நஷ்டத்துக்கு உள்ளாவார்கள் என்று சொல்வதற்கில்லை. இந்த விஷயத்தைக் குறித்து அமைச்சர் அவர்களுக்கும் சொல்லி இருக்கிறேன். அவர்கள் இதைக் கவனிக்கவேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக பெண்ணாடம்—விருத்தாசலம் பகுதி சர்க்காருடைய வட்டம். பெண்ணாடம் வட்டத்திற்கு மின்சாரம் வழங்குவதற்காக 5 லட்சம் ரூபாய் செலவில் ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு முடிவாகி இருக்கிறது. அந்தத் திட்டம் முடிவாகிவிட்டது என்று மக்களெல்லாம் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்த தருவாயில் இப்போழுது புதுப் பிரச்னை கிளம்பி இருக்கிறது. பி. டபிள்யூ. டி. இலாகாவினர் அம்மாதிரி மின்சாரம் விஸ்தாரிக்கப்பட்டு பம்பு செட்டுகளுக்கு கனெக்ஷன் கொடுக்கப்பட்டால் கால்வாயில் உள்ள நீரெல்லாம் உறிஞ்சப்படும் என்று தடையெழுப்பி அந்தத் திட்டத்திற்குக் குறுக்கே நிற்பதாகத் தெரிகிறது. இப்பொழுது அங்கே ஆயில் பம்புகள் வேலை செய்துகொண்டிருக்கின்றன. இந்த ஆயில் பம்புகள் மட்டும் கால்வாயின் நீரோட்டத்தை உறிஞ்சாதா என்பதை அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே பி. டபிள்யூ. டி. ஆட்சேபணையை நிராகரித்து அந்தத் திட்டத்தைப் பூர்த்தி செய்து கொடுக்கவேண்டுமென்பதாக நான் கேட்டுக்கொள்கிறேன்.

ஒரு நாட்டுக்கு ஒரு நாடு உதவி செய்யவேண்டுமென்கிற நல்ல கருத்தை நான் ஒத்துக்கொள்கிறேன். நம்முடைய நாட்டிலிருந்து ஆந்திரம், மைசூர் முதலிய ராஜ்யங்களுக்கு மின்விசை சப்ளை செய்வதை அம்மாதிரி செய்யக் கூடாது என்று தடுக்க நான் வரவில்லை. ஆனால் ஒரு நாட்டுக்கு ஒரு நாடு உதவி செய்யவேண்டுமென்ற நல்லெண்ணத்திலே நம்முடைய சர்க்கார் நம்முடைய தேவையே பூர்த்தியாகாத நேரத்தில் அண்டை ராஜ்யங்களுக்கு மின்விசை சப்ளை செய்து கொண்டிருக்கிற சமயத்தில் அண்டை ராஜ்யங்கள் நம்மிடத்தில் எவ்வாறு நடந்துகொள்கின்றன என்பதையும் கவனிக்காமல் இருக்கமுடியாது. திருத்தணி தாலுகா ஆந்திர தேசத்தில் இருந்தபோது அதில் இருந்த சவகர் கிராமத்திற்கு மின்சாரம் வழங்கப் படவேண்டும் என்ற திட்டம் போடப்பட்டு அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் ஆந்திர அரசாங்கம் செய்தது. ஆனால் படாஸ்கர் தீர்ப்பு வெளிவந்தவுடனேயே அந்தத் திட்டத்தை அவர்கள் கை விட்டதோடு அங்கே ஏற்கெனவே நடப்பட்ட போஸ்டுகள் கூட இப்பொழுது அகற்றப்
12-50 p.m. பட்டு வருவதாக அறிகிறேன். நாம் அவர்களுக்குச் செய்கிற நன்மைக்கு இதுதானா அவர்கள் காட்டுகின்ற நன்றி என்பதை அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டுமென்றும் நான் கேட்டுக்கொள்கிறேன். நாடு மாறலாம் ஆனால் அங்குள்ள மக்கள் நம் மக்கள்.

மின்சார போர்டு ஊழியர்கள் தங்களுடைய சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்றும், சலுகைகள் தரவேண்டுமென்றும் கோரினார்கள். அவர்களுடைய கோரிக்கைகளைப் பரிசீலிப்பதற்கு அரசாங்கத்தார் ஒரு கமிட்டியை நியமித்தார்கள். அக்கமிட்டியும் சிபாரிசுகள் செய்திருக்கிறது. அந்த சிபாரிசுகளை சர்க்கார் ஏன் இன்னும் அமலுக்குக் கொண்டு வரவில்லை ? அந்தச் சிபாரிசுகளை அமலுக்குக் கொண்டு வருவதற்கான நடவடிக்கைகளை உடனடியாக எடுக்க வேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்கிறேன்.

மின்சார போர்டார் அரசாங்கத்திடமிருந்து 70 கோடி ரூபாய் கடன் வாங்கினார்கள். அரசாங்கம் அந்தக் கடனை 5½ சதவிகித வட்டிக்கு கொடுத்திருக்கிறது. மின்சார போர்டிற்கு பொதுமக்கள் 4½ சத விகித வட்டிக்குக் கடன் கொடுக்கத் தயாராயிருக்கும்போது, அரசாங்கம் அதற்கு ஏன் 5½ சதவிகித வட்டிக்குக் கடன் கொடுக்க வேண்டும் ? அரசாங்கம் வியாபார நோக்கத்துடன் செயல்பட்டால் மக்களுக்கு நன்மை செய்ய முடியாது. இவ்வாறு அதிக வட்டிக்கு மின்சார போர்டிற்கு அசாங்கம் கடன் கொடுத்தால், மின்சார போர்டு ஊழியர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுப்பதற்கு தாங்கள் கொடுக்கும் பணத்தை இந்த வட்டியின் மூலம் திரும்பப் பெற்று விடுகிறார்கள் என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

3rd November 1958] [Sri A. Govindasamy]

சர்க்கார் இலாகாவில் காரியதரிசியே மின்சார போர்டின் தலைவராக இருப்பது தவறு என்பது தான் என் கருத்து. மின்சாரத்தில் விசேஷ அறிவுள்ள ஆபீசர்கள்—சீப் எஞ்சினியர்கள்—இருக்கிறார்கள். அவர்களில் யாரையாவது இந்த போர்டிற்குத் தலைவராகப் போட்டால் போர்டு நல்ல முறையில் நிர்வகிக்கப்படும். மின்சாரத்தில் அனுபவமுள்ள ஒருவரை அதற்குத் தலைவராகப் போடாமல் சர்க்கார் காரியதரிசியை ஏன் தலைவராகப் போட வேண்டும்? அந்தப் போர்டிலுள்ள அங்கத்தினர்களில் 4–5 சட்ட சபை அங்கத்தினர்களும் சட்ட மன்ற அங்கத்தினர்களும் இருக்கிறார்கள். அவர்கள் எந்த அடிப்படையில் அங்கே போடப்பட்டிருக்கிறார்கள். அவர்களில் ஸ்ரீ வி. ஆர். ராமசாமி, எம்.எல்.ஏ. ஒருவராவார். அவர் எந்த அடிப்படையில் அங்கே அங்கத்தினராகப் போடப்பட்டிருக்கிறார்? அவர் ஒரு கம்பெனிக்காரர். கம்பெனிக்காரர்கள் சார்பில் அவர் அந்த போர்டில் அங்கத்தினராக நியமிக்கப்பட்டிருக்கிறாரா, அல்லது எம்.எல்.ஏ. என்பதால் நியமிக்கப்பட்டிருக்கிறாரா? சட்டசபை அங்கத்தினர்களை அதில் மெம்பராக நியமிக்கும்போது மின்சார உற்பத்தி நிலையங்களுள்ள பிராந்தியங்களைச் சேர்ந்த மெம்பர்களை அதில் அங்கத்தினராக நியமித்தால் நன்றாக இருக்கும் என்று ஸ்ரீ மாதா கௌடர் சொன்னார். அப்போது அவரை நாங்கள் உற்றுப்பார்த்ததும், "என்னை அதில் மெம்பராகப் போட வேண்டுமென்பதற்காக இவ்வாறு சொல்கிறேன் என்று யாரும் நினைக்க வேண்டாம்" என்று சொன்னார்.

அந்த அந்தப் பிராந்தியங்களில் கன்ஸ்ட்ரக்ஷன் எஞ்சினியர், கமர்ஷியல் எஞ்சினியர், மெய்ண்டினன்ஸ் எஞ்சினியர் ஆகிய 3 எஞ்சினியர்கள் இருக்கிறார்கள். ஏதாவதொரு காரியம் சாதிக்க வேண்டுமானால் இந்த 3 எஞ்சினியர்களையும் பார்த்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. ஒரே எஞ்சினியரிடம் மூன்று விதமான பொறுப்புகளையும் ஒப்படைத்தால் நன்றாக இருக்கும். ஒரே எஞ்சினியரே மூன்று பொறுப்புகளையும் நிர்வகிக்க முடியும். கமர்ஷியல் எஞ்சினியர் மெய்ண்டினன்ஸ் எஞ்சினியருடன் கலந்து பேசுவதில்லை.

எங்கள் மாவட்டத்தில், "தெர்மல் ஸ்டேஷன்" வரும் என்று இது வரையில் சர்க்கார் சொல்லிவந்தார்கள். சமீபத்தில் ஒரு உப கேள்விக்குப் பதிலளிக்கும்போது அந்தத் திட்டம் கைவிடப்பட்டிருக்கிறது என்று கனம் அமைச்சர் சொன்னார். விவசாய இலாகா அமைச்சர் அவர்கள் ஒரு உப கேள்வியின் பதிலுக்குத் திருத்தம் சொன்னபோது இந்தத் தகவல் தெரிந்தது. இந்த விஷயத்தில் கனம் அமைச்சர்கள் ஒரு திட்டவட்டமான முடிவிற்கு வர வேண்டும். தெர்மல் ஸ்டேஷன் வந்தால் அது எந்த விதத்தில் பயன்படுத்தப்படும் என்பது பற்றி மேல் சபையிலிருந்து ஒரு குரல் கேட்டது. விவசாயிகளுக்குப் பயன்படும் முறையில் அது இயங்கும் என்று தெரிவிக்கப்பட்டது. அதைக் கேட்கும்போது விவசாயிகளுக்குச் சந்தோஷம் ஏற்பட்டது. ஆனால் இங்கே கேள்வி நேரத்தில் கனம் அமைச்சர் நான் முன்பு குறிப்பிட்டபடி பதில் சொன்னதற்குக் காரணம் என்ன? இந்த அசாங்கம் இது சம்புந்தமாகத் திட்டவட்டமான முடிவிற்கு வரவேண்டும். விவசாயிகளுக்கு மின்சாரம் அளிக்கப்படும் போது அதற்கான கட்டணத்தை போர்டார் குறைத்திருக்கிறார்களா? கம்பெனி மின்சாரம் வினியோகித்தபோது 5¾ அணா கட்டணம் வசூலித்ததென்றால் இப்போதும் அதே 5¾ அணா வசூலிக்கப்படுகிறது.

**Sri K. S. ARDHANAREESWARA GOUNDER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மின்சார போர்டின் வரவு செலவுக் கணக்கின் பேரில் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நம் மாநிலத்தில் பல பகிய மின்சார நிலையங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இது மகிழ்ச்சிக்குரிய விஷயம். பல சிறிய விவசாயிகளின் பம்பு செட்டுகளுக்கு மின்சாரம் வினியோகிக்கப்படுகிறது. இதைப் பாராட்டுகிறேன். மின்சார உற்பத்தி நிலையங்களுக்கு கனம் மின்சார அமைச்சர் சென்றால் நிலையத்தை வெறுமனே பார்த்து விட்டு வருவதில்லை. அவர் மேட்டூரிலுள்ள மின்சார உற்பத்தி நிலையத்தைப் பார்க்க வந்தபோது இதை நான் தெரிந்துகொண்டேன். நிலையத்தில் எல்லா வற்றையும் அவர் மிகவும்

நுணுக்கமாகக் கவனிக்கிறார். ஒவ்வொரு இடத்திற்கும் செல்கிறார். அங்கேயுள்ள தொழிலாளிகளுக்கு என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்று விசாரிக்கிறார். அங்கே வர்க்ஷாப்பில் என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்று விசாரிக்கிறார். அந்தக் கஷ்டங்களைத் தெரிந்துகொண்டு அவைகளை நிவர்த்தி செய்ய முயற்சிக்கிறார். இதை நான் மிகவும் பாராட்டுகிறேன். மேட்டூரில் அலுமினியத் தொழிற்சாலை ஏற்படுத்த வேண்டுமானால் அங்கே மிகவும் அதிகமாக மின்சாரம் உற்பத்தி செய்யப்பட வேண்டுமென்று சொல்லப்படுகிறது. மேட்டூர் மின்சார உற்பத்தி நிலையம் நிறுவப்பட்டபோது மின்சாரம் இங்கே அதிகமாகத் தேவைப்படாமல் இருந்ததால் அதிக மின்சாரம் உற்பத்தி செய்யக்கூடியதாக அந்த நிலையத்தை அமைக்கவில்லை. ஆனால் இப்போது அங்குள்ள தண்ணீர் முழுவதையும் உபயோகப்படுத்தி மின்சாரம் உற்பத்தி செய்வதற்கான திட்டம் பரிசீலிக்கப் பட்டுவ கிறது. அந்தத் திட்டத்தைச் சீக்கிரம் நிறைவேற்றி விட்டால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் அலுமினியத் தொழிற்சாலைக்குத் தேவைப்படும் மின்சாரத்தை அங்கே உற்பத்தி செய்ய முடியும் என்பது கனம் அமைச்சருக்குத் தெரியும். இதைக் கனம் அமைச்சர் மத்திய சர்க்காரிடம் தெரிவித்துத் திட்டத்தை நிறைவேற்றுவார்கள் என்று நம்புகிறேன்.

முன்பு சர்க்காரே மின்சார இலாகாவை நடத்தி வந்தது. போர்டால் நன்மை ஏற்பட்டிருக்கிறதாவென்று பார்த்தால் ஒன்றும் ஏற்படவில்லை என்றுதான் சொல்லவேண்டும். அந்த இலாகாவை சர்க்காரே நடத்தினால் நன்றாக இருக்கும் என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். ஏனென்றால், போர்டில் இருக்கிறவர்களுக்கு இலாகாவில் அக்கறை குறைவாக இருக்கும் என்பதுதான் என் அபிப்பிராயம். எல்லா மாநிலங்களிலும் மின்சார போர்டுகள் ஏற்பட்டால் கடைசியில் அவைகளையெல்லாம் மத்திய சர்க்கார் எடுத்துக்கொள்ளும் என்றும், அவ்வாறு எல்லா ராஜ்யங்களின் மின்சார இலாகாவும் மத்திய சர்க்காரின் கீழ் வரும்போது மின்சார திட்டங்கள் சம்பந்தப்பட்ட வரையில் ராஜ்யங்களுக்கிடையில் உகந்த சூழ்நிலை நிலவும் என்றும், எல்லா ராஜ்யங்களிலும் நல்ல மின்சாரத் திட்டங்களை நன்றாக நிறைவேற்ற முடியும் என்றும் எதிர்ப்பார்க்கப்படுகிறது.

இதர மாநிலங்களுடன் ஒப்பிட்டுப்பார்த்தால், நம் மாநிலத்தில் விவசாயிகளுக்கு மின்சார வினியோகத்திற்கு மிகவும் குறைவான கட்டணம் விதிக்கப்படுகிறது. மற்ற மாநிலங்களில் விவசாயிகளுக்கு மின்சார வினியோகத்திற்கு அதிகக் கட்டணம் விதிக்கப்படுகிறது. உணவு உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கு விவசாயிகளுக்கு உற்சாக மூட்டுவதற்காக அவர்களுடைய பம்புசெட்டுகளுக்கு வினியோகிக்கப்படும் மின்சாரத்திற்குக் கட்டணத்தைக் குறைக்க வேண்டுமென்று கனம் அமைச்சரிடம் சொன்னால், மற்ற மா நிலங்களில் உள்ளதை விட மிகவும் குறைவான கட்டணத்திற்கே இந்த மாநிலத்தில் சர்க்கார் விவசாயிகளுக்கு மின்சாரம் வினியோகிக்கிறது என்று சொல்கிறார். மற்ற மாநிலங்களில் அவ்வாறு இருக்கிறதென்றால், அங்கெல்லாம் பம்பு செட்டுகள் மூலம் தண்ணீர் இறைப்பவர்கள் மிகவும் குறைவு என்பதுதான் என் அபிப்பிராயம். கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோவிந்தசாமி, தென்னாற்காடு மாவட்டத்தில் விவசாய அபிவிருத்தி ஏற்படவில்லை என்று சொன்னார். அதற்குக் காரணம் அங்கெல்லாம் விவசாயிகள் கிணறுகளிலிருந்து பம்பு செட்டு இல்லாமல் தண்ணீர் இறைக்காததுதான் என்று நினைக்கிறேன். சேலம், கோயம்புத்தூர் போன்ற ஜில்லாக்களில், குறிப்பாக, திருச்சிபுரம், ராசங்கரோடு தாலூகாக்களில், விவசாயிகள் 150—200 அடி ஆழமுள்ள கிணறுகளிலிருந்து தண்ணீர் இறைக்கிறார்கள். விவசாயப் பம்பு செட்டுகளுக்கு மின்சாரக் கட்டணம் குறைவாக இருந்தால் விவசாயிகள் உற்சாகத்துடன் உணவு உற்பத்தியை இன்னும் அதிகமாகப் பெருக்குவார்கள். உணவு உற்பத்தி பெருகினால் விலைவாசிகள் குறையும். ஒன்றிரண்டு பம்பு செட்டுகள் வைத்திருக்கும் சிறிய விவசாயிகளுக்குக் குறைந்த கட்டணத்தில் மின்சாரம் வினியோகிக்க வேண்டும். ஆழமான கிணறுகளிலிருந்து தண்ணீர் இறைப்பவர்களுக்கும் குறைந்த கட்டணத்தில் விவசாயப் பம்பு செட்டுகளுக்கு மின்சாரம் வினியோகிக்க வேண்டும். அவ்வாறு செய்தால்தான் அவர்களுக்கு

3rd November 1958] [Sri K. S. Arthanareeswara Goundar]

பம்பு செட்டுகளின் மின்சார கட்டணத்திற்காகச் செய்ய வேண்டிய செலவு குறையும். இந்த விஷயத்தில் கனம் அமைச்சர் வேறு மாநிலங்களுடன் இந்த மாநிலத்தை ஒப்பிடாமல் இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறேன். ஏனென்றால் தென்னாட்டில் சேலம், கோயம்புத்தூர் ஆகிய ஜில்லாக்களிலும் இன்னும் பல ஜில்லாக்களிலும் விவசாயிகள் சிறந்த முறையில் விவசாயம் செய்கிறார்கள். அவர்களுடைய பம்பு செட்டுகளுக்குக் குறைந்த கட்டணத்தில் மின்சாரம் கொடுத்தால்தான் அவர்களுக்கு உணவு உற்பத்தியைப் பெருக்க உற்சாகம் ஏற்படும் என்பது என் அபிப்பிராயம்.

அது தவிர மேட்டூரில் கரெண்ட் உற்பத்தி செய்து வருகிறோம். அங்கு 1 p.m.
இருக்கக்கூடிய தொழிலாளர்கள் வீடுகள் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அதைப்பற்றி இங்கு எடுத்துச் சொன்ன காரணத்தினாலும், அமைச்சர் அவர்கள் அங்கு நேரில் சென்று பார்த்ததினாலும் இந்த வருடமே வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. வீடுகள் கட்டுகிறார்கள் என்றால், பெரிய உத்தியோகஸ்தர்களுக்குத்தான் வீடுகள் கட்டுகிறார்களே தவிர தொழிலாளர்களுக்கு அல்ல. அங்குள்ள தொழிலாளர்களைப் பொறுத்த மட்டில் அங்கு சர்க்கார் ஆயிரக் கணக்கான தொழிலாளர்களை தினக் கூலிகளாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதாவது, ஐந்து, பத்து வருடம் சர்க்காரில் டெம்பரரியாக இருக்கிறார்கள். சர்க்கார் ஊழியர்களுக்கும் கிடைக்கும் எந்தவிதமான சலுகைகளும் அவர்களுக்குக் கிடைப்பதில்லை. சர்க்கார் நினைத்தால் அவர்களை அடுத்த நாளே அப்புறப்படுத்தி விடலாம். அதை அமைச்சர் அவர்களிடம் தெரியப்படுத்தி அவர்களை [illegible] வேலையில் அமர்த்த வேண்டியிருக்கிறது. ஆகவே, இப்பொழுது அங்கு வேலை செய்யும் தொழிலாளர்களை உடனடியாகப் பர்மனெண்ட்டாக வேலைக்கு எடுத்துக்கொண்டால் நன்றாக இருக்கும். அது தவிர மேட்டூரில் உள்ள எக்ஸிக்யூட்டிவ் என்ஜினியர், சூப்பரெண்டிங் என்ஜினியர், டிவிஷனல் என்ஜினியர் திருச்சியில் இருக்கிறார்கள். அவர்கள் அப்படித் தூரத்தில் இருப்பதால் விவசாயிகள் அவர்களைச் சென்று பார்ப்பதற்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அதோடு சர்க்காருக்கு அதிகச் செலவும் ஆகிறது. அதோடு நிர்வாகத்தை நடத்துவதற்கும் கஷ்டம் அதிகமாகிறது. ஆகவே அவர்களை ஆங்காங்கு தனித்தனியாக சமீபத்திலே வைத்தால் நன்றாக இருக்கும். சேலத்தில் ஒரு டிவிஷனல் என்ஜினியரை அமைத்தால் நன்றாக இருக்கும். ஏனெனில், இப்பொழுது சேலத்தில் உள்ளவர்கள் அவரைக் காண வேண்டுமென்றால் திருச்சிக்குப் போகவேண்டியிருக்கிறது. ஆக, அவர்களைச் சந்திப்பது மிகவும் கஷ்டமாயிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்களுக்குத் தெரியப்படுத்திக் கொள்கிறேன். அடுத்தபடியாக, மேட்டூரில் இருக்கக்கூடிய ஹரிஜன காலனிகளுக்கு இன்னும் விளக்குகள் போடாமல் இருக்கிறார்கள். பல இடங்களிலும், ஹரிஜன சேரிகளுக்கு விளக்குகள் போடவேண்டுமென்று சர்க்கார் சொல்லிக்கொண்டிருக்கும்போது மின்சாரம் உற்பத்தியாகும் இடத்தில் இருக்கும் ஹரிஜன மக்களுக்கு விளக்கு இல்லை என்றால் அது மிகவும் வருத்தப்படக்கூடிய காரியமாகும். அதை, டௌண்ஷிப் கமிட்டி என்பதால் விடப்பட்டிருக்கிறது என்று சொல்கிறார்கள். அடுத்த பட்ஜெட் வருடத்திற்குள்ளாகவாவது அங்கு மின்சார விளக்கு கொண்டுவர ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்த இலாகாவில் வேலை செய்யக்கூடிய மக்களின் வீட்டிற்குச் சென்றால் அங்கு விளக்கு இல்லையென்றால் அது மிகவும் வருந்தக்கூடிய விஷயமாகும். அதைப்பற்றி இங்கு சட்டசபையில் எடுத்துச் சொல்லியும்கூட அதைச் சர்க்கார் கவனிக்காமல் இருப்பதைக் கண்டு வருந்துகிறேன். ஆகவே அதை அமைச்சர் அவர்கள் உடனடியாகச் செய்வார்கள் என்று நினைக்கிறேன். அடுத்தபடியாக மேட்டூரில் இருக்கக்கூடிய தொழிற்சாலைகளில் இருந்து இரும்புகள் "ஸ்க்ராப்" என்று வெளியே வருகிறது. சர்க்கார் கணக்கில் அதை "ஸ்க்ராப்" என்று சொல்லி வெளியே அனுப்புகிறார்கள். அதைப் பார்க்கும்போது "ஸ்க்ராப்" என்று ஐந்தும், பத்தும் அடி நீளமுள்ள இரும்புகள் வெளியே வந்து கள்ள மார்க்கெட்டில் விற்கப்படுகின்றன என்பதை நான் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு

வர விரும்புகிறேன். ஆகவே, சர்க்கார் அதில் போதிய கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் சர்க்காருக்கு எல்லாவற்றையும் நேரடியாக பார்ப்பது என்பது கஷ்டம். அதனால் சர்க்காருக்கு அதிகப்படியான நஷ்டமம் ஏற்படுகிறது என்பதையும் சர்க்காரின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். அமைச்சர் அவர்கள் அதன் பேரில் வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும் அதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அப்படிச் சிறிய இரும்பத் துண்டுகளாக இருந்தால் அவைகளை விவசாயக் கருவிகள் செய்யக் கொடுப்பாரானேயானால் அது மிகவும் உபகாரமாக இருக்கும். அதையும் சர்க்கார் சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஆகவே, "ஸ்க்ராப்" என்று வெளியே செல்வதைப் பொறுப்புள்ள அதிகாரிகள் பரிசீலனை செய்து வெளியே அனுப்பினால் உண்மையிலே சர்க்காருக்கு அந்த விதத்தில் ஆயிரக்கணக்கில் லாபம் கிடைக்குமென்று சொல்லிக்கொண்டு, இந்தச் சந்தர்ப்பத்தை அளித்த உதவி சபாநாயகர் அவர்களுக்கு எனது வணக்கத்தை தெரிவித்துக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI K. MARAPPA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் இந்த சட்டமன்றத்தில் சமர்ப்பித்திருக்கும் அறிக்கையைப் பார்க்கும்போது இந்தியாவில் உள்ள பிற மாகாணங்களைவிட நம் மாகாணம் அதிகமாக மின்சாரம் உற்பத்தி செய்து வினியோகம் செய்து வருகிறது என்பது தெரிய வருகிறது. அதுவும், குறிப்பாகக் கிராமப் பகுதிகளுக்கு அதாவது 7,000 கிராமங்களுக்கு, 70,000 கிணறுகளுக்கு மின்சாரம் சப்ளை செய்யப்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கும்போது, அது மிகவும் சந்தோஷம் அடைய வேண்டிய விஷயந்தான். ஆகவே மின்சார உற்பத்தி வினியோகத்திற்கு ஏற்ப தொழில் வளமும், உணவு உற்பத்தியும் அதிகமாகப் பெருகியிருக்கிறது என்பதற்கு இதுவே சான்றாகும். கோயமுத்தூர் ஜில்லாவில் தொழில் வளம் அதிகமாகப் பெருகியிருக்கிறது என்று சொன்னால் இந்த மின்சாரத்தின் பங்கிலேதான் அது அதிகரித்திருக்கிறது என்று நினைக்கிறேன். கோயம்புத்தூர் ஜில்லாவில் 42-க்கு அதிகப்படி மில்களும்,, தொழிற்சாலைகளும் இருக்கின்றன. ஒவ்வொன்றும் பத்து வருடங்களுக்கு முன்பு இருந்ததைவிட இப்பொழுது இரண்டு, மூன்று மடங்கு பாவலாக்கப்பட்டு மின்சார சப்ளையும் பெற்று நடந்துவருகிறது. ஆனால் கோயம்புத்தூர் ஜில்லாவைப் பொறுத்த மட்டில் விவசாயத்திற்குள்ள மின்சார சப்ளையை எடுத்துக்கொண்டால் அதிகமாகவே லைன்கள் போட்டு சப்ளை கொடுத்து வருகிறார்கள். ஆனால், லைன்களைப் போட்டு அதிகமாக சப்ளை கொடுத்திருக்கிறார்களே தவிர கரெண்ட் சப்ளை செய்வது மிகக் குறைவாகத்தான் இருக்குமென்று எண்ணுகிறேன். எனது தொகுதியாகிய அவினாசி தாலூகாவிலும் மின்சார சப்ளை ஏராளமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது ஆனால் பத்து வருடங்களுக்கு முன்பு கொடுத்திருந்த சப்ளைகள் எல்லாம் பகல், ராத்திரி சப்ளையாக இருந்தது. அதற்கு பின்பு கொடுக்கப்பட்ட சப்ளைகள் எல்லாம் ராத்திரி 10 மணியில் இருந்து காலை ஐந்து அல்லது ஆறு மணி வரைதான் கொடுத்து வந்தார்கள். இம்மாதிரி பத்து வருட காலம் வரையில்கூட அது நிவர்த்தி செய்யப்படாமல் இருந்து வந்தது. நம் மின்சார அமைச்சர் அவர்கள் கோயம்புத்தூருக்கு விஜயம் செய்தபோது எங்கள் தாலூகா விவசாயிகளின் முறையீட்டின்பேரில் அந்தத் திட்டம் ஒருவாறு நிவர்த்தி செய்யப்பட்டு "க்ரூப் ஸிஸ்டம்" ஆக மாற்றி பகல் ஆறு மணி நேரம், ராத்திரி எட்டு மணி நேரம் என்று மாற்றிக்கொடுக்க ஏற்பாடு செய்தார்கள். ஆனால் அந்த முறை இரண்டு மூன்று மாதங்களுக்கு மட்டுந்தான் சௌகரியமாக இருந்தது. பின்னர், அங்கு மிக அதிகமாக மில்களும், ஜின்னிங் பாக்டரிகளும் அந்த ஜில்லாவில் இருப்பதால் அவைகளை ஏக காலத்தில் ஓட்டத் தொடங்கும்போது விவசாயிகளுக்கு வரவேண்டிய கரெண்ட் சப்ளை மிகவும் குறைந்துவிடுகிறது. காலை நேரத்தில் ஓட்டும் மோட்டார்கள் சுமார் 10 மணி வரை டக்கு, பதினைந்து தடவை வரையில் நின்று ஓடுகிறது. இப்படி நிற்பதில் மோட்டார் பம்ப்செட்களுக்கு மிகவும் நஷ்டம் வருகிறது. அந்த தாலூகாவில் உள்ள கிணறுகள் எல்லாம் 100, 120 அடி ஆழம் வரையில் தோண்டப்பட்டிருக்கின்றன. அந்த ஆழத்தில் பம்ப்களுக்கு மேல் இருக்கும்

பைப்கள் அதிகமாக இருப்பதால் திடீரென்று நிற்கும்போது மோட்டார் பம்பை அழுத்துகிறது. அதன் காரணமாக அடிக்கடி பம்ப்களும், மோட்டார்களும், மற்ற இதர ஸ்விச், ஸ்டார்ட்டர் போன்ற கருவிகள் அடிக்கடி நஷ்டம் அடைந்து வருகிறது. அவனாசி தாலுகாவைப் பொறுத்த மட்டில், அனேகமாக உணவுப் பொருள்கள் வகையில் கம்பு, சோளம், ராகி போன்ற உணவுத் தான்யங்களும், பணப் பொருள்களான பருத்தி, புகையிலை, கரும்பு போன்ற வகைகளும் அங்கு விவசாயம் செய்யப்பட்டு வருகின்றன.

இவ்விதம் பகல் காலத்தில் நடுவதற்குச் சாயந்திரம் நான்கு மணிக்கு நடவேண்டியிருக்கிறது. அம்மாதிரி நடவு செய்வதற்குக் காலை நேரத்தில் முடிவதில்லை. காரணம் காலை நேரத்தில் மோட்டார்கள் ஓடுவதில்லை. இவ்விதம்நட்ட பின்பு 20 நாட்கள் வரையில் தண்ணீர் பாய்ச்சவேண்டும். இதுவும் காலையில் தான் தண்ணீர் பாய்ச்ச வேண்டும். வெய்யில் வந்தபின் தண்ணீர் பாய்ச்சினால் பயிர் எல்லாம் சுருங்கிப்போய்விடும். மாலை நேரத்தில் பாய்ச்சினால் மண் விழுந்து அந்த பயிரே செத்துப்போய்விடும். ஆகவே இந்தப் பயிருக்குக் காலை நேரத்தில் தண்ணீர் மிக அவசியமாக வேண்டியிருக்கிறது. ஆகையினால் இதிலும் இந்த க்ரூப் ஸிஸ்டம் ஒத்துக் கொள்வதாக இல்லை. மற்றப்படி இரவு காலத்தில் விவசாயத்திற்குத் தண்ணீர் பாய்ச்ச வேண்டும் என்றால் அது முடியாத காரியம் என்று சொல்லலாம். குறிப்பாகக் கரும்பு பயிர் சுமார் பத்து அடி உயரம்வரை வளரும். அதே மாதிரிதான் சோளம், ராகி போன்ற பயிர்களும் பத்து அடி, எட்டு அடி, ஐந்து அடி என்று வளருகின்றது. ஆகவே இரவுக் காலங்களில் இந்தப் பயிர்களின் இடையில் சென்று தண்ணீர் பாய்ச்சுவது முடியாத காரியம் என்றுதான் சொல்ல வேண்டும். இப்போது பதினைந்து மணி நேரம் என்று சொல்லுவது பகல் நேரத்தில் அதிலும் காலையில் மூன்று மணி நேரம்தான் மின்சாரம் கிடைக்கிறது. இந்தச் சமயத்தில்தான் மோட்டார் வேலை செய்ய வேண்டியிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே நீர்ப்பாசனம் இல்லாத இடங்களில் வேண்டிய அளவு மின்சாரத்தை கொடுத்துதவவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதற்கு மின்சார அமைச்சர் அவர்கள் ஆவன செய்வார்கள் என்று நம்புகிறேன். அடுத்தபடியாக கரும்பு ஆலைகள் விஷயத்திலும் பல கஷ்டங்கள் இருக்கின்றன. கரும்பு பயிருக்குச் சில குறைகள் இருந்தாலும் கூட ஆலை விஷயத்திலும் பல கஷ்டங்கள் இருக்கின்றன. பொதுவாக எங்கள் தொகுதியைப் பொறுத்தவரையிலும் அதிகமாகக் கரும்பு பயிர் செய்கிறார்கள். அதன் காரணமாகப் பலர் கரும்பு ஆலைகள் கட்டவேண்டியிருக்கிறது. இவ்விதம் கட்டப்படும் சமயத்தில் கட்டிடத்தில் கனக்ஷன் எல்லாம் கொடுத்துவிட்டு, மோட்டார் எல்லாம் வைத்துவிட்டு அதற்குப் பிற்பாடுதான் கரண்டு கிடைப்பதற்கு விண்ணப்பம் கொடுக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். இவையெல்லாம் கட்டியபின்பு அங்கு இருக்கின்ற, சூப்பர்வைஸர் பார்த்த பிற்பாடு அவருடைய ரிப்போர்ட் அஸிஸ்டண்டு இஞ்சினியருக்குப் போகிறது. பின்னால் அவர்தான் இதற்கு ஆர்டர் கொடுக்கவேண்டும். இவ்விதம் கரண்டு கிடைப்பதற்குப் பத்து அல்லது பதினைந்து நாட்கள் ஆகிவிடுகிறது. இதன் காரணமாகத் தொழிலாளர்களுக்கும் கிடைக்கவேண்டிய வேலை சரியான சமயத்தில் கிடைப்பதில்லை. அதோடு பல கஷ்டங்களும் ஏற்படுகிறது. ஆகவே ஆலைகளுக்குக் கரண்டு கொடுக்கும் விஷயத்தில் சூப்பர்வைஸர் பார்த்த உடனேயே அவரே இதற்கு வேண்டிய ஆர்டர் கொடுக்கும்படியாக ஏற்பாடு செய்யும்படி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். அதேபோல் மின்சாரத்தில் ஓட்டுகின்ற தான்யங்கள் அடிக்கிற மெஷின்களுக்கும் சூப்பர்வைஸர் பார்த்த பிற்பாடுதான் கரண்ட் கொடுக்கப்படுகிறது. சூப்பர்வைஸர் சில நாட்களில் ஊரில் இருப்பதில்லை. இதனால் தான்யங்கள் எல்லாம் அடிக்கப்படாமல் சும்மா இருக்கவேண்டியிருக்கிறது. ஆகவே இதற்கும் உடனடியாக வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு கரண்ட் சார்ஜ் கொடுப்பதிலும் சில கஷ்டங்கள் இருக்கின்றன. அவனாசியிலிருந்து வடக்கே 15, மைல்கள் வரையிலும் மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பகுதிகளிலிருந்து அவனாசிவரை

1-10 p.m.

அதாவது 15 மைல்கள் வரை வந்து பணம் கொடுக்கவேண்டியிருக்கிறது. இவ்விதம் பணம் கொடுப்பதற்கு வருகிற தினத்தன்று அங்கு இனஸ்பெக்டர் இல்லையென்றால் பணம் கொடுக்க வந்தவர் திரும்பித்தன் போகவேண்டியிருக்கிறது. இவ்விதம் அவதியுற வேண்டிய நிலை இருக்கிறது. ஆகவே ஐந்து மைல் தூரம் இருக்கிற அளவுக்கு ஒவ்வொரு இடத்திலும் பணம் வசூலிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

Sri S. RAMASAMI THEVAR : கனம் உதவி தலைவர் அவர்களே, இன்று நம் ராஜ்யத்திலே தொழில் வளம் குறைந்திருந்த போதிலும் விவசாயத்திற்கு உபயோகிப்பதற்காக மின்சார இலாகா பல கிராமங்களிலும் மின்சாரத்தை பரப்பி வருகின்றதை பார்த்து நாம் மகிழ்ச்சியடைய வேண்டியிருக்கிறது. மின்சாரம் இப்போது அனேகமாக எல்லாக் கிராமங்களிலும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. கிட்டதட்ட 7,000 கிராமங்களுக்கு மேல் மின்சாரம் உபயோகப்படுத்தப்படுகிறது என கேள்விப்படும்பொழுது நாம் அனைவரும் சந்தோஷப்படக்கூடிய அளவில் இருக்கிறோம். இருந்தாலும் இவ்வளவு தூரத்திற்கு மின்சாரம் பரவியிருந்தாலும்கூட போதிய அளவு தொழில் வளம் இல்லை. மேலும் விவசாயத்திற்கு மின்சாரத்தை அதிகமாக கொடுத்து நாட்டினுடைய உணவு உற்பத்தியை பெருக்குவதற்கு முயற்சி எடுக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களிடம் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக எமது தொகுதியில் அறந்தாங்கி தாலுகாவை எடுத்துக்கொண்டால் அதிகமாக மின்சாரத்தை விவசாயத்திற்காகப் பயன்படுத்துவதில்லை. வெளிச்சத்திற்காகமட்டும்தான் மின்சாரம் உபயோகிக்கப்பட்டு வந்தது. அங்கு 1941-ம் வருடத்தில் மின்சாரம் கொண்டு வரப்பட்டது. அது வந்து இரண்டு வருடத்திற்குள்ளாகவே அபசகுனம் மாதிரி பிளாக் அவுட் ஏற்பட்டது. அன்றைய தினத்திலிருந்து இதுவரையிலும் மின்சாரம் விஸ்தரிக்கப்படவில்லை. எங்கள் பகுதியில் அதிகமாகப் புஞ்சை தான்யங்கள் சாகுபடி செய்யப் படுகின்றன. அதிகமாக நெற்பயிர் சாகுபடி செய்யப்படுகிறது. புஞ்சை தான்யங்களாகக் கடலை, மிளகாய், சோளம் போன்றவைகள் பயிரிடப்படுகின்றன. இவைகளுக்கு எல்லாம் ஆழமான கிணறுகளிலிருந்தும் கை கொண்டு இறைத்து வருகிறார்கள். சிலர் கபிலை மூலம் தண்ணீர் இறைக்கிறார்கள். இதற்காக மாடுகள் 600 ரூபாய், 700 ரூபாய் கொடுத்து வாங்கிவிட்டு பின்னால் 200 ரூபாய்க்குக்கூட விற்கமுடியாத நிலையில் ஆகிவிடுகிறது. ஆகவே இந்த இடங்களில் எல்லாம் மின்சார சக்தியைப் பெருக்கி அங்குள்ள மக்களுடைய கஷ்டங்களைப் போக்க வழிவகை செய்ய வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இன்னும் எங்கள் பகுதியிலுள்ளவர்கள் அந்த பகுதியில் புஞ்சை நிலங்களில் தண்ணீர் இறைத்து நெல் சாகுபடி செய்கிறார்கள். இதன் மூலம் அதிக மகசூலை அடைகிறார்கள். அவர்களுக்கு மின்சாரம் கிடைத்தால் உதவிகரமாக இருக்கும். ஆகவே அவர்களுக்குப் போதிய அளவு மின்சாரம் கொடுத்துதவ வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், மேட்டூர் அணை கட்டும் காலத்தில் எங்கள் ஜில்லாவாகிய தஞ்சை ஜில்லாவுக்கு அதிகமாக அதிலுள்ள தண்ணீர் தரப்படும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தது. ஆனால் அப்போது இதிலுள்ள தண்ணீரைப் புதுக்கோட்டை பகுதிகள் குறுக்கே காரணத்தால் எங்கள் பகுதியாகிய அரந்தாங்கி போன்ற பகுதிகள் போதிய அளவு தண்ணீர் கிடைக்காமல் பாதிக்கப்பட்டு விட்டன. ஆகவே புதுக்கோட்டைக்கு ஏற்பட்ட இந்த பழியைப் புதுக்கோட்டையைச் சேர்ந்த நமது மின்சார அமைச்சர் அவர்கள், இந்த இடங்களுக்கு எல்லாம் போதிய அளவு மின்சாரம் தந்து அந்தப் பழியை தீர்த்துவிடுவார்கள் என்று நம்புகிறேன். அந்தப் பகுதிகளில் அதிமாகத் தண்ணீர் கிடைப்பதற்கு வசதியிருக்கிறது. அதாவது பக்கத்திலுள்ள ஆற்றிலிருந்து பம்பு மூலம் தண்ணீர் உயர்ந்த இடத்திற்கு இறைத்து உபயோகித்துக்கொள்ள முடியும். இதில் உயரமும் குறைவாகத்தான் இருக்கிறது. ஆகவே இந்த முறையில் அறந்தாங்கி பகுதியிலுள்ள மக்களுக்கு ஏதாவது உதவி செய்து கொடுத்தால் அங்குள்ள மக்கள் நல்ல முறையில் வாழ்வார்கள் என்பதைத்

3rd November 1958] [Sri S. Ramasami Thevar]

தெரிவித்து, இதற்கு வேண்டிய நடவடிக்கைகளைக் கண்டிப்பாக நமது மின்சார அமைச்சர் அவர்கள் செய்வார்கள் என்ற நம்பிக்கையோடு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

Sri S. LAZAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சென்னை மாகாண மின்சார போர்டார் அரசாங்கத்திற்குச் சமர்ப்பித்து, அரசாங்கத்தாரால் இப்போது இந்தச் சபைக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிற வரவு செலவுத் திட்டம் வரவேற்கத் தக்க முறையிலே அமைந்திருக்கிறது என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். இந்தத் திட்டத்தின் மீது பேசிய அங்கத்தினர்கள் எவரும் வரவு செலவுத் திட்டத்திலே ஏதோ குறை இருக்கிறது என்றோ, குறைகளைப் போக்க மாற்று யோசனை களையோ அல்லது திட்டங்களையோ யாருமே இந்தச் சபையிலே பேசவில்லை. ஆக இந்தத் திட்டத்தை வரவேற்கத் தயங்கியவர்களும், வரவேற்க வருந்தி யவர்களும் கூட எந்த விதமான புது யோசனைகளையும் சொல்ல முடி யாமல் வரவேற்கத் தக்க முறையிலே இருக்கிறது என்பதை எல்லோரும் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். 1-20 p.m.

இந்தத் திட்டத்தை நன்றாகப் பரிசீலனை செய்து பார்த்தால், எந்த அடிப்படைக் கொள்கையில் வகுக்கப்பட்டிருக்கிறது என்பது நன்றாகப் புலனாகும். ஒன்று அவர்கள் கொண்டுள்ள ஒரு கொள்கை, இந்த வரவு செலவுத் திட்டத்தைப் பார்த்தால், சாதாரண ஒரு வியாபாரம் செய்யக் கூடியவன்—பிஸினஸ் செய்யக்கூடிய ஒரு ஆசாமி—இது போன்ற ஒரு காரியத்தைச் செய்வதிலே எந்த அளவு அவன் பொறுப்பு ஏற்று எந்தவித நஷ்டமும் ஏற்படாமல் பார்த்துக்கொள்வானோ, அந்த அளவுக்கு பொறுப் புடன் இந்தத் திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பது புலனாகிறது. ஏனென்று கேட்டால், இந்த ஆண்டிலே 63 லட்சம் ரூபாய் துண்டு விழும் என்று சொல்லும் நேரத்தில், அமைச்சர் அவர்கள் இந்த நஷ்டமும் சரியான முறையில் நீக்கப்படும் என்று அவர்களுடைய உரையில் சொல்லியிருப்பது இதிலே நஷ்டம் வராமல் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்று நன்கு விளங்குகிறது.

இதே நேரத்தில் மின்சாரம் எவ்வளவு தேவையானது என்பதை உணர்ந்து அதை அதிகப்படுத்தி வருகிறது. குறிப்பாக விவசாயத்திற்கும், தொழில்களுக்கும் அதிகப்படியான சலுகை கொடுத்து அதன் காரணமாக மின்சார போர்டுக்கு நஷ்டமும்,செலவும், தொல்லையும் அதிகமாக ஏற்பட்ட போதிலும், இவைகளிலே அதிகப்படியான கருத்தைச் செலுத்தவேண்டும் என்ற முறையிலே இந்தத் திட்டம் வகுக்கப்பட்டிருப்பது உள்ளபடியே பாராட்டத் தக்க ஒரு அம்சமாகும்.

இதிலே முக்கியமாக கவனிக்க வேண்டிய ஒன்று மின்சாரம் இப்போது எந்த அளவுக்கு எந்த விலைக்கு வினியோகிக்கப்பட்டு வருகிறது, எந்த அளவுக்கு இந்த விலையை இறக்கி வினியோகிக்க வேண்டும் என்று முடிவு செய்வது மிக மிக அவசியம். ஏனென்று கேட்டால் இப்போது, மின்சாரம் என்பது ஒரு லக்ஷுரி—அதாவது தேவையில்லாத ஒரு அம்சம்—என்பது போய், இது ஒரு இகனமிக் நெஸஸிடி—பொருளாதாரத் துறையில் இன்றியமையாத ஒரு அம்சம் என்று சமுதாயத்தில் அமைந்திருக்கிற காரணத்தினால், எப்படி நிலம், நீர், ஆகாயம் அவைகளுக்கு ஒரு இடம் கொடுக்கப்பட்டிருக்கிறதோ, அதற்குச் சமத்துவமான இடத்தை மின சாரத்திற்குக் கொடுக்க வேண்டுமென்று சொன்னால், அதுமிகையாகாது. அடுத்தபடியாக விநோபா அவர்கள் எப்படி நிலம், நீர் எல்லாம் பொது என்று சொல்லுகிறார்களோ, அதைப் போல மின்சாரமும் பொதுவாக அமையவேண்டும் என்று அவர் ஒரு திட்டத்தைக் கொண்டு வந்தால் அதைப் பற்றி நாம் ஆச்சர்யப்படுவதற்கில்லை. ஏனென்றால் இன்றைக்கு நம் நாட்டிலே மட்டுமல்லாமல், உலக ரீதியிலே ஒவ்வொரு நாடும் இந்தக் கொள்கையை அனுசரித்து மின்சாரம் ஒரு பொழுது போக்கான பொருள் என்பது மாறி, மக்களுக்கு இன்றியமையாத ஒரு பொருள் என்று— அதாவது பப்ளிக் யூடிலிடி என்று ஆகியிருக்கிறது. அதற்காக இப்போது

[Sri S. Lazar] [3rd November 1958

தனி நபர் கம்பெனிகளையும் மாற்றி அமைத்து, அதையெல்லாம் ஸ்டாண்டர்டைஸ் செய்து சர்க்காரோ அல்லது போர்டோ எடுத்து, தாராளமாக குறைந்த விலையில், குடி தண்ணீர் எப்படி முனிஸிபாலிடிகளிலும் கார்ப்பொரேஷனிலும் வினியோகிக்கப்படுகிறதோ, அதே மாதிரி மின்சாரமும் வினியோகிக்கப்பட வேண்டிய ஒரு முக்கியமான அம்சமாகும்.

இப்போது இந்த வரவு செலவுத் திட்டத்திலே அதற்கான அம்சங்கள் பல இருக்கின்றன என்று பார்க்கும்போது, அப்போது தான் வரவேற்கும் முறையில் அமைந்திருக்கிறது என்று சொல்ல முற்பட்டேன். இன்னும் முக்கியமாக கவனிக்க வேண்டியது இப்போது சொன்னது போல இன்றியமையாத அம்சமாக இருக்கிற இந்த விஷயத்தை கவனிக்க மின்சார போர்டு என்று நிறுவப்பட்ட போர்டிலே, ஏற்கெனவே கனம் அங்கத்தினர்கள் சொன்னதுபோல, சேர்மன், போன்றவர்கள், தங்கள் முழு நேரத்தைச் செலவழிக்கக் கூடியவர்களாக இருந்தால் தான், 10 கோடி அல்லது 12 கோடி செலவழிக்கவேண்டுமென்று திட்டமிடப்பட்டிருக்கிறதோ, அந்தத் திட்டங்கள் சரிவர நிறைவேற்றுவதற்கு உதவியாக அமையும். இதை ஒரு தொழில் ஸ்தாபனமாகக் கருத வேண்டியிருக்கிறது. இதிலே அரசாங்க உத்தியோகஸ்தர்கள் மட்டும் இருந்தால் போதாது. இது போன்ற போர்டுகளில், எப்படி இன்றைய தினம் ஏர் கார்ப்பொரேஷனில் டாடா போன்ற நிர்வாகத் திறமை யுள்ளவர்கள், அனுபவசாலிகள் சேர்க்கப்பட்டிருக்கிறார்களோ அது போன்று தொழில் ஸ்தாபனங்களில் அனுபவம் மிகுந்த தொழிலதிபர்களையும் சேர்த்துக்கொண்டால் நல்லபடி செயலாற்ற வாய்ப்பு இருக்கும் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம்.

இப்போது மின்சாரத் தேவை அதிகப்பட்டுக் கொண்டே வருகிறது என்பதை எல்லோரும் உணர முடிகிறது. ஆகவே மின்சாரத்தை எந்த அளவுக்கு விருத்தி செய்து எந்த அளவுக்கு மக்களுக்குக் குறைவான விலையில் கொடுக்க முடியுமோ அப்படிக் கொடுக்கவேண்டியது இந்த போர்டாரின் முக்கிய பொறுப்பாக இருக்கிறது. அப்படிப் பார்க்கும்போது இப்போது சாதாரணமாக பவர் அல்லது விசை என்று சொல்லக் கூடியதை நிலக்கரியிலிருந்து உற்பத்தி செய்ய முடியும். எண்ணெயிலிருந்து உற்பத்தி செய்ய முடியும். இன்னும் நீரிலிருந்து உற்பத்தி செய்ய முடியும். இங்கிலாந்து போன்ற நாடுகளில் கடல் அலைகளிலிருந்து மின்சார சக்தியை உற்பத்தி செய்ய முடியுமா என்று பரீட்சை மேற்கொண்டு, உற்பத்தி செய்யக் கூடிய நிலையில் அமையவில்லை என்று கருதுகிறார்கள். காற்று அடிக்கும் போது அந்தக் காற்றிலிருந்து—விண்ட் மில்ஸ் எப்படி வேலை செய்கிறதோ, அதைப் போல—மின்சாரத்தை உற்பத்தி செய்யலாம் என்று நினைத்த போதிலும், நடைமுறையில் சாத்தியமாகாது என்று கைவிடப்பட்டுள்ளது. ஆகையால், ஏற்கெனவே சொன்ன மூன்று பொருள்களிலிருந்து—நிலக்கரி, எண்ணெய், நீர் முதலியவைகளிலிருந்து—மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும். இப்போது கண்டுபிடிக்கப்பட்டிருப்பது, நவீன உலகத்தில் " அடாமிக் பவர் ஸ்டேஷன் " ஏற்படுத்த முடியும் என்பதும், அவைகளிலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும் என்பதும் ஆகும். நமது நாட்டின் நிலையைப் பார்க்கும்போது, நம் மாகாணத்தைப் பொறுத்த மட்டில் நிலக்கரியை அடிப்படையாக வைத்து மின்சாரம் உற்பத்தி செய்ய முடியாத நிலையில் இருக்கிறோம். இப்போது நெய்வேலி நிலக்கரி ஓரளவுக்கு உதவுமே தவிர, நமது லட்சிய அளவுக்கு உதவும் என்று எதிர் பார்ப்பதற்கில்லை. எண்ணெயை உபயோகித்து மின்சாரத்தை உற்பத்தி செய்யும் விஷயத்தைப் பார்க்கும் போது, நமது மகாணத்தைப் பொறுத்த மட்டில் அது இனிமேல் எதிர்பார்க்க வேண்டிய ஒரு விஷயம். தற்போது அது உதவியாக இருக்காது. ஆகையால் நமக்கு இருக்கக் கூடிய ஒரே வாய்ப்பு தண்ணீரைக் கொண்டு மின்சாரம் பெறுவதாகும். அப்படிப் பார்க்கும் போது இந்தியா பூராவிலும் 40 மிலியன் கிலோ வாட் நீர் சக்தியை உபயோகப்படுத்தி மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும் என்று சொல்கிறார்கள். இப்போது இது வரையில் கட்டுப்படுத்தி இருக்கக் கூடியது மொத்தத்திலே ஏறக் குறைய $1\frac{1}{4}$ சத வீதம் தான் என்று சொல்லப்படுகிறது. இது 1947-லே எடுக்கப்பட்ட ஒரு கணக்கு. இப்போது

3rd November 1958] [Sri S. Lazar]

வேண்டுமானால் 2 அல்லது 3 சதவீதமாக இருக்கலாம். நமது மாகாணத்தைப் பற்றிப் பார்க்கும்போது என்னென்ன வாய்ப்புகள் இருந்தனவோ அவைகளெல்லாம் அநேகமாக முடிந்துவிட்டன. குந்தாவும், பெரியாறும் ஏற்கெனவே வந்து விட்டன. குந்தாவும் சீக்கிரம் முடியவிருக்கிறது. அடுத்தாற்போல இருப்பது மேட்டூரிலே விவசாயத்திற்கு உபயோகப்படக் கூடிய தண்ணீரிலிருந்து மின்சார சக்தி எடுக்க முடியுமா என்று பரிசீலனையில் இருக்கிறது. இதை விட்டு வேறு வழிகளில் விருத்தி செய்ய இப்போது வாய்ப்பில்லை. ஆகையால் நமது அரசாங்க நிபுணர்கள் அடாமிக் பவர் ஸ்டேஷன் இந்தியாவிலே அமைக்க வேண்டுமென்று சொல்லும்போது அதை நமது மாகாணத்தில் அமைக்க வேண்டும். அதை சென்னையிலே அமைத்து நமது மின்சார சக்தியை அதிகப்படுத்த வாய்ப்பைக் கொடுக்க வேண்டுமென்று போட்டிருக்கிறார்கள். இது நல்ல வரவேற்கத் தக்க அம்சம். இதைச் சென்னையிலேயே அமைக்க வேண்டுமென்ற கோஷத்தை கிளப்ப வேண்டியது மிக மிக அவசியமாக இருக்கிறது.

DEPUTY SPEAKER : The hon. Member has got one more minute.

SRI S. LAZAR : Sir, I may be allowed a few more minutes to-morrow.

DEPUTY SPEAKER : Only ten minutes have been allotted to each hon. Member. How can it be exceeded? If the hon. Member wants, I shall allow him two more minutes to-day. I think the House agrees to sit for two more minutes to enable the Hon. Member to finish his speech.

SRI M. JAGANNATHAN : Sir, the hon. Member Sri Lazar has got many things to say. He will not be able to finish his speech within two minutes.

DEPUTY SPEAKER : It is for the Chair to decide. Sri Lazar may continue.

SRI S. LAZAR : ஏற்கனவே இருக்கக்கூடிய சகல வாய்ப்புகளையும் நடைமுறையில் நாம் பயன்படுத்திக் கொண்டு விட்டதனால், இனிமேற்பட்டு இருக்கக்கூடிய வாய்ப்பான இந்த அடாமிக் பவர் ஸ்டேஷனை அமைக்க வேண்டுமென்று இப்பொழுது சொல்லிக் கொண்டு வந்தேன். 1-30 p.m.

இன்னொரு கவனிக்க வேண்டிய முக்கியமான அம்சம் என்னவென்றால், நமது மாகாணத்தைப் பொறுத்த வரையில், இப்பொழுது எண்ணெயும், நிலக்கரியும் வெகு குறைவாக இருக்கிறது என்ற நிலைமையில், இனிமேல் தொழில் அபிவிருத்தி வேண்டுமென்று சொன்னாலும், விவசாயத்தைப் பெருக்க வேண்டுமென்று சொன்னாலும், எவ்வளவுக்கெவ்வளவு மின்சார சக்தி உபயோகப்படுத்தப்படுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவுதான் செலாவணி மிஞ்சும். நமக்கு வரவேண்டிய பொருள்களும் அதிகமாகக் கிடைக்கும். அந்த முறையில் பார்க்கும்பொழுது ரெயில்வேக்களும், பஸ்களும், மற்றும் எஞ்சின்களும் கூடுமானவரையில் மின்சார சக்தியினாலோ, அடாமிக் எனெர்ஜியினாலோ இயங்குவதற்கு அடாமிக் பவர் ஸ்டேஷனை நிறுவுவது மிக மிக அவசியம். அப்படிச் செய்தால் தான் பணம் மிச்சமாகும். அதற்கான ஆராய்ச்சியை நடத்துவது மிக முக்கியமான அம்சம்.

இன்னொன்று கவனிக்க வேண்டிய விஷயம் rural electrificationஐப் பற்றியது. அமைச்சர் அவர்கள் கொடுத்த கணக்கிலிருந்து இதுவரை 6,641 இடங்களுக்கு மின்சார வசதி செய்து கொடுத்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. நமது இந்தியா தேசத்திலேயே நமது ராஜ்யம் தான் நல்ல முறையில் இத்துறையில் முன்னேறிக்கொண்டு வந்திருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் சொன்னபோதிலும், அதே நேரத்தில் அவருடைய

[Sri S. Lazar] [3rd November 1958

லட்சியத்தைப் பற்றியும் சொல்லியிருக்கிறார்கள். மற்ற நாடுகளிலே, குறிப்பாக கானடாவிலே, தலைக்கு 4,000 யூனிட் உபயோகப்படுத்தக்கூடிய அளவுக்கு முன்னேறியிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். நம்முடைய மாகாணத்திலே இப்பொழுது இருக்கும் 36 யூனிட் அளவு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட கால முடிவில் 60 யூனிட் ஆகலாமென்றும் சொல்லியிருக்கிறார்கள். அவருடைய லட்சியம் 4,000 யூனிட் எவ்வளவு சீக்கிரமாக அடைய வேண்டுமோ, அவ்வளவு சீக்கிரமாக அடைய வேண்டுமென்பது.

இன்னொரு இடத்திலே உள்ள குறிப்பை வாசித்ததாக எனக்கு ஞாபகம் வருகிறது. அதாவது, அமெரிக்கா நாட்டிலே ஆயிரம் பேர் இருக்கக்கூடிய கிராமங்களில் எல்லாம் மின்சார சக்தி வழங்கப்பட்டிருக்கிறது என்று படித்ததாக ஞாபகம். இந்த லட்சியத்தை அடையவேண்டியது மிகவும் அவசியம் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். விவசாயத் துறையைப் பொறுத்த வரையில் எக்கருக்கு 40 ரூபாய் செலவாகுமென்று குறிப்பில் கொடுத்திருக்கிறார்கள். ஒரு எக்கரை சாகுபடிக்குக் கொண்டுவந்து அறுவடை செய்யவேண்டுமென்றால், 40 ரூபாயாகிறது என்று சொல்லியிருக்கிறார்கள். நீரில்லாமல் நிலக்கரியை வைத்துக்கொண்டு தெர்மல் ஸ்டேஷனிலிருந்து மின்சார சக்தியை சப்ளை செய்தால், ஒரு ஹார்ஸ் பவருக்கு 15 ரூபாய் என்று கணக்கிட்டால் எறக்குறைய 84 ரூபாயாகிறது. 40 ரூபாயென்று வைத்திருக்கிறார்கள். ஒரு வேளை விவசாய அபிவிருத்தியை முன்னிட்டு, 44 ரூபாய் நஷ்டம் ஏற்பட்டாலும்கூட சராசரி செலவாகக் கூடிய முறையில் எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருக்கும்படி இந்த ஏற்பாட்டைச் செய்தால், உண்மையிலேயே அது நல்ல முறையாக இருக்கும்.

கடைசியாக லைசென்சுகளைப் பொறுத்த வரையில், ஒன்று லைசென்சுகள் முறை அப்படியே இருக்க வேண்டும் என்ற கொள்கை வரையறுக்கப்படவேண்டும். அல்லது அவர்களை நீக்கிவிட்டு இந்தப் போர்டாரே நடத்த வேண்டும். இப்பொழுது இருக்கிற 13 லைசென்சுகளிலே, எங்கள் பகுதியிலே இருக்கிற லைசென்சியைப் பொறுத்த வரையில் சரியானபடி காரியம் நடந்துகொண்டு வரவில்லையென்பது தெரிந்ததே. அதைப் பற்றிச் சரியான ஒரு முடிவு எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 9 a.m. tomorrow.

The House then adjourned.

## IX.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### *A. Statutory Rules, Orders and Notifications.*

149. *Notification issued with G.O. No. 3413, Revenue, dated 12th September 1958 amending form B of the Madras Plantations Agricultural Income-tax (Appeal and Revision) Rules, 1955. [Laid on the table of th House under section 61 (3) of the Madras Plantation Agricultural Income-tax Act, 1955* (Madras Act V of 1955).]

### *B. Reports and other papers.*

64. *Speech of Hon. Sri V. Ramiah, Minister for Electricity initiating the discussion on the Annual Financial Statement of the Madras Electricity Board for 1958–59.*

65. *Short review on the activities and achievements of the Highways Department during the first half-year of 1957–58 (from 1st April to 30th September 1957). (Both English and Tamil.)*

66. *Report of the Select Committee appointed to consider the amendments to the Madras Assembly Rules.*

## APPENDIX I

[Vide answer to starred Question No. 765, asked by SRI K. VINAYAKAM at the meeting of the Legislative Assembly held on 3rd November 1958 page 380 supra]

*Constitution of common selection for technical institutions during the year* 1958-59.

| *Serial number and name of the institution.* | *Whether Selection Committee has been Constituted or not—(a) of the question.* | *Name of the members—(b) of the question.* | *(c) of the question.* |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| 1 Medical College .. .. .. | Yes | 1 Sri A. Gajapathi Nayagar, B.A., B.L., M.L.C.<br>2 Dr. B. M. Sundaravadanam, M.B.B.S., L.R.C.P., (Lon.), F.R.C.S., (Eng.)<br>3 Dr. R. G. Krishnan, F.R.C.S., Dean, Madras Medical College. | On the basis of suitability. |
| 2 College of Integrated Medicines .. | Yes | 1 Dr. M. B. Perumal, I.M.S., B.SC.,<br>2 Sri T. P. Santhanakrishna Naidu, B.A.L.T., Retired Deputy Director of Public Instruction.<br>3 The Dean, College and Hospital of Integrated Medicines. | Do. |
| 3 Engineering Colleges .. .. | Yes | 1 Sri G. R. Damodaran, Principal, P. S. G. College, Coimbatore.<br>2 Sri V. P. Appathurai, Chief Engineer for Electricity Madras.<br>3 Sri A. S. Krishnaswami, Principal, Government College of Technology, Coimbatore. | On the basis of suitability.<br>.... |
| 4 Polytechnics .. .. .. | Yes | 1 The Principal of the Polytechnics concerned (Member/Secretary).<br>2 A member representing the Services.<br>3 A member representing the trade. | .... |

| Serial number and name of the institution. | Whether Selection Committee has been Constituted or not—(a) of the question. | Name of the members—(b) of the question. | (c) of the question. |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| 5 Industrial Training Schools .. | Yes | 1 Joint Director of Industries and Commerce.<br>2 Sri A. A. Rashid, M.L.A., Nariyambattu, North Arcot district.<br>3 Sri M. Jagannathan, M.L.A., Tindivanam, South Arcot district.<br>4 Sri K. T. Srinivasan, Organiser-in-chasge, Tamil Nad Congress Committee Labour Section, Madras.<br>5 Sri R. Gopal, B.A.B.L., President, Hindu Office and National Press Employees' Union, Madras.<br>6 Sri I. S. Rao, B.SC., (Engineering), A.M.I.E., Chartered Engineer, Kasimari, Industrial Corporation, Madras.<br>7 Sri V. A. Chandran, B.E., Manager, Messrs. A. S. E. A., Limited, Madras.<br>8 Principal of the Institute concerned. | On the basis of suitability. |
| 6 Teachers Colleges .. .. .. | No | Nil. | Nil |
| 7 Teachers Training School (Non-Basic Training schools). | No | Nil. | Nil |
| Basic Training schools .. .. | Yes | In the case of institutions for men, the District Education Officer, the Heads of Basic Training Schools and two or three non-official members to be nominated by Government.<br>In case of institutions for women, the Inspectress of Girls' Schools, Heads of Basic Training Schools and two or three non-officials. | .... |

The non-officials nominated by Government are as follows :—

| | | |
|---|---|---|
| Madras South .. .. .. .. | Srimathi Venkatachalapathi, wife of Sri G. Venkatachalapathi, Joint Development Commissioner. | .... |
| Chingleput district (for men) .. .. | 1 Sri R. Govindarajulu Naidu, M.P.<br>2 Sri W. T. Masilamoni Mudaliar.<br>3 Sri T. P. Elumalai. | |
| Chingleput district (for women) .. .. | 1 Sri S. R. Govindarajalu Naidu, M.P.<br>2 Dr. Mrs. Amirdaswami, L.M.P. (Registered Medical Practitioner, Kancheepuram). | .... |
| Cuddalore (for men) .. .. .. | 1 Sri G. Vageesam Pillai.<br>2 Sri R. Vinayagam Pillai, M.A., B.L., (Chidambaram).<br>3 Sri K. Parthasarathy, B.A., B.L. | .... |
| Cuddalore (for women) .. .. .. | 1 Sri G. Vageesam Pillai.<br>2 Sri P. R. Srinivasa Padayachi, Ex-President, District Board | .... |
| Villupuram (for men) .. .. .. | 1 Sri G. Vageesam Pillai.<br>2 Sri R. Vinayagam Pillai, M.A.,B.L.<br>3 Sri K. Parthasarathy, B.A.,B.L., Kallakurchi. | .... |
| Tanjore district (for men) (East) .. .. | 1 Sardar Vedarathnam Pillai.<br>2 Sri M. D. Tayagaraja Pillai, Koradacheri.<br>3 Sri C. Muthian, Sirkali. | .... |
| Tanjore district (for women) (East) .. | 1 Sardar Vedarathnam Pillai.<br>2 Sri T. Sampath, M.L.A., Tanjore East. | |
| Tanjore West (for men) .. .. .. | 1 Sri Sardar Vedarathnam Pillai.<br>2 Sri Appavu Devar, Land Lord, Ukkudai.<br>3 Sri N. S. Ramalingan, M.L.A. | .... |
| Tanjore West (for women) .. .. .. | 1 Sardar Vedarathnam Pillai.<br>2 Sri Kandaswami Moopanar. | .... |
| Madurai (for men) .. .. .. .. | 1 Sri. A. S. Subbaraj, M.L.A.<br>2 Sri M. Alagiriswami, M.L.A.<br>3 Sri N. R. Thiagarajan. | .... |
| Dindigul (for men) .. .. .. .. | 1 Sri A. S. Subbaraj, M.L.A.<br>2 Sri M. Alagiraswamy, M.L.A.<br>3 Sri N. R. Thiagarajan. | .... |

| *Serial number and name of the institution.* | *Whether Selection Committee has been constituted or not—(a) of the question.* | *Name of the members—(b) of the question.* | *(c) of the question.* |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| **Dindigul** (for women) .. .. | .. | 1 Sri A. S. Subbaraj.<br>2 Sri P. V. Doss, Advocate, Dindigul.<br>3 Sri K, Pandiaraj, M.L.A., Ramanathapuram. | .... |
| Ramanathapuram (for men) .. | .. | 1 Sri S. Ramaswami Naidu, M.L.A.<br>2 Sri R. Krishnaswami Naidu, Srivilliputtur<br>3 Sri V. M. S. Veluswami Nadar, Peraiyur | .... |
| Virudhunagar (for men) .. .. | .. | 1 Sri S. Ramaswami Naidu, M.L.A.<br>2 Sri R. Krishnaswami Naidu Srivilliputtur.<br>3 Sri V. M. S. Veluswami Nadar, Peraiyur. | .... |
| Virudhunagar (for women) .. .. | .. | 1 Sri S. Ramaswami Naidu, M.L.A.<br>2 Srimathi. Lakshmikanthan, Correspondent, Sourashtra Girls' High School, Madurai.<br>3 Pushpa Natarajan. | .... |
| Tirunelveli South (for men).. .. | .. | 1 Sri K. Ramasubbu, M.L.A.<br>2 Sri Ganapathi Nadar.<br>3 Sri Namachivaya Mudaliar. | .... |
| Tirunelveli Central (for men) .. | .. | 1 Sri K. Ramasubbu, M.L.A.<br>2 Sri P. Selvaraj Reddiar.<br>3 Sri I. K. Subramania Pillai. | .... |
| Tirunelveli Central (for women) .. | .. | 1 Sri K. Ramasubbu, M.L.A.<br>2 Sri M. G. Sankar, Nanguneri. | .... |
| Tirunelveli North (for men) .. | .. | 1 Sri K. Ramasubbu, M.L.A.<br>2 Sri Ganapathi Nadar.<br>3 Sri Namachivaya Mudaliar. | .... |

| | | |
|---|---|---|
| Vellore (for men) .. .. .. .. | 1 Sri P. Ramachandran, M.L.A.<br>2 Sri T. Manavalan, Gudiyattam.<br>3 Sri P. S. Thirugnanasambanda Mudaliar. | .... |
| Tiruvannamalai (for men) .. .. .. | 1 Sri S. Ramachandran, M.L.A.<br>2 Sri T. Manavalan, Guidyattam<br>3 Sri P. S. Thirugnanasambanda Mudaliar. | .... |
| Salem (for men) .. .. .. | 1 Sri N. S. Sundarajan, M.L.A., Salem.<br>2 Sri Sri Ardhanareeswara Gounder.<br>3 Sri Nagaraja Manigar. | .... |
| Dharmapuri (for men) .. .. .. | 1 Sri N.S. Sundararajan, M.L.A., Salem.<br>2 Sri Ardhanareeswara Gounder.<br>3 Sri Nagaraja Manigar. | .... |
| Tiruchirappalli (for men) .. .. .. | 1 Sri T. M. Nallaswami, M.L.A.<br>2 Sri R. Krishnaswami Reddiar. | .... |
| Pudukottai (for men) .. .. .. | 1 Sri T. M. Nallaswami, M.L.A.<br>2 Sri Manicka Sundara Mudaliar.<br>3 Sri K. Dharmaraja Pillai. | .... |
| Pudukottai (for women) .. .. .. | 1 Sri T. M. Nallaswami, M.L.A.<br>2 Sri K. R. Viswanathan | .... |
| Coimbatore (for women) .. .. .. | 1 Sri V. K. Palaniswami Gounder, M.L.C., Coimbatore.<br>2 Mrs. Savithri Shanmugham. | .... |
| Erode (for men) .. .. .. .. | 1 Sri V. K. Palaniswami Gounder, M.L.C., Coimbatore.<br>2 Sri A. Senapathi Gounder, M.L.A. | .... |
| Erode (for women) .. .. .. .. | 1 Sri V. K. Palaniswami Gounder, M.L.C., Coimbatore.<br>2 Mrs. Savithri Shanmugham. | .... |
| The Nilgiris .. .. .. .. | 1 Sri P. K. Muthavelappa Gounder, Chairman, Municipal Council, Gobichettipalayam.<br>2 Sri B. K. Linga Gounder. | .... |
| Kanyakumari (for men) .. .. .. | Sri R. Ponnappan, Advocate, Nagercoil. | .... |
| Government Arts College, Madras. .. | 1 Dr. Muhammad Usman, M.L.C. (*Chairman*).<br>2 Sri K. Kothandapani Pillai. | .... |

